



# செந்தமிழ்ப் பொழில்

சத்தியசாட்சி









# செந்தமிழ்ப் பொழில்

## ஒன்பதாம் வகுப்பு



ஆசிரியர்
பொன்னு. ஆ. சத்தியசாட்சி, M.A., B.O.L.,
'மணி மலர்' பதிப்பாசிரியர்,
முன்னாள் தமிழாசிரியர்,
ஆண்டர்சன் உயர்நிலைப் பள்ளி, காஞ்சீபுரம்.







கிறிஸ்தவ இலக்கியச் சங்கம்

# முகவுரை

இத் தமிழ்ப் பாட நூல் வரிசையுள் இஃது ஒன்பதாம் வகுப்புக்குரியது. மாணவர்க் கேற்ற கவிதைகளையும் கட்டுரை களையும் தாங்கி வரும் இந்நூல் அரசியலார் விடுத்துள்ள பாடத் திட்டத்தின்படி அமைக்கப்பட்டது. கவிதைகள் அரசினர் திட்டத்திற்கு அதிகமாகவே சேர்க்கப்பட்டிருத்தலின் ஆசிரியர் வேண்டுமளவுக்குப் பாடப் பகுதிகளைத் தேர்ந்தெடுக்க முடியும்.

பொழில் என்பது சோலை. ஆங்கு எழிலுண்டு; இனிமை யுண்டு; பசுமை யுமிழும் மரங்களுண்டு; வண்ணம் தெறிக்கும் மலர்களுண்டு. அங்ஙனமே இந்நூலுள் மாணவர் கருத்துக்கு எழிலும் இனிமையும் வழங்கும் கட்டுரைகளும் கவிதைகளும் நிரம்பிக் கிடக்கின்றன. பழந்தமிழ் இலக்கிய இன்பத்திற்கு இந்நூல் மாணவர்களை ஈர்த்துச் செல்லும் என்பது ஒருதலை.

வேண்டுமளவுக்கு, விளக்கமாக்க் குறிப்புரைகளும் வினாக் களும் கட்டுரைப் பயிற்சிகளும் சேர்க்கப்பட்டுள்ளன. இவை யன்றி உரைநடைப் பகுதிக் கென நூலின் இறுதியில் அருஞ்சொல் அகராதியும் அமைக்கப்பட்டுள்ளது. மாணவர் களின் சொந்த முயற்சிக்கு ஆக்கம் தரும் எல்லா வழிகளும் இந்நூலின்கண் திறந்துவிடப்பட்டுள்ளன.

இந்நூலுள் சேர்த்துக்கொள்ளக் கட்டுரைகளும் கவிதை களும் வழங்கிய பெருமக்கட்கு என் உளமார்ந்த நன்றி என் றென்றும் உரியதாகும். ஆசிரியர்கள் உரிமையாளர்கள் பெயர் களைத் தகுந்த இடங்களில் காட்டியுள்ளேன்.

இந்நூலை அச்சிட்டு வெளியிடும் பணியினை ஏற்ற பழம் பெரும் பண்ணையாகிய சென்னைக் கிறிஸ்தவ இலக்கியச் சங்கத் தார்க்கு யான் பெரிதும் கடப்பாடுடையேன்.

ஆசிரியர்களும் அரசியலாரும் இந்த நல்ல முயற்சியைப் பாராட்டி ஆதரிப்பார்களாக.

போ. ஆ. ச,

## தேசீய கீதம்

ஜன கண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உத்சல ஜலதி தரங்கா
தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாகே
காஹே தவஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே ஜயஹே ஜயஹே
ஜய ஜய ஜய ஜயஹே!

---

## தேசீய கீதம் : பொருள்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்;
நின்திருநாமம், பஞ்சாப்பையும் சிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது;
அது விந்திய இமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது;
இந்தியக்கடல் அலைகளால் செழிக்கின்றது;
அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப் பாடுகின்றன;

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி, வெற்றி, வெற்றி!

# உள்ளுறை

## செய்யுள்

## உரைநடைப் பகுதி

## அரசியலார் அமைத்துள்ள திட்டம்

### செய்யுள்

### (800 வரிகள்)

1. வாழ்த்துப் பகுதி: கடவுள், மொழி, நாடு—16 வரிகள்.
2. அறவுரைப் பகுதி: திருக்குறள் (அரசினரால் தேர்ந்தெடுக்கப் பட்டவை)—200 வரிகள்.
3. தொடர்நிலைச் செய்யுள்:
    1. பெருங்கதை
    2. வில்லி பாரதம்
    3. பெரிய புராணம்
    4. பாஞ்சாலி சபதம்
    5. பில்கணீயம்—போன்றவை

    } 450 வரிகள்
4. பல்சுவை: வருணனை, சீட்டுக் கவி, சிலேடை, சிறுபிரபந்தம், வழிபாட்டுப் பாடல்கள் போன்றவை } 84 வரிகள்

### உரைநடை

### (150 பக்கங்கள்)*

இலக்கணப் பிழையற்ற, தெளிவான, கூடியவரை பிற மொழி கலப்பற்ற, எளிய தமிழ் நடையில் எழுதப்பட்டவற்றின் தொகுப்பாக இருத்தல் வேண்டும்.

---

* 'கிரௌன்' அளவில் 150 பக்கங்கள். இந்நூல் பெரிய எழுத்துக்களில் 'டெம்மி' அளவினது. எனவே, 120 பக்கங்கள் கொள்ளுதல் சாலும்.

செய்யுள்

# வாழ்த்துப் பகுதி

## 1. கடவுள் வாழ்த்து

[இப்பாடலை இயற்றிய திருவாரூர் திரு. வி. கலியாண சுந்தரனா **வர்கள்** தமிழ் மொழிக்கும் தமிழ் நாட்டுக்கும் தமிழ்ச் சமயத்துக்கும் பெருந் தொண்டாற்றியவர்கள். இலக்கியத் துறையிலும் சமூகத் துறையிலும் பல வகையான தொண்டாற்றிவிட்டுச் சில ஆண்டுகளுக்கு முன்புதான் இவ்வுலக வாழ்வு முடியப் பெற்றார் இவர். இப்பாடல் பொதுமை **வேட்டல்** என்னும் நூலிலிருந்து கொள்ளப்பட்டது.]

மெய்ப்பொருளே உன்னடியில் மேவுமனம் வேண்டும்
மெய்யோம்பி நிறைபேணல் மீக்கூரல் வேண்டும்
எப்பொருளும் உன்னுடைமை என்னுமெண்ணம்
வேண்டும்
எப்பொழுதும் இயற்கையிலே இசையுமுளம் வேண்டும்
தப்புவிளை வினைபுரியாத் தவம்பெருகல் வேண்டும்
தவறிழைத்தால் கசிந்துருகும் தன்மைமிகல் வேண்டும்
இப்புவியில் இகல்பகைகள் இயங்காமை வேண்டும்
எவ்வுயிரும் பொதுவெனக்கொள் இயல்வேண்டும்
அருளே!

## 2. தமிழ் மொழி வாழ்த்து

[இப்பாடலைப் பாடிய பெரியார் யோகி சுத்தானந்த பாரதியார், சடாதரனார் என்பார்க்கும் காமாட்சியம்மையார் என்பார்க்கும் புதல்வராய்ப் பிறந்து, இப்போது வடலூரிலே வாழ்ந்து வருகிறார். தமிழும் ஆங்கிலமும் கைவந்த புலவர் இவர். இவர் பாடிய நூல்களுள் பாரத சக்தி என்ற நூல் பலராலும் போற்றப்படும் பெருமை வாய்ந்ததாகும்.]

இன்னிசை அணிந்த பொன்னிளஞ் செல்வி
இனிமையே தன்பெய ராளுள்;
மன்னுல கெல்லாம் வணங்கிடத் தக்க
பொதுமறை அருளிய வாணி;

பன்மொழிக் குயர்ந்த தொன்மொழி யரசி;
பரமனின் வரம்பெற்ற புதல்வி!
தன்னிகர் அற்ற தமிழெனும் அமுதத்
தாய்மலர் அடிபணிந் துய்வாம்.

# 3. நாட்டு வாழ்த்து

[தமிழ்க் கவிதை வரலாற்றில் ஒரு புது நெறி சென்றவர் இப்பாடலின் ஆசிரியர் திரு. சி. சுப்பிரமணிய பாரதியார். இவரது பாடல்களில் எளிமை, இனிமை, நாட்டுப் பற்று, சுதந்தர உணர்ச்சி ஆகிய அனைத்தும் நிரம்பிக் கிடக்கின்றன. நாடு அடிமைத் தளையில் இருந்த காலத்தில் இவர் தம் பாடல்கள் மக்களைத் தட்டி எழுப்பின. கண்ணன் பாட்டு, குயில், பாஞ்சாலி சபதம் எனப் பல நூல்களை இவர் இயற்றியுள்ளார். இவரது காலம்; 1882–1921.]

கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின் மணம்
பாரெங்கும் வீசுந் தமிழ்நாடு

வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென் றோர்மணி
யாரம் படைத்த தமிழ்நாடு.

## குறிப்புரைகளும் வினாக்களும்

1. மெய்ப்பொருள் – உண்மையாய் என்றென்றும் இருக்கின்ற கடவுள். நிறை – நீதி. மீக்கூரல் – மிகுதியாதல்.

இகல் பகைகள்: உம்மைத் தொகை.

2. 'தமிழ்' என்ற சொல்லிற்கு 'இனிமை' என்பதொரு பொருள்.

பொதுமறை: திருக்குறள்.

தன் + நிகர் = தன்னிகர்.

### வினாக்கள்

1. திரு. வி. க. அவர்கள் இறைவனிடம் வேண்டுவன யாவை?

2. தமிழெனுந் தாயை யோகி சுத்தானந்தர் எவ்வாறெல்லாம் புகழ்கின்றார்?

3. தமிழ்நாடு உலகிற்கு வழங்கிய சிறப்புகள் யாவை?

# அறவுரைப் பகுதி

## 1. திருக்குறள்

அழகமைந்த அல்லது பெருமை வாய்ந்த குறள் வெண்பாக்களாலான நூல் திருக்குறள் எனப்பட்டது. திருக்குறள்: அடையடுத்த கருவியாகு பெயர்.

தமிழிலுள்ள அறநூல்களுள் இது தலையாயது. 'வள்ளுவன்தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ்கொண்ட தமிழ்நாடு' என்னும் பாரதியாரின் பாட்டு இந்நூல் ஓர் உலக நூல் என்பதனை வலியுறுத்தும். ஆலும் வேலும் பல்லுக் குறுதி, நாலுமிரண்டும் சொல்லுக்குறுதி,' என்ற நன்மொழியில் 'இரண்டு' எனப்பட்டது திருக்குறளாகும். திருவள்ளுவர் காலத்தில் வாழ்ந்த புலவருள்ளும் அவருக்குப் பின் வந்த புலவருள்ளும் திருக்குறளை எடுத்து ஆட்சி செய்யாத புலவரே இலர் என்று கூறலாம். திருவள்ளுவ மாலை என்பது திருக்குறளின் சிறப்பினைப் பாடுகின்றதொரு தனி நூலாகும். இந்நூல் மேலை நாட்டு மொழிகள் பலவற்றிலும் மொழி பெயர்க்கப்பட்டு வழங்கி வருகிறது.

அறத்துப் பால், பொருட் பால், காமத்துப் பால் என மூன்று பிரிவுகளை யுடையதாதல் பற்றி இந்நூல் முப்பால் எனவும் வழங்கப்படுகிறது. பொய்யா மொழி, வாயுறை வாழ்த்து, தெய்வ நூல் எனப் பல சிறப்புப் பெயர்கள் இதற்கு வழங்கப்படுகின்றன. அதிகாரம் ஒன்றற்குப் பத்துக் குறட்பாக்க ளாக 133 அதிகாரங்களில் 1330 பாக்களைக் கொண்டது இந்நூல்.

இந்நூலை இயற்றியவரான திருவள்ளுவரது பெற்றோர், இயற் பெயர், காலம் முதலியன இன்ன எனத் தெரிந்தில. கடவுள் வாழ்த்துப் பாடல் களால் இவர் அருக சமயத்தவரோ என எண்ணற்கு இடமிருக்கிறது. இவர் கடைச் சங்க காலத்தில் மதுரையில் வாழ்ந்திருந்தாராதல் வேண்டும்.

இங்கு வந்துள்ள பாக்களுள் முதல் ஐம்பது பாக்கள் அறத்துப் பாலுக் குரியன; பிற, பொருட் பாலுக்குரியன.]

### கடவுள் வாழ்த்து

1. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்.

### வான் சிறப்பு

2. கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉம் எல்லா மழை.

## நீத்தார் பெருமை

3. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.

4. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

## அறன் வலியுறுத்தல்

5. மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற.

6. அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை.

7. வீழ்நாள் படாமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

## இல்வாழ்க்கை

8. அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

9. அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று.

## வாழக்கைத் துணை நலம்

10. மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்.

11. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

## அன்புடைமை

12. என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம்.

13. புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு.

## விருந்தோம்பல்

14. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

15. வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம்.

இனியவை கூறல்

16. துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.

செய்ந்நன்றி யறிதல்

17. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்.

18. கொன்றன்ன வின்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்.

நடுவு நிலைமை

19. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்.

அடக்க முடைமை

20. ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து.

21. யாகாவா ராயினு நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

ஒழுக்கமுடைமை

22. ஒழுக்க முடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

23. ஒழுக்கத்தி னெல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து.

பிறனில் விழையாமை

24. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்(கு)
அறனொன்றோ வான்ற வொழுக்கு.

பொறையுடைமை

25. இம்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

அழுக்காறுமை

26. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்.

27. அவ்விய நெஞ்சத்தா னாக்கமும் செவ்வியான்
கேடு நினைக்கப் படும்.

புறங்கூறுமை

28. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்.

பயனில சொல்லாமை

29. பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்.

தீவினை யச்சம்

30. தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்.

ஒப்புரவறிதல்

31. ஒப்புரவி னால்வருங் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து.

ஈகை

32. ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் (தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

33. இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்.

34. சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை.

புகழ்

35. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன்?

இன்னா செய்யாமை

36. தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்?

அருளுடைமை

37. அல்லல் அருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி.

தவம்

38. இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

கூடாவொழுக்கம்

39. நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

கள்ளாமை

40. உள்ளத்தால் உள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கொள்வே மெனல்.

வாய்மை

41. மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை.

42. யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை
யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற.

வெகுளாமை

43. சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்
ஏமப் புணையைச் சுடும். (னும்

44. இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்,
புணரின் வெகுளாமை நன்று.

இன்னா செய்யாமை

45. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

நிலையாமை

46. அற்கா வியல்பிற்றுச் செல்வம்; அதுபெற்றால்
அற்குப வாங்கே செயல்.

47. உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

துறவு

48. யாதனின் யாதனி னீங்கியா னோதல்
அதனி னதனி னிலன்.

49. பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

மெய்யுணர்தல்

50. எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

இறை மாட்சி

51. முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

கல்வி

52. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

கல்லாமை

53. கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்.

கேள்வி

54. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்.

55. கற்றில னாயினுங் கேட்க அஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை.

56. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்?

அறிவுடைமை

57. அறிவற்றங் காக்குங் கருவி; செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா வரண்.

குற்றங் கடிதல்

58. பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று.

சிற்றினஞ் சேராமை

59. மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்.

60. மனநல மன்னுயிர்க் காக்கம்; இனநலம்
எல்லாப் புகழுந் தரும்.

தெரிந்து செயல்வகை

61. செய்தக்க வல்ல செயக்கெடும்; செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

வலியறிதல்

62. பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.

63. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும்.

காலமறிதல்

64. ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

இடனறிதல்

65. கடலோடா கால்வ னெடுந்தேர்; கடலோடு
நாவாயு மோடா நிலத்து.

தெரிந்து தெளிதல்

66. காதன்மை கந்தா, அறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்.

67. தேரான் தெளிவும் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும்.

தெரிந்து வினையாடல்

68. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல்.

செங்கோன்மை

69. வானோக்கி வாழு முலகெல்லாம்; மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

70. இறைகாக்கும் வையக மெல்லாம்; அவனை
முறைகாக்கு முட்டாச் செயின்.

கொடுங்கோன்மை

71. வேலோடு நின்றான் இடுவென் றதுபோலுங்
கோலோடு நின்றா னிரவு.

வெருவந்த செய்யாமை

72. கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்.

கண்ணோட்டம்

73. கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு.

ஒற்றாடல்

74. வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று.

ஊக்கமுடைமை

75. ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்கம்
ஒருவந்தங் கைத்துடை யார்.

ஆள்வினையுடைமை

76. பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி.

இடுக்கணழியாமை

77. இடும்பைக் கிடும்பை படுப்பர் இடும்பைக்
கிடும்பை படாஅ தவர்.

78. இன்பம் விழையான் இடும்பை யியல்பென்பான்
துன்ப முறுதல் இலன்.

சொல்வன்மை

79. ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

வினைத் தூய்மை

80. பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை.

வினைத் திட்பம்

81. துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை.

82. எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு.

அவையஞ்சாமை

83. பகையகத்துச் சாவார் எளியர்; அரியர்
அவையகத் தஞ்சா தவர்.

நாடு

84. பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.

படைச்செருக்கு

85. பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு.

86. புரந்தார்கண் ணீர்மல்கச் சாகற்பின் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து.

நட்பு

87. புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்.

நட்பாராய்தல்

88. அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

கூடா நட்பு

89. சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க, வில்வணக்கந்
தீங்கு குறித்தமை யான்.

புல்லறிவாண்மை

90. ஏவவுஞ் செய்கலான் றான்தேறான் அவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.

உட்பகை

91. வாள்போல் பகைவரை யஞ்சற்க; அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

பெரியாரைப் பிழையாமை

92. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் (என்னும்
தகைமாண்ட தக்கார் செறின்.

வரைவின் மகளிர்

93. இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு

கள்ளுண்ணாமை

94. துஞ்சினார் செத்தாரின் வேறல்லர்; எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

மானம்

95. பெருக்கத்து வேண்டும் பணிதல்; சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு.

பெருமை

96. அற்ற மறைக்கும் பெருமை; சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

சான்றாண்மை

97. கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

பண்புடைமை

98. அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வார்
மக்கட்பண் பில்லா தவர்.

குடிசெயல்வகை

99. நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல்.

உழவு

100. உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை.

# 2. சிறுபஞ்சமூலம்

கண்டங்கத்திரி வேர், சிறுவழு துணை வேர், சிறுமல்லி வேர், நெருஞ்சி வேர், பெருமல்லி வேர் ஆகிய பஞ்ச மூலங்களாலாகிய 'சிறுபஞ்ச மூலம்' என்ற மருந்து உடலுக்குற்ற நோயைத் தீர்க்க வல்லது. அதுபோல, தன் ஒவ்வொரு பாட்டிலும் ஐயைந்து உறுதிப் பொருள்களைக் கொண்டு மனிதனின் உயிருக்கு உற்ற நோயைத் தீர்க்க வல்லதாகிய நூல் சிறுபஞ்ச மூலம் எனப்பட்டது. இஃது உவமையாகு பெயர்.

இந்நூல் பதினெண் கீழ்க்கணக்குள் ஒன்றாகும். இதன் ஆசிரியர் காரியாசான் என்பவராவர். இவரது சமயம் சைனம். பாயிரச் செய்யுள் உட்பட 100 செய்யுட்களைக் கொண்டது இந்நூல்.

பொருளும் அருளும்

1. பொருளுடையான் கண்ணதே போகம்; அறனும்
அருளுடையான் கண்ணதே யாகும்;—
அருளுடையான்
செய்யான் பழிபாவம் சேரான் புறமொழியும்
உய்யான் பிறர்செவிக் குய்த்து.

நகைக்கப்படுவது

2. நாணிலான் சால்பும் நடையிலான் நன்னேன்பும்
ஊணிலான் செய்யும் உதாரதையும்-ஏணிலான்
சேவகமுஞ் செந்தமிழ் தேற்ருன் கவிசெயலும்
நாவகமே நாடின் நகை.

உலக வழக்கு

3. பெருங்குணத்தார்ச் சேர்மின், பிறன்பொருள்
வெளவன்மின்,
கருங்குணத்தார் கேண்மை கழிமின்,—
ஒருங்குணர்ந்து
தீச்சொல்லே காமின்; வருங்காலன் திண்ணிதே
வாய்ச்சொல்லே யன்று, வழக்கு.

வசை முதலியன ஆதல்

4. வைததனுன் ஆகும் வசைவணக்க நன்ருகச்
செய்ததனுன் ஆகும் செழுங்குலமுற்—செய்த
பொருளினுன் ஆகுமாம் போகம் நெகிழ்ந்த
அருளினுன் ஆகும் அறம்.

வனப்பு

5. மயிர்வனப்பும் கண்கவரு மார்பின் வனப்பும்
உகிர்வனப்பும் காதின் வனப்பும்—செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல; நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு.

# 3. திரிகடுகம்

சுக்கு, மிளகு, திப்பிலி என்பன சேர்ந்த திரிகடுகம் என்ற மருந்து உடலுக்கு நன்மை பயப்பதுபோல, ஒவ்வொரு பாட்டிற்கு மும்மூன்று உறுதிப் பொருள்களைக் கொண்ட இந்நூல் உயிருக்கு நன்மை பயக்கும் சிறப்புப் பற்றித் திரிகடுகம் எனப் பெயரிடப்பட்டது. திரிகடுகம்: உவமையாகு பெயர். காப்புச் செய்யுள் உட்பட இதன்கண் 101 செய்யுட்கள் உள்ளன. இதுவும் பதினெண் கீழ்க்கணக்கு ஆகிய நூல்களுள் ஒன்றாகும்.

இந்நூலைப் பாடியவர் நல்லாதனார் என்னும் புலவராவர். இவர் கடைச் சங்க காலத்தில் வாழ்ந்திருந்தவர். இவரது சமயம் வைணவம்.

சாவாவுடம்பினர்

1. மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும் மாசில்சீர்ப்
பெண்ணினுள் கற்புடையாள் பெற்றானும்—
உண்ணுநீர்
கூவல் குறைவின்றித் தொட்டானும் இம்மூவர்
சாவா வுடம்பெய்தி னார்.

தூயர் தொழில்

2. உண்பொழுது நீராடி யுண்டலும் என்பெறினும்
பால்பற்றிச் சொல்லா விடுதலும்—தோல்வற்றிச்
சாயினுஞ் சான்றாண்மை குன்றாமை யிம்மூன்றும்
தூஉய மென்பார் தொழில்.

உமிக்குற்றி வருந்துவார்

3. வெல்வது வேண்டி வெகுண்டுரைக்கும்
நோன்பிலியும்
இல்லது காமுற் றிருப்பானும்—கல்வி
செவிக்குற்றம் பார்த்திருப் பானுமிம் மூவர்
உமிக் குத்திக் கைவருந்து வார்.

நிலைத்த புகழினர்

4. தன்னச்சிச் சென்றாரை யெள்ளா வொருவனும்
மன்னிய செல்வத்துப் பொச்சாப்பு நீத்தானும்
என்றும் அழுக்கா றிகந்தானும் இம்மூவர்
நின்ற புகழுடை யார்.

# 4. ஏலாதி

'ஏலாதி' என்ற சொல் 'ஏலம் முதலியன' என்று பொருள்படும். ஏலம் முதலியன வென்றது ஏலம், இலவங்கம், சுக்கு, மிளகு, திப்பிலி ஆகியவற்றை. இவைகள் உடலுக்கு நன்மை பயத்தலைப்போல உயிருக்கு நன்மை பயக்கும் செய்திகளைக் கொண்ட பாக்களையுடைய நூல் ஏலாதி எனப்பட்டது. இந்நூல் பதினெண் கீழ்க்கணக்குள் ஒன்று. இதன் ஆசிரியர் கிணிமேதையார் என்பவராவர். இவரது காலம் கி.பி. 6 அல்லது 7ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.

நல்லன செய்க

1. இளமை கழியும்; பிணிமூப் பியையும்;
வளமை வலியிவை வாடும்;—உளநாளால்
பாடே புரியாது, பால்போலும் சொல்லினாய்,
வீடே புரிதல் விதி.

அன்புகோள்வார் பண்புகள்

2. சாதல் பொருள்கொடுத்தல் இன்சொல் புணர்வுவத்தல்
நோதல் பிரிவில் கவறலே—ஓதலின்
அன்புடையார்க் குள்ளன ஆறு குணமாக
மென்புடையார் வைத்தார் விரித்து.

உத்தமன்

3. களியான்கள் உண்ணான் களிப்பாரைக் காணான்
ஒளியான் விருந்திற் குலேயான்—எளியாரை
என்ளான்ஈத் துண்பானேல் ஏதமில் மண்ஆண்டு
கொள்வான் குடிவாழ்வான் கூர்ந்து.

மறுமைப்பேறு பேறத் தக்கவர்

4. தாயிழந்த பிள்ளை தலையிழந்த பெண்டாட்டி
வாயிழந்த வாழ்விஞர் வாணிகம்—போயிழந்தார்
கைத்தூண் பொருளிழந்தார் கண்ணி லவர்க்கீந்தார்
வைத்து வழங்கிவாழ் வார்.

# 5. நாலடியார்

'நாலடி' என்பது வெண்பா. அது கருவியாகு பெயராக நூலைக் குறித்தது. 'ஆர்' என்பது நூலின் பெருமை யுணர்த்தும் ஒரு விகுதி. இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. இதற்கு 'நாலடி நானூறு' 'வேளாண் வேதம்' என வேறு பெயர்களும் உண்டு. இதனைப் போப் பையரவர்கள் ஆங்கிலத்தில் பெயர்த்துள்ளார்கள்.

கடைச் சங்க காலத்தில் வாழ்ந்த சமண முனிவர் பலர் இந்நூற் பாக்களை இயற்றினர். பதுமனூர் என்பார் இந்நூலைத் தொகுத்தார்.

### கல்வி

1. இம்மை பயக்குமால்; ஈயக் குறைவின்றால்;
தம்மை விளக்குமால்; தாம்உளராக் கேடின்றால்;
எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து.

2. வைப்புழிக் கோட்படா; வாய்த்தீயிற் கேடில்லை;
மிக்க சிறப்பின் அரசர் செறின்வவ்வார்;
எச்சம் எனவொருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற.

### ஈயாமை

3. உண்ணான் ஒளிநிறான் ஓங்குபுகழ் செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல், அஆ!
இழந்தான்என் றெண்ணப் படும்.

4. உடாஅதும் உண்ணாதும் தம்முடம்பு செற்றுங்
கெடாஅத நல்லறமுஞ் செய்யார்—கொடாஅது
வைத்தீட்டி னாரிழப்பர்; வான்தோய் மலைநாட,
உய்த்தீட்டுந் தேனீக் கரி.

## குறிப்புரைகளும் வினாக்களும்

### 1. திருக்குறள்

1. பிறவி, கடலாக உருவகிக்கப்பட்டது. ஆகவே, இறைவன் அடி கடலை நீந்துதற் குதவும் புணை என்க. இஃது ஏக தேச உருவகம். 'நீந்தார் நீந்துவர்'—முரண்தொடை.

2. (வான் சிறப்பு – மழையினது சிறப்பு.) சார்வாய் – துணையாய். மற்று: வினைமாற்று. கெடுப்பதூஉம், எடுப்பதூஉம்: இன்னிசை யளபெடை.

3. (நீத்தார் – துறந்தார்) உரன் – திண்மை, மனவுறுதி; தோட்டி – அங்குசம். ஐந்து – ஐந்து பொறிகள்; பொறிகளாகிய ஐந்து யானைகளையும் என்க. வான் – யாவற்றினும் மிக்கது. வைப்பு – வீட்டு நிலம். இங்குப் பயின்றது ஏகதேச உருவகம். காப்பான்: வினையாலணையும் பெயர்.

4. நிறைமொழி மாந்தர் – துறந்தார். 'நிறைமொழி என்பது அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தேவிடும் மொழி.' மறைமொழி – அவர்கள் கூறிய மந்திரங்கள்.

5. (அறன் வலியுறுத்தல்: அறம் வலிமையுடைய தென்பதைக் கூறுதல்) ஆதல் – ஆகுக; வியங்கோள் வினைமுற்று. ஆகுல நீர – ஆடம்பரத் தன்மையுடையன. நீர: பலவின் பால் வினைமுற்று.

6. அன்று அறிவாம் – (நாம் இப்பொழுது இளையம் ஆதலின்) இறக்கும் காலத்தில் செய்துகொள்ளுவோம். பொன்றும் கால் = (உயிர் உடம்பினின்று) போகும் காலத்து. மற்று: அசைநிலை. மற்றொரு பிறப்பில் எடுக்கும் உடம்பிற்கும் சென்று உதவுதலின் அறத்தினை 'அழியாத துணை' என்றார்.

7. வீழ்நாள் – (செய்யாமல்) கழியும் நாள்; வாழ்நாள் வழி – (உடம்போடு கூடி) வாழும் நாள் வரும் வழி; அஃதாவது பிறப்பு. நாள் தோறும் அறம் செய்வார்க்குப் பிறப்பு ஒழியும் என்பதாம். வீழ்நாள், வாழ்நாள்: வினைத்தொகைகள்; படாஅமை: எதிர் மறை வினையெச்சம்; செய்யுளிசை நிறைக்க வந்த அளபெடை.

8. அன்பும் – (தன் மனைவியிடத்துச் செய்யப்படுகின்ற) அன்பினையும்; அறனும் – (தான் பெற்றுள்ள பொருளைப் பிறர்க்குப் பங்கிட்டுண்பதாகிய) அறத்தினையும். அன்புடைமை இல்வாழ்க்கைக்குப் பண்பாகும்; அறனுடைமை அதற்குப் பயனாகும். முறை நிரல் நிறைப் பொருள்கோள்.

9. அஃதும் = மற்றைய துறவறமும். 'பிறன் பழிப்பது' என்றது கூடாவொழுக்கத்தை. அஃதாவது, பிறன்மனை விரும்புதல், பொறாமை, பேராசை, புறங் கூறல் முதலிய தீக்குணங்களை யுடையராயிருத்தல்.

10. (வாழ்க்கைத் துணை நலம்: இல்வாழ்க்கைக்குத் துணையாகிய மனைவியினது நற்குண நற்செயல்கள்) மனைமாட்சி – இல்லறத்துக்குத் தக்க நற்குண நற்செயல்கள், எனைமாட்சித்து ஆயினும் = (செல்வத்தான்) எத்துணைச் சிறப்புடையதாயினும். ஆயினும், உம்மை – உயர்வு சிறப்பு.

11. பேணி – (உணவு முதலியவயற்றால்) உபசரித்து, தகை சான்ற சொல் = (இருவரிடத்தும்) நன்மை பொருந்திய புகழ்.

12. என்பு இலதனை – எலும்பில்லாத உடம்பை; அன்பு இலதனை – அன்பு இல்லாத உயிரை; காயும் – அழிக்கும். உவமையணி

13. யாக்கை அகத்து – உடம்பினுள்ளே யிருந்துகொண்டு; உறுப்பு – (இல்லறத்துக்கு) உறுப்பாகிய; புறத்துறுப்பு – வெளியேயுள்ள உறுப்பு; அவை இடம், பொருள், ஏவல் செய்வார் முதலாயின.

14. செல்விருந்து – (தன்னிடத்திற்கு) வந்த விருந்தினர்களை, ஓம்பி – உபசரித்து, இருப்பான் – (தான் அவரோடு உண்ணக்) காத்திருப்பவன். விருந்தினர்களை உபசரித்து உண்பிப்பவன் மறுமையில் தேவனாவான் என்பதாம்.

15. மிச்சில் – (அவர்கள் உண்டபின்) மிகுந்துள்ள உணவை, மிசைவான் – உண்பவன், வேண்டும் (கொல்) ஒ – வேண்டுமோ, (வேண்டா); ஓகாரம் எதிர்மறைப் பொருளது, கொல் – அசைநிலை.

16. துன்பு உறூஉம் – துன்பத்தை மிகுவிக்கும்; துவ்வாமை – வறுமை; நாக்கு முதலிய பொறிகள் சுவை முதலிய பயன்களை அனுபவிக்க இயலாமை என்னும் பொருளையுடைய 'துவ்வாமை' என்னும் சொல், அதற்குக் காரணமாகிய வறுமையை யுணர்த்திற்று; இது 'உபசார வழக்கு' எனப்படும். துன்புறூஉம், இன்புறூஉம் – இன்னிசையளபெடைகள்.

17. தினைத் துணை – தினையவ்வளவு சிறிய; நன்றி = உதவி; பயன் தெரிவார் – (அவ்வாறு எண்ணுவதனாலுண்டாகும்) பயனை அறிபவர்கள். தினை சிறுமைக்கும் பனை பெருமைக்கும் எடுத்துக்காட்டப்படும் அளவைகள்.

18. கொன்று அன்ன – (தமக்கு முன் ஒரு நன்மை செய்தவர் பின்) கொன்றாற் போன்ற; இன்னா – தீமை; கெடும் – (அவை) ஒழியும்.

19. பிறவும் – பிறர் பொருளையும்; தமபோல் – தம் பொருள் போல்; வாணிகம் செய்வார்க்கு வாணிகம் – வாணிகம் செய்பவர்களுக்கு நன்றாய வாணிகமாம். பிறவும் தமபோல் செய்தலாவது; மிகுதியான விலையைக் கொள்ளாமலும் குறைவான பொருளைக் கொடுக்காமலும் ஒப்பச் செய்தலாம்.

20. ஒருமையுள் – ஒரு பிறப்பின் கண்; ஐந்து – ஐம்பொறிகளையும்; அவை, செவி, வாய், கண், மூக்கு, உடல் என்பன. ஏமாப்பு – பாதுகாவல். ஆமை ஒரு தலையும் நான்கு கால்களுமாகிய ஐந்து உறுப்புகளையும் துன்பம் நேராமல் தன் ஓட்டுக்குள் அடக்குவது போல ஒருவன் ஐம்பொறிகளையும் பாவம் நேராமல் அடக்க வேண்டும் என்பார் 'ஆமை போல்' என்றார். உவமையணி. ஐந்து: தொகைக் குறிப்பு.

21. யா – (தம்மால் காக்கப்படுவன) எல்லாவற்றையும், சொல் இழுக்குப் பட்டு – சொல் குற்றத்தின்கண் பட்டு, சோகாப்பர் – துன்புறுவர். யா – அஃறிணைப் பன்மை வினாப் பெயர். நாவைக் காத்தலாவது – தீய சொற்களைச் சொல்லாதிருத்தல்.

22. குடிமை – (உயர்ந்த) குலனுடைமையாம், இழுக்கம் – (அவ்வொழுக்கத்திலிருந்து) தவறுதல். உயர் குடிப் பிறப்புக்கும் இழிந்த பிறப்புக்கும் காரணமாகிய ஒழுக்கமுடைமையும் இழுக்கமும் ஆகிய தொழில்கள் தாமே குடிமையும் இழிந்த பிறப்புமாகச் சொல்லப்பட்டன. உபசார வழக்கு.

23. இழுக்கத்தின் – (ஒழுக்கத்திலிருந்து) தவறுதலால், ஏதம் – (தமக்கு இழிகுலமாகிய) குற்றம், படுபாக்கு – உண்டாவதை, உரவோர் – மன வலிமையுடையவர்.

24. பிறன் மனை – அயலார் மனைவியை, நோக்காத – விரும்பாத, அறன் ஒன்றோ ஆன்ற ஒழுக்கு – அறமும் ஆம், நிரம்பிய ஒழுக்கமுமாம். 'ஒன்றோ' என்பது எண்ணுப்பொருள் பட்டு வந்தது; எண்ணிடைச் சொல்.

25. பொறையுடைமை – பிறர் செய்யும் குற்றங்களைப் பொறுத்துக் கொள்ளுதலை யுடையராதல். இன்மையுள் இன்மை – வறுமையில் மிக்க வறுமை, விருந்து ஒரால் – விருந்தினரை (உபசரிக்காமல்) நீக்குதல், மடவார் பொறை – அறிவிலிகள் செய்கின்ற குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளுதல். எடுத்துக் காட்டுவமை யணி.

26. அழுக்காறுமை – பிறர் மினுக்கங் கண்டு பொறாமை கொள்ளாதிருத்தல். அழுக்காறு: முதனிலை திரிந்த தொழிற்பெயர். திரு செற்று – (இம்மையில்) செல்வத்தை அழித்து, தீ உழி உய்த்துவிடும் – (மறுமையில்) நரகத்தில் சேர்த்துவிடும். அழுக்காறென ஒரு பாவி: உருவகம்.

27. அவ்விய நெஞ்சத்தான் – பொறாமை பொருந்திய மனத்தையுடையவன், ஆக்கம் – செல்வம், செவ்வியான் – நேர்மையான மனத்தையுடையவன், பொறாமை யற்றவன். நினைக்கப்படும் – அவை எதனால் உண்டாயின என்று ஆராயப்படும். பொறாமையுடையவனுக்குச் செல்வமும், அது இல்லாதவனுக்கு வறுமையும் உண்டாகாவாம் என்க.

28. புறங்கூறாமை – பிறரைக் காணாதவிடத்தில் பழித்துக் கூறாதிருத்தல். கண் + நின்று – கண்ணின்று – (ஒருவன்) தன் எதிரே நின்று, கண் அற – தாட்சணியம் இல்லாமல், முன் + இன்று – முன்னின்று – (அவன்) எதிரே இல்லாதபோது, பின் நோக்காச் சொல் – பின்னால் வரும் குற்றத்தை நோக்காத சொல்லை. பின்: கால ஆகுபெயர்.

29. பாராட்டுவானை – பல முறையும் சொல்லுபவனை, மகன் எனல் – மனிதன் என்று சொல்லாதே, பதடி – பதர், பதடிஎனல் – பதர் என்று சொல்லுக. 'எனல்' என்னும் இரண்டனுள் முன்னது எதிர் மறை வியங்கோள்; பின்னது உடன்பாட்டு வியங்கோள்.

30. நெருப்பு எந்தக் காலத்தில் எந்த இடத்தில் எந்த உடம்பிற்படுமோ அந்தக் காலத்தில் அந்த இடத்தில் அந்த உடம்பில் மட்டுமே சுடும்; தீயவையோ மறுபிறப்பிலும், வேறோர் உலகத்திலும், வேறோர் உடம்பிலும் போய் உயிரை வருத்தும். ஆதலால் தீயவை தீயினும் அஞ்சப்படும் என்க. சொற்பொருட்பின் வருநிலை அணி.

31. (ஒப்புரவறிதல்: உலக நடையினை யறிந்து உபகாரஞ் செய்தல்) ஒப்புரவினால் – உபகாரம் செய்தலால், கேடு – பொருள் அழிவு, விற்றுக்கோள் தக்கது – தன்னை விற்றாயினும் கொள்ளும் தகுதியது. ஒப்புரவினால் வரும் கேடு கேடன்று என்பதாம். கேடு – முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

32. வைத்து இழக்கும் – ஈயாமல் வைத்திருந்து இழந்துபோகின்ற; கணவர் – அருளில்லாதார்.

33. நிரப்பிய – (பொருட் குறையை) நிரப்பும் பொருட்டு; 'செய்யிய' என்னும் வாய்பாட்டு எதிர்கால வினை எச்சம். இன்னாது – துன்பந் தருவதாம். மன்ற – நிச்சயமாக.

34. அதூஉம் – அத்தன்மையுடைய சாதலும்; இன்னிசையளபெடை. இயையாக்கடை – முடியாத விடத்து. பிறர்க்குப் பயன்படாத உடம்பு நீங்குதலான் 'இனிது' என்றார். (பரி.)

35. பட – உண்டாகுமாறு, தம் நோவார் – (பிறர் இகழ்ந்தவிடத்து இவ்விகழ்ச்சி நம் குற்றத்தால் வந்ததென்று) தம்மை வெறுத்துக் கொள்ளா மல்.

வாழாதார், இகழ்வாரை – வினையாலணையும் பெயர்கள்.

36. தன் உயிர்க்கு இன்னாமை – (பிறர் செய்யும் தீமை) தனது உயிர்க் குத் துன்பந் தரும் தன்மையை, அறிவான் – அனுபவித்து அறிகின்றவன்.

37. அருள் ஆள்வார்க்கு – அருளுடையவர்க்கு; வளி – காற்று; மல்லல் வளப்பம்; உரிச்சொல்; ஞாலம் – உலகத்தில்; வாழ்வார்: இடவாகு பெயர். கரி – சான்று.

38. இலர் – வறியவர், நோற்பார் – தவஞ் செய்வார்.

39. (கூடாவொழுக்கம் – தீயவொழுக்கம்) வஞ்சித்து – (தானஞ் செய்வாரை) ஏமாற்றி, வன்கணார் – கொடியவர். துறவார் – முற்றெச்சம்.

40. கள்ளத்தால் – வஞ்சனையால், எனல் – என்று கருதற்க. 'மகன் எனல்' (29) என்ற விடத்துப் போல 'எனல்' என்பது எதிர்மறை வியங் கோள் வினைமுற்று.

41. மனத்தொடு – (ஒருவன் தன்) மனத்திற்குப் பொருந்த, செய்வா ரின் – செய்பவரைக் காட்டிலும், தலை – சிறப்புடையவனாவான்.

42. மெய்ஆ – மெய்ந் நூல்களாக, எனைத்து ஒன்றும் – எந்த விதத்தினு லும்; நல்ல பிற?– மேம்பட்டன வாகிய பிற அறங்கள்.

43. (வெகுளாமை – கோபங்கொள்ளாமை) சேர்ந்தாரைக் கொல்லி – நெருப்பு; காரணப்பெயர்; இனம் – சுற்றம், ஏமப் புணை – பாதுகாவலாகிய தெப்பம். 'இனமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி' – உருவகம்; இனம் என்னும் ஏமப்புணை: ஏகதேசவுருவகம்.

44. இணர் என்பது பூங்கொத்து; இங்கே தீச்சுவாலையின் தொகுதியை உணர்த்துகிறது. தோய்வு அன்ன – மேற்படிந்ததைப் போன்ற. புணரின் – கூடுமானால். தோய்வு: தொழிற் பெயர்; உம்: இழிவு சிறப்பு.

45. கோள் – துணிபு. ஈனும்: எதிர்காலப் பெயரெச்சம்.

46. அற்கா – நிலைத்து நில்லாத. அற்குப – நிலைக்கும் அறங்கள். ஆங்கே – அச் செல்வத்தினைப் பெற்றபோதே. அற்கா: ஈறு கெட்ட எதிர் மறைப் பெயரெச்சம்; அற்கு: பகுதி. அற்குப: வினையாலணையும் பெயர். செயல்: உடன்பாட்டு வியங்கோள்.

47. சாக்காடு – இறத்தல். இங்குப் பயின்றது உவமையணி.

48. 'யாதொரு பொருளினின்று யாதொரு பொருளினின்று நீங்கிய வன் அப்பொருளால் அப்பொருளால் துன்பம் அடைதல் இலன்.' அடுக்கு கள் பன்மை குறித்து நின்றன.

49. பற்று அற்றான் – இறைவன். இங்குப் பயின்றது சொற்பின் வருநிலை யணி.

50. அறிவு – மெய்யுணர்வு.

51. (இறை மாட்சி: அரசனது நற்குண நற்செயல்கள்.) முறை – நீதி காப்பு ஆற்றும் – காத்தலையும் செய்யும்.

52. (கல்வி: கற்றற்குரிய நூல்களைக் கற்றல்.) தாம் இன்புறுவது – தாம் இன்புறுவதற்கு ஏதுவாகிய கல்விக்கு. காமுறுவர் – மேலும் அதனையே விரும்புவர். உலகு: இடவாகு பெயர்.

53. கல்லாதவரும்: உம்: இழிவு சிறப்பு; நனி: உரிச்சொல்.

54. (கேள்வி: கேட்கத் தக்க நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல்.) உணவு – உணவாகிய கேள்வி. வயிற்றுக்கும்: உம்மை இழிவு சிறப்பு.

55. ஒற்கத்தின் – தளர்ச்சி வந்தவிடத்து. ஊற்று ஆம் துணை – பற்றுக்கோடாகிய துணையாயிருக்கும்.

ஒற்கம்: தொழிற் பெயர்; ஒல்கு: பகுதி. 'ஊன்று' என்பது 'ஊற்று' என வலித்தது.

56. செவியின் சுவை – செவியால் நுகரப்படும் கேள்விச் சுவை. அவியினும் – செத்தாலும். வாயுணர்வு: மூன்றன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை. உம்மைகள் எண்ணும்மைகள்.

57. அற்றம் – கெடுதி, அழிவு; செறுவார் – பகை செய்வார். 'அழிக்கலாகா உள் அரண்' என்க.

கருவி, அரண்: பெயர்ப் பயனிலைகள்.

58. (குற்றம் கடிதல்: 'குற்றங்கள் தன்கண் நிகழாமல் கடிதல்.') பற்றுள்ளம் – செலவு செய்ய வேண்டிய விடத்தும் அவ்வாறு செய்யாமல் பொருளைப் பற்றிக்கொள்ளும் உள்ளம். இவறன்மை – உலோபத்தனம். எற்றுள்ளும்: எவற்றுள்ளும் என்பதன் விகாரம்.

59. (சிற்றினஞ் சேராமை: சிறிய இனத்தைச் சேராமை.) தூ ஆவரும் – பற்றுக்கோடாகும். செய்வினை: வினைத்தொகை.

60. ஆக்கம் – செல்வம். இன நலம் – இனத்தது தன்மை.

61. தெரிந்து செயல் வகை: எதனையும் ஆராய்ந்து செய்யும் வகை.

62. (வலியறிதல்: ஒறுத்தல் குறித்த அரசன் நால் வகை வலியையும் அளந்து அறிதல். அவை: வினைவலி, தன் வலி, மாற்றான் வலி, துணை வலி.)

பீலி – மயிற்றோகைக் கண்கள். சாகாடு – வண்டி. பெயின் – ஏற்றின்.

உபமானத்தை மாத்திரம் கூறி உபமேயம் தானாகவே தோன்றும்படி இப்பாடலில் அமைக்கப்பட்டிருப்பது பிறிது மொழிதல் என்னும் அணியாகும்.

63. அளவு – தனக்கு உள்ள பொருளின் எல்லையை. 'உளபோல... கெடும்' – உள்ளன போலத் தோன்றி, உண்மையில் இல்லையாய், பின்பு அத் தோற்றந்தானும் இன்றிக் கெடும்.

உள: பலவின்பால் குறிப்பு வினையாலணையும் பெயர்.

64. இடத்தான் – இடத்தோடு பொருந்த. கருதினும்: உம்மை உயர்வு சிறப்பு.

65. (இடனறிதல்: 'வலியும் காலமும் அறிந்து பகைமேற் செல்லும் அரசன் தான் செல்லுதற் கேற்ற நிலத்தினை அறிதல்.')

கால் வல் நெடுந்தேர் – நிலத்தில் ஓடக்கூடிய வன்மையான கால்களை (சக்கரங்களை) யுடைய பெரிய தேர். நாவாய் – கப்பல்.

இங்குப் பயின்றது பிறிதுமொழிதலணி.

66. (தெரிந்து தெளிதல்: ஆராய்ந்து தெளிவடைதல்) காதன்மை கந்து ஆ – அன்புடைமை பற்றுக்கோடாக. 'அறிவு அறியாதார்' என்க. அன்பெனும் தொடர்பு காரணம் பற்றி அறிவற்றவரிடம் ஒரு தொழிலை ஒப்புக் கொடுத்தால் அத்தொழிலும் கெடும்; அரசனுக்கும் அது பேதைமையாகும் என்பது கருத்து.

67. தேரான்: முற்றெச்சம். தெளிந்தான் – தெளியப்பட்டவன். ஐயுறவு – ஐயங்கொள்ளுதல். இடும்பை – துன்பம், தீரா! ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

68. (தெரிந்து வினையாடல்: 'தெளியப்பட்டவரை, அவர் செய்யவல்ல வினைகளை யறிந்து அவற்றின் கண்ணே ஆளுந் திறம்.')

நாடி – ஆராய்ந்து.

69. வான் + நோக்கி = வானோக்கி. கோல் + நோக்கி = கோனோக்கி. வான்: இருமடியாகு பெயர். உலகு: இடவாகு பெயர்.

70. வையகத்தை அவனும், அவனைக் கோன் முறையும் காக்கும் என்பது கூறப்பட்டது. முட்டாச் செயின் – முட்டு வந்த காலத்தும் முட்டாமற் செய்தால். (உ–ம்: மனுநீதிச் சோழன் கதை).

முட்டா: ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்.

71. 'கோலொடு நின்றான் (அரசன்) பொருள் வேண்டுதல், வேலோடு நின்ற கள்வன் வழிச் செல்வாரை 'இடு' (தா) என்று சொல்வதைப் போன்றதாகும், இரவு – இரத்தல்.

72. (வெருவந்த செய்யாமை: குடிகளும் துணைவரும் தானும் அஞ்சத் தக்கனவற்றைச் செய்யாதிருத்தல்) கடிது ஓச்சி – அளவு கடந்து தண்டிப் பாரைப் போல் தொடங்கி. நெடிது நீங்காமை – நெடுங்காலம் நீங்காமல் நிலைத்திருத்தலை.

73. (கண்ணோட்டம்: 'தன்னோடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை.') இப்பாடலில் கண்ணோட்டஞ் செய்யும் வகை கூறப்பட்டது.

74. ஒற்றாடல்: 'நிகழ்ந்தன அறிதற்கு ஒற்றரை ஆளுதல்.

75. அல்லாவார் – அலமரமாட்டார், (அல்லா: பகுதி.) ஒருவந்தம் ஊக்கம் – நிலைபெற்ற ஊக்கத்தை. கைத்து: ஒன்றன்பால் குறிப்பு வினையாலணையும் பெயர்.

76. (ஆள்வினையுடைமை: 'இடைவிடாத மெய்ம் முயற்சியுடையனுதல்.') பொறி – ஊழ் அல்லது வாய்ப்பு. ஒருவனுக்கு மெய்ம் முயற்சி இல்லாமையே பழியாகும் என்பது கருத்து.

77. (இடுக்கணழியாமை: 'இடுக்கண் வந்துழி அசற்கு மனங் கலங்காமை.') இடும்பை – துன்பம். இங்குப் பயின்றது சொற்பொருட்பின் வருநிலை யணி.

78. விழையான்: முற்றெச்சம்.

79. சொல்லின் கண் சோர்வு நிகழாமல் காத்துக்கொள்க என்பது கருத்து.

80. பழி மலைந்து – பழியை மேற்கொண்டு. ஆக்கத்தின்: ஐந்தாம் வேற்றுமை. கழிநல்குரவு – மிக்க வறுமை. கழி: உரிச்சொல்.

81. (வினைத் திட்பம்: 'வினை முடிப்பானுக்கு வேண்டிய மனத் திண்மை.') உற வரினும் – மிகுதியாக வரினும். உற: 'உறு' எனும் உரிச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம். 'வரினும் வினை ஆற்றி செய்க' என முடிக்க.

82. உலகு வேண்டாது – உயர்ந்தோர் மதியார். எனை: எத்தனை என்பதன் மரூஉ.

83. எளியர் – பலர்; அரியர் – சிலர்.

84. ஏமம் – காவல்.

85. (படைச் செருக்காவது படையினது வீரத்தின் மிகுதி.) தறுகண் – பகைவர்மேல் படைகொண்டு செய்யும் வீரத்தை. ஒன்று உற்றக்கால் – பகைவர்க்கு ஒரு தாழ்வு வந்த காலத்தில். ஊராண்மை – அவர்க்குச் செய்யும் உதவி. எஃகு – கூர்மை. 'என்ப' என்பதனைப் 'பேராண்மை என்ப' 'எஃகு என்ப' என இரண்டிடத்தும் கூட்டுக. பேராண்மை ஆயுதம்; ஊராண்மை அவ்வாயுதத்தின் கூர். ஏகதேச உருவகம்.

இச்செய்யுட்கு உதாரணம், இராமன் தளர்ந்து நின்ற இராவணனிடம் 'இன்று போய் நாளை நின்தானையோடு வா' எனக் கூறியனுப்பியது. இச் செயலைத் தழிஞ்சி என்பர்.

86. புரந்தார் – காக்கும் அரசர்கள். சாகற்பின் – போர்க்களத்தில் சாதலைப் பெறின். சாக்காடு – அச்சாவு. இரந்துகோட்டக்கது – இறந்தாயினும் பெறறுக்கொள்ளத் தக்கது.

87. புணர்ச்சி பழகுதல்: உம்மைத் தொகை. கிழமை – உரிமை உதாரணம், கோப்பெருஞ் சோழன் பிசிராந்தையார் வரலாறு.

88. அல்லது – நன்மை அல்லாதது. வழக்கு அறிய – உலக வழக்கைச் செய்யாதொழிந்தால் செய்விக்க. 'உலக வழக்கு அல்லாததைச் செய்யக் கருதினுல் அழச் சொல்லியும், செய்தவிடத்து இடித்தும், நல்லதை செய்யாதிருந்தால் அதனைச் செய்விக்கவும் (அறியவும்) வல்லாருடை நட்பை ஆய்ந்து பெறவேண்டும்' என்க.

அறிய: பிறவினைப்பொருளில் வந்த தன்வினை.

89. ஒன்னார் – பகைவர்.

90. (புல்லறிவாண்மை. 'தான் சிற்றறிவினனாக இருந்தும் தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் உறுதிச் சொல் கொள்ளாமை.') ஏவவும் செய்கலான் – சொல்லியும் செய்யமாட்டாதவன். தான் தேறான் தானாகவும் அறியமாட்டான். போஒ: செய்யுளோசை நிறைக்க வந்த அளபெடை.

91. (உட்பகை: புறத்தே பகைமையை உண்டாக்கிக்கொடுத்து அப் பகை வெல்லுமளவும் நட்பாயிருக்கும் உள் பகை.) வாள்போல் – வாளைப் போல எறிவோம் என்று வெளிப்படையாய் வந்து நிற்கின்ற. கேள்போல் – உடனிருந்து நண்பரைப் போலிருக்கின்ற.

92. (பெரியாரைப் பிழையாமை: பெரியாராயினாரை அவமதித்து ஒழுகாமை.) வகை மாண்ட – அழகு மிக்க. தகைமாண்ட தக்கார் – பெருமையால் மாட்சிமைப்பட்ட பெரியார். செறின் – கோபித்தால். மாண்ட: 'மாண்' விகுதி.

93. [வரைவின் மகளிர்: வரைவு இல் மகளிர்; ஒழுக்க வரைவு (அளவு) இல்லாத பெண்டிர்.] கவறு – சூது. திரு – செல்வம்.

94. துஞ்சினார் – உறங்கினார். உறங்கினாரும் செத்தாரும் அறிவின்மையால் ஒத்தார். நஞ்சுண்பாரும் கள்ளுண்பாரும் அறிவின்மையால் ஒத்தார். எடுத்துக் காட்டுவமையணி.

95. (மானம்: எஞ்ஞான்றும் தம் நிலைமையில் தாழாமையும், தாழ்வு வந்தால் உயிர் வாழாமையும்.) பெருக்கத்து – நிறைந்த செல்வம் உண்டாயிருக்கும்போது. சிறிய சுருக்கத்து – குறைவு தரும் வறுமை.

96. அற்றம் – அவமானம், (பிறர்) குற்றம். தான்: அசைநிலை.

97. (சான்றாண்மை: பல நற்குணங்களாலும் நிறைந்து அவற்றை ஆளும் தன்மை.) கடன் அறிந்து – தகுவது இதுவென அறிந்து.

98. இங்குப் பயின்றது உவமையணி.

99. (குடி செயல்வகை: 'தான் பிறந்த குடியை உயரச் செய்தலின் திறம்.') நல்லாண்மை – போர்த்தொழிலின் வேறான நல்ல ஆண்மை. இல் ஆண்மை – குடியினை ஆளுந் தன்மை.

100. 'விழைவதூஉம் விட்டேமென்பார்க்கு(ம்) நிலை இல்லை' என்க. விரும்பும் உணவையும் துறந்தேம் என்பவர்க்கு நிற்பதும் இல்லையாகிவிடும் என்பது.

## வினாக்கள்

1. மழையின் சிறப்பு எவ்வாறு கூறப்பட்டது?
2. நீத்தார் எத்தகைய பெருமையினையுடையார்?
3. 'வாழ்நாள் வழியடைக்கும் கல்' – விளக்கம் தருக.

4. அன்புக்கும் அறத்துக்கும் உள்ள தொடர்பு யாது?

5. விருந்தோம்புபவன் எவ்வாறு சிறப்பிக்கப்படுகிறான்?

6. 'வாணிகம்' என்று தொடங்கும் குறளின் பொருள் யாது?

7. 'வன்மையுள் வன்மை' என்பதெது?

8. அழுக்காறு எவ்வாறு பழிக்கப்படுகிறது?

9. ஈகை எவ்வாறு வலியுறுத்தப்படுகிறது?

10. ஞாலத்தைக் கரியாக்கியுள்ளமையை விளக்குக.

11. மக்கட்கு இறை எனத் தக்கவன் யாவன்?

12. கல்லாரும் நல்லாராதல் எங்ஙனம்?

13. கேள்வி எவ்வாறு வலியுறுத்தப்படுகிறது?

14. 'சேர்ந்தாரைக் கொல்லி' என்பது யாது?

15. 'அது பெற்றால் அற்குப ஆங்கே செயல்' – விளக்கம் தருக.

16. 'வலியறிதல்' என்னும் அதிகாரத்தில் இங்கு அறிவுறுத்தப்படுவன யாவை?

17. 'கடலோடா' என்று தொடங்கும் குறளின் அணிவிசேடம் இன்னதெனப் புலப்படுத்துக.

18. பேதைமையும் தீரா இடும்பையும் தருவன யாவை?

19. கண்ணோட்டம் என்பது யாது? அதனைப் பற்றி இங்கே அறிவுறுத்தப்படுவது யாது?

20. 'துன்பம் உறுதல் இலன்' – எவன்?

21. நாட்டிற்கு அணி யென்று கூறப்பட்டன யாவை?

22. 'இறந்து கோட்டக்க துடைத்து' என்று சிறப்பித்துக் கூறப்பட்டது யாது?

23. நண்பரைத் தேர்ந்தெடுப்பதில் வள்ளுவர் வழங்கும் ஆலோசனை யாது?

24. 'வறியோர்க்கு அழகு வறுமையிற் செம்மை' எனும் கருத்துப்பட வரும் குறட்பாவினைக் குறிப்பிட்டுப் பொருளும் எழுதுக.

25. பண்புடைமையில்லாதார் எவ்வாறு பழிக்கப்படுகின்றார்?

26. உழவினரின் சிறப்பு எவ்வாறு கூறப்படுகின்றது?

27. ஏகதேச உருவகம், இன்னிசை யளபெடை, செய்யுளிசை நிறை யளபெடை, உரிச்சொல், எண்ணும்மை, முற்றெச்சம்: ஆயவற்றிற்கு இப் பகுதியிலிருந்து உதாரணங்கள் காட்டுக.

28. உவமையணி, எடுத்துக் காட்டுவமையணி, சொற்பொருட்பின் வருநிலையணி, பிறிது மொழிதலணி ஆயவற்றிற்கு உதாரணங்கள் காட்டுக.

## 2. சிறுபஞ்ச மூலம்

1. பழி செய்யான் – பழிக்கப்படுஞ் செயல்களைச் செய்யமாட்டான். பாவம் சேரான் – பாவத்தினை மனத்தாலும் நினைக்கமாட்டான். புற

மொழி – புறங்கூறுதலாகிய மொழி. 'புறமொழியும் பிறர் செவிக்கு உயத்து உய்யான்' என்க. உய்யான் – வாழான்.

2. சால்பு – அமைதி. நடையிலான் – நல்லொழுக்கம் இல்லாதவன். உதாரதை – ஈகை. எண் இலான் – வலிமை இல்லாதவன். தேற்றான் – தெளிவாக அமையப் பெறாதவன். நா அகமே காடின் – நாவால் சொல்லி ஆராய்ந்தால். தேற்றான்: பிறவினை.

3. வெளவன்மின் – கவராதீர். கேண்மை – நட்பு. கழிமின் – விடுக. காமின் – சொல்லாது நாவைக் காத்துக்கொள்க. காலன் வரும் – யமன் (அஃதாவது மரணம்) வந்து சேரும்.

4. வசை, நன்று, செழுங்குலம், போகம், அறம் ஆகிய ஐந்து உண்மைகளாகக் கொள்க. 'வசை' என்பதன் மறுதலை 'நன்று.' அது வணக்கத்தால் ஆவது. 'நன்று ஆக' என்க. 'வணக்கம் நன்று ஆக' என்பதனைத் தனியாகவும், அடுத்த வரியுடன் கூட்டியும் பொருள் கொள்க.

5. செயிர் – குற்றம். மயிர் வனப்பு, உகிர் வனப்பு: ஆறும் வேற்றுமைத் தொகைகள்.

## வினாக்கள்

1. சிறுபஞ்ச மூலம்: பெயர்க்காரணம், ஆசிரியர் பற்றிக் குறிப்பு வரைக.

2. அருளுடையானின் சிறப்புகள் யாவை?

3. சொல்லிப் பார்த்தற்கு நகை தருவனவாக இங்குக் கூறப்படுவன யாவை?

4. வசை, போகம், அறம் – இவை ஆதல் எங்ஙனம்?

5. ஒருவற்குச் சொல்லழகே அழகு தருவது என்பது எவ்வாறு வலியுறுத்தப்பட்டது?

## 3. திரிகடுகம்

1. நட்டான் – நிலைநிறுத்தியவன். கூவல் – கிணறு. தொட்டான் – தோண்டியவன். நட்டான், தொட்டான்: முறையே 'நடு' 'தொடு' பகுதிகள். நடு + ஆன் = நட்டான்; தொடு + ஆன் = தொட்டான். பகுதிகளில் ஒற்று இரட்டித்து இறந்த காலம் காட்டியது.

2. பால் பற்றிச் சொல்லா விடுதல் – சாட்சியாகும்போது ஒரு பக்கம் பற்றிப் பொய்ச் சாட்சி சொல்லாதொழிதல். தூஉயம்: உயிரளபெடை, இசை நிறைத்தற் கண் வந்தது.

3. முதலடி: சொல் வெற்றி தனக்கு வரவேண்டுமென்பதற்காக, உண்மையுரைப்பாரைச் சினந்து பேசுகின்ற தவமிலான். இல்லது – தனக்குக் கிடைக்க முடியாத பொருளை. கல்வி – பிறன் கற்ற கல்வியில். செவி குற்றம் – தன் செவிக்கு எட்டக் கூடிய குற்றத்தை. இங்கே பயின்றது: எடுத்துக்காட்டுவமையணி. வெகுண்டு: 'வெகுள்' பகுதி.

4. தன் நச்சி சென்றாரை – தன்னை விரும்பி வந்தவரை. மன்னிய – மிகுதியான. பொச்சாப்பு – மறதியை. இகந்தான் – நீங்கினவன். எள்ளா: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

### வினாக்கள்

1. திரிகடுகம்: பெயர்க் காரணம் தருக.

2. மண்ணில் சாவா உடம்பு எய்தினவர் எவர்?

3. தூயர் தொழில் மூன்று எவை?

4. உமிக் குத்திக் கை வருந்துவார்க்கு உவமேயமாகக் காட்டப்பட்டவர் எவரெவர்?

5. நின்ற புகழுடையார் யாவர்?

## 4. ஏலாதி

1. இயையும் – வந்து சேரும். பாடு – துன்பம் தரும் செயல்கள். வீடு – மோட்சம் தரும் செயல்கள். பால்போலும் சொல்லினாய்: மகடூஉ முன்னிலை.

2. புணர்வு உவத்தல் – சேர்ந்து வாழ்தலில் மகிழ்தல். நோதல் – பிறர் துன்பங் கண்டு வருந்துதல். கவறல் – உள்ளம் கலங்குதல். ஓதல் – கல்விப் பயிற்சி. மென்புடையார் – மென்மைத் தன்மையுடைய பெரியார்.

3. களியான் – செருக்கடையான். களிப்பாரை – கள்ளுண்டு மகிழ்கின்றவர்களை. 'விருந்திற்கு ஒளியான்' என்க. உலையான் – (ஒழுக்கத்தில்) தவறமாட்டான். ஈத்து – ஈந்து. ஏதம் இல் – குற்றம் இல்லாத.

4. தலை – கணவன். கைத்து ஊண் பொருள் – உணவுக்கு ஆதாரமாகக் கையிலே வைத்துக்கொண்டிருந்த பொருள். இப்பாடலில் சொல்லப்பட்டவர்கள் மறுமைப் பேற்றுக்கு உரியர் என்பது கருத்து.

### வினாக்கள்

1. பாடே புரியாது வீடே புரிதல் வேண்டுவதேன்?

2. பிறர்பால் அன்பு செய்கின்றவர்களிடம் விளங்கும் ஆறு அருங் குணங்கள் யாவை?

3. ஒருவன் மண் ஆண்டு குடிவாழ்தல் வேண்டுமெனில் அவன் செய்யத் தக்கன யாவை?

4. மறுமைக்கு உரியவர்களாக இங்குக் கூறப்படுபவர் யாவர்?

## 5. நாலடியார்

1. விளக்கும் – விளங்கச் செய்யும். தாம் உளர் ஆ கேடு இன்று – தம்மை உளர் ஆம்படிச் செய்து கேட்டினை இன்மை யாக்கும். மம்மர் – மயக்கம்.

2. வைப்புழி கோள்படா – வைத்த இடமாகிய மனத்திலிருந்து பிறரால் கொள்ளப்படா. வாய்த்து ஈயின் கேடு இல்லை. செறின் – கோபித்தால். விச்சை – வித்தை (இது போலி).

3. 'உண்ணான்' முதலியன எச்சங்கள். இழந்தான்: காலவழுவமைதி. அ ஆ: இரக்கக் குறிப்பு.

4. செற்றும் – வருத்தியும். வைத்தீட்டினார் – ஈட்டி வைத்தார், தேடி வைத்தவர். உய்த்து – கொடுத்து. கரி – காட்சி. உடாஅது, கெடாஅது, கொடாஅது: செய்யுளிசை யளபெடைகள். வான்தோய் மலைநாட: ஆடூஉ முன்னிலை.

### வினாக்கள்

1. கல்வியின் சிறப்பு எவ்வாறு கூறப்பட்டது?
2. இழந்தான் என்றெண்ணப்படுபவன் யாவன்?
3. 'உய்த்து ஈட்டுந் தேனீக் கரி' – விளக்குக.
4. இலக்கணப் பெயர்கள் தருக.
   (அ) யாம் காணேம்.
   (ஆ) உண்ணான் ஒளிநிறான் ஓங்குபுகழ் செய்யான்.
   (இ) உடாஅதும் உண்ணாதும்.

# கதைப் பகுதி

# 1. பெருங்கதை

## யாழ் பெற்றது

குரு குலத்தில் பிறந்தவனும் கௌசாம்பி நகரத்தரசனுமான சதானிகன் என்பானுடைய புதல்வன் உதயணன் என்பானது கதையை விரிவாகக் கூறும் காவியம் பெருங்கதை என்பது. இந்நூல் உஞ்சைக் காண்டம், இலாவண காண்டம், மகத காண்டம், வத்தவ காண்டம், நரவாண காண்டம் என ஐந்து பிரிவுகளைக் கொண்டது.

இந்நூலாசிரியர் கொங்குவேளிர் என்பவராவர். இவர் கொங்கு நாட்டு வேளாள வகுப்பினரைச் சேர்ந்த சிற்றரசருள் ஒருவர். விசயமங்கலம் என்பது இவர் பிறந்த ஊரெனத் தெரிகிறது. இவரது சமயம் சைனம்; காலம் கடைச் சங்க காலத்திற்கும் சிறிது பிற்பட்டதாகலாம். இவர் மூன்று பிறப்புகள் எடுத்து இந்நூலைப் பாடி முடித்தார் என்று வழங்கும் கதை நம்பத்தக்க தன்று. எனினும், இவர் இந்நூலைப் பாடிக்கொண்டிருந்த காலத்தில், அகால மரணமடைவார் என்று சோதிடரால் அறிந்து கொண்டு, இல்வாழ்க்கையை விடுத்து, வானப்பிரத்தம், துறவறம் முதலியன மேற் கொண்டு இந்நூலைப் பாடி முடித்தாரெனத் தெரிகிறது. இவர் மேற்கொண்ட இல்லறம் வானப்பிரத்தம் துறவறம் என்பவற்றையே மூன்று பிறப்புகள் என்றனர் போலும்.

இங்குப் பாடமாக வந்துள்ள பகுதி வத்தவ காண்டத்தில் 'யாழ் பெற்றது' என்னும் சிறு பிரிவிலிருந்து எடுக்கப்பட்டதாகும்.

உதயணன் வத்தவ நாட்டு மன்னன். கௌசாம்பி அல்லது கோசம்பி என்பது இவனது தலைநகராகும். இவன் பிரச்சோதனன் என்பானுடைய மகள் வாசவதத்தையை மணந்து உச்சயினியிலிருந்து கோசம்பிக்குத் திரும்பிக்கொண்டிருந்தான். அச்சமயம் இவன் இவர்ந்து சென்றுகொண்டிருந்த பத்திராபதி என்னும் யானையின் விரைவினால், நள்ளிரவில், விந்தமலைச் சாரலில், இவன் கையிலிருந்த கோடபதி என்னும் யாழ் வழுக்கி விழுந்துவிட்டது.

பின்னொரு நாள், அருஞ்சுகன் என்னும் அந்தணன் ஒருவன் கௌசாம்பியிலிருந்த தன் உறவினரைக் காணும்பொருட்டு உச்சயினியிலிருந்து புறப்பட்டு விந்த மலைச் சாரல் வழியே வந்துகொண்டிருக்கையில் யானைக் கூட்டம் ஒன்றனைக் கண்டு அஞ்சி ஒரு வேங்கை மரத்தின்மீது ஏறிக் கொண்டனன். ஆங்கண் ஒரு மூங்கிற் புதரிலிருந்து 'தாங் தீம்' என்னும் இன்னிசை பரவிக்கொண்டிருந்தது. இன்னிசை கேட்ட யானைக்கூட்டம் மயங்கி நின்று பின்பு அகன்றது. அது கண்டு வியப்புற்ற அருஞ்சுகன் இறங்கிச் சென்று, மூங்கிற் புதரில் சிக்கிக்கொண்டிருந்த யாழினை எடுத்துக்கொண்டு கௌசாம்பிக்குச் சென்று, தன் உறவினர் வீட்டில் அமர்ந்து அதனை வாசித்துக்கொண்டிருந்தான். கோடபதியின் இன்னிசை அரண்மனையிலிருந்த உதயணனுக்குக் கேட்கவும், அவன் ஆள் அனுப்பித் தன் யாழைப் பெற்றுக்கொண்டு அருஞ்சுகனுக்குப் பெருஞ் செல்வமளித்தான். இஃது இங்கு வருகின்ற வரலாறு.

[அருஞ்சுகன் செலவு]

மதிலுஞ் சேனையுண் மாணி யாகிய
அதிர்வில் கேள்வி அருஞ்சுக னென்னும்
அந்த ணாளன் மந்திரம் பயின்றநல்
வகையமை நன்னூற் பயன்நனி பயிற்றித்
தலமுதல் ஊழியில் தானவர் தருக்கறப்
புலமக ளாளர் புரிநரப் பாயிரம்
வலிபெறத் தொடுத்த வாக்கமை பேரியாழ்ச்
செலவுமுறை யெல்லாஞ் செய்கையிற் றெரிந்து
பண்ணும் திறனும் திண்ணிதிற் சிவணி
வகைநயக் கரணத்துத் தகைநயம் நவின்று
நாரத கீதக் கேள்வி நுனித்துப்
பரந்தவெந் நூற்கும் விருந்தின னன்றித்
தண்கோ சம்பிதன் தமர்நக ராதலின்
கண்போற் காதலர்க் காணிய வருவோன்,

[விந்த மலைச் சாரலையுற்று, யானைக் கூட்டம் ஒன்று வருதலைக் கண்டு அஞ்சி, ஒரு வேங்கை மரத்தின்மீது ஏறிக்கொண்டனன்.]

.........கவர்சினை யேறி
அச்சம் எய்தி எத்திசை மருங்கினும்
நோக்கினன் அருகே ஆக்கம் இன்றி
இறைவற் பிரிந்த வில்லோள் போல...
.......................................
பத்தற் கேற்ற பசையமை போர்வை
செத்துநிறங் கரப்பச் செழுவளங் கவினிய
கொய்தகைக் கொடியொடு மெய்யுற நீடிய
கரப்பமை நெடுவேய் நரப்புப்புறம் வருடத்
தாஅந் தீமெனத் தண்ணிசை முரலத்
தீந்தொடைத் தேனினஞ் செற்றி யசைதர,
வடிவேற் றானை வத்தவர் பெருமகன்
படிவ விரதமொடு பயிற்றிய நல்லியாழ்
கடிமிகு கானத்துப் படிமிசை வழுக்கி
வீழ்ந்த வெல்லை முதலா என்றும்
தாழ்ந்த தண்வளி யெறிதொறும் போகா
அந்தர மருங்கின் அமரர் கூறும்
மந்திரங் கேட்கும் செவிய போலக்
கையும் காலும் ஆட்டுதல் செய்யா
மெய்யொடு மெய்யுறக் குழீஇ மற்றவை
பிறப்புணர் பவைபோல் இறப்பவும் நிற்ப,

[அருஞ்சுகன் யாழினைக் கொண்டு செலல்]

யானை நீங்கலுந் தானவண் குறுகிக்
'கின்னரர் இட்டன ராயினும் இயக்கர்
மெய்ம்மறந் தொழிந்தன ராயினும் மேலைத்
தேவ ருலகத் திழிந்த தாயினும்
யாவ தாயினும் யான்கொளல் துணிந்தனென்
வலியா தெனக்கு வம்மினீர்' எனப்
பலியார் நறுமலர் பற்பல தூஉய்
வழுக்கா மரபின் வழுத்தினன் கொண்டு,

[உதயணன் யாழொலி கேட்டு, அது கோடபதியின் இன்னொலி எனத் தெளிந்து அதனை வருவித்தல்.]

கானம் நீந்திச் சேனை வேந்தன்
அழுங்கலி லாவணச் செழுங்கோ சம்பி
மன்னவன் கோயில் துன்னிய ஒருசிறை
யின்பல சுற்றமொடு நன்கனங் கெழீஇத்
தண்கெழு மாலைத் தன்மனை வரைப்பில்
இன்ப விருக்கையுள் யாழிடந் தழீஇ
மெய்வழி வெந்நோய் நீங்கிப் பையெனச்
செவ்வழி யியக்கலிற் சேதியர் பெருமகன்
வழிப்பெருந் தேவியொடு வான்றோய் கோயில்
....................................
அரிச்சா லேகம் அகற்றினன் இருந்துழி,
'ஈண்டையெம் பெருமகன் வேண்டாயாகி
மறந்தனை யெம்வயின் வலிதுநின் மனன்' என
இறந்தவை கூறி யிரங்குவ தொப்பத்
தொடைப்பெரும் பண்ணொலி துவைத்துச்செவிக்
[கிசைப்பக்
கொடைப்பெரு வேந்தன் குளிர்ந்தன னாகி 'என்
படைப்பரும் பேரியாழ்ப் பண்ணொலி இது'
ஓர்த்த செவியன் தேர்ச்சியிற் றெளிந்து, [வென

[வயந்தகன் என்பானை வருவித்து, 'கோடபதியின் இன்னொலி கேட்கின்றேன்; அதனைப் பெற்று வருக' என்று ஏவவும், அவன் சென்று அதனைக் கொணர்தல்.]

மயக்கமில் கேள்வி வயந்தகன் இழிந்து
புதிதின் வந்த புரிநூ லாளன்
எதிர்மனை வரைப்பக மியைந்தனன் புக்கு
வீறமை வீணைப் பேறவன் வினவ,
நருமதை கடந்தோர் பெருமலைச் சாரல்
பெற்ற வண்ண மற்றவன் உரைப்பக்
கொற்றவன் றலைத்தாட் கொண்டவன் குறுகி
வேற்றோன் பதிநின் றூற்றலிற் போந்த
வன்றை நள்ளிரு ளரும்பிடி முறுகக்
குன்றகச் சாரல் தென்றிசை வீழ்ந்த

பேரியாழ் இதுவெனப் பெருமகற் குரைப்பத்
தாரார் மார்பன் தாங்கா வுவகையன்
'வருகவெ னல்லியாழ் வத்தவ னமுதம்
தருகவென் தனித்துணை தந்தோய், நீயிவண்
வேண்டுவ துரை'யென் றுண்டவன் வேண்டும்
அருங்கல வெறுக்கையொடு பெரும்பதி நல்கி
யந்நக ரிருக்கப் பெறுஅய் நீயெனத்
தனனக ரகத்தே தக்கவை நல்கி-[னன்].

## குறிப்புரைகளும் வினாக்களும்

**1–5.** மதில் உஞ்சேனை – மதிலால் சூழப்பட்ட உச்சயினி. மாணி – பிரமசாரி. அதிர்வு – நடுக்கம். மந்திரம் பயின்ற – நல்லாலோசனைகள் நிரம்பிய. பயிற்றி – இடைவிடாமல் கற்று. தலம் முதல் ஊழியில் – பூமியில் முதல் ஊழிக் காலத்தில். தானவர் – வித்தியாதரர்.

**6–14.** புலமகளாளர் – அறிஞர். புரி நரப்பு ஆயிரம் – முறுக்கேற்றிய ஆயிரம் நரம்பு. நரப்பு: வலித்தல் விகாரம். தொடுத்த – கட்டிய. வாக்கு அமை – திருத்தங்கள் பல அமைந்த. பேரியாழ்: ஆதியாழ்; 'ஆயிர நரம் பிற்றாதியா ழாகும்' என்பது சிலப்பதிகாரம். செலவு – இலக்கணம். பண்: ஜனக ராகம், அஃதாவது பிரதான ராகம். திறன்: ஜன்ய ராகம், அஃதாவது கிளை ராகம். சிவணி – பொருந்தி. 'நயக்காணம்' இசை எழுப்புகையில், இனிமை யுண்டாகும்படி செய்யப்படும் கிரியை. நாரத கீதம்: 'நாரத சிட்சை' என்னும் இசைநூல். விருந்தினன் அன்றி – புதிய வனாக இல்லாமல்; அஃதாவது யாவற்றையும் கற்று. கோசம்பி – கௌசாம்பி. தமர் – உறவினர். காதலர் – மிக்க அன்புடைய உறவினர். காணிய: செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

**15–24.** நோக்கினன்: வினையாலணையும் பெயர். 18 ஆம் அடி உவமையணி. பத்தல், போர்வை: யாழின் உறுப்புகள். செத்து நிறம் கரப்ப – மழுங்கி நிறம் மறைய. கொய்தகை: ஒரு கொடி வகை; கொய் தைக் கொடி எனவும் பெயர். கரப்பு அமை – காத்தற்கு (ஒளித்தற்கு) ஏற்ற இடம் அமைந்த. வேய் – மூங்கில். தாஅந் தீம்: அனுகரணவொலி. இது காற்றில் அசைந்த மூங்கில் நரம்புப் புறத்தை வருடியதால் ஏற்பட்ட ஒலி என்க. தீந்தொடை – தேனடை. தேன் – வண்டு.

**25–34.** வத்தவர் பெருமகன் – உதயணன். படிவ விரதம் – பிரமசரிய விரதம். கடி – மணம். எல்லை முதலா – காலமுதலாக. வளி – காற்று. மெல்லிய காற்று வீசி இன்னொலி எழும்பிய தோறும் யானைகள் கூடி நெருங்கி அசைவற்றிருந்தன வென்க. குழீஇ: சொல்லிசையளபெடை. இறப்ப – மிக. பிறப்புணர்பவை போல்: யானை நாதத்தில் தோன்றியது என்பர். இங்கு இவை இனிய நாதத்தில் கலந்திருத்தலால் தம் தோற்றத்தை உணர்பவை போலக் காணப்படுகின்றன.

35–42. அவண் – அங்கு. குறுகி – சென்று. கின்னரர், இயக்கர்: இசை வல்ல தேவ சாதியார். 'வம்மின் நீர்' என யாழினை நோக்கிக் கூறு கிறான். தூஉய்: சொல்லிசையளபெடை. 'கொண்டு வழுத்தினன்' என்க.

44–52. நீந்தி – கடந்து சென்று. வேந்தன் – வேந்தனுடைய. அழுங்கல் இல் ஆவணம் – கேடில்லாத தெருக்களையுடைய. கோசம்பி – கோசம்பியில். கோயில் துன்னிய ஒரு சிறையின் – அரண்மனைக்கு அரு கான தொரு பக்கத்தில். உறவினர் வீடு அரண்மனையின் அருகில் இருந்த தென்க. நன்கனம் – நன்றாக. மாலே – மாலையில். மனைவரைப்பில் – மனையில். இன்ப இருக்கை: யாழ் வாசிக்கையில் இன்பவுணர்ச்சி கொடுப் பதற்கென விதிக்கப்பட்ட இருக்கை முறை. வழி: ஏழன் உருபு. செழீஇ, தழீஇ: சொல்லிசையளபெடைகள். சேதியர் பெருமகன்: உதயணன். பெருந்தேவி: அவன் மனைவியாகிய பதுமபதி என்பவள். (இச் சமயம் வாசவதத்தையைப் பிரிந்திருந்தான் அவன்.) அரிச்சாலேகம் – மான் கண்ணைப்போன்ற பல கண்களையுடைய சாளரம்; அரி – மான்.

53–59. ஈண்டை – இங்கு. வேண்டாயாகி – எம்மை வேண்டா மல். எம் வயின் – எம்மிடம். இரந்தவை – இரங்கத் தக்கனவற்றை; (பண் மைப் பெயர்). 53,54,55-ஆம் வரிகள்: தற்குறிப்பேற்றவணி. ஓர்த்த – ஆராய்ந்த. தொடை, கொடை: முறையே தொடு கொடு என்னும் பகுதி களினடியாகப் பிறந்த பெயர்ச் சொற்கள்.

60–70. இழிந்து – மாளிகையிலிருந்து இறங்கி. புரிநூலாளன் – அந்தணன். எதிர்மனை வரைப்பகம் – எதிர் வீட்டினுள். இயைந்த னன்: முற்றெச்சம். புக்கு: இறந்த கால வினையெச்சம்; புகு பகுதி; பகுதி ஒற்று இரட்டித்து இறந்தகாலம் காட்டிற்று. வீறு – பிறிதொன்றற் கில்லாத அழகு. பேறு – பெற்றதை; 'பேறு' என்னும் பகுதியினடியாகப் பிறந்த பெயர்ச்சொல். நருமதை: ஆறு. வேற்றோன் பதிநின்று – வேறு மன்னனின் இடத்திலிருந்து. பிடி – பெண் யானை. முறுக – மிகவும் விரைய. மகன் + கு = மகற்கு. வத்தவன்:உதயணன் தன்னையே படர்க் கையில் கூறுகிறான். வெறுக்கையொடு – மிகுதியாக. அந்நகர் – அந்த வீட்டில். 'அந்த வீட்டில் நீ இருப்பாயாக' வென்று தன் நகரில் ஒரு வீட்டையும் நல்கினான் என்க.

## வினாக்கள்

1. பெருங்கதை: குறிப்பு வரைக.

2. அருஞ்சுகனது புலமை பற்றி இங்குக் கூறப்படுவனவற்றைக் கூறுக.

3. பேரியாழைப் பற்றி இப்பகுதியில் நீவிர் அறிவன யாவை?

4. 'இறைவற் பிரிந்த இல்லோள் போல': விளக்கம் தருக.

5. 'தாஅந் தீம்' எனும் இசையொலி எழுந்த வகை யாது?

6. 'பிறப்புணர்பவை போல் இறப்பவும் நிற்ப' – விளக்கம் தருக.

7. 'ஈண்டை யெம்பெருமகன் . . . . இரங்குவ தொப்ப' – இப்பகுதியினை இடஞ் சுட்டிப் பொருள் கூறி அணி விசேடமுங் கூறுக.

8. 'குன்றகச் சாரல் தென்றிசை வீழ்ந்த பேரியாழ்' – வரலாறு தருக.

9. உதயணன் அருஞ்சுகனை எவ்வாறு பாராட்டினன்?

# 2. வில்லிபுத்தூரார் பாரதம்

## கடோற்கசன் தூது

[பாரதக் கதையினைத் தமிழில் பாடினருள் வில்லிபுத்தூரார் ஒருவர். இவருடைய பாரதமே பெரு வழக்கில் இருப்பது. இவர்தம் தந்தையார் வீராாகவாசாரியார் என்பார் வைணவ அந்தணர். புலவரது ஊர் திருமுனைப்பாடி நாட்டிலுள்ள சனியூர் என்பது. இவரை ஆதரித்த வள்ளல் வக்கபாகை வரபதியாட்கொண்டான் என்பான். இவரது காலம் கி.பி. 15ஆம் நூற்றூண்டின் இடைப் பகுதியாகும்.

இந்நூல் ஒரு வழிநூல். வடமொழியிலுள்ள வியாசபாரதம் இதற்கு முதனூல்.

பதின்மூன்ரும் நாட் போரில் சயத்திரதன் என்பான் அருச்சுனன் மகன் அபிமன்னியுவைக் கொன்றூன். அதனை யுணர்ந்த அருச்சுனன், 'மைந்தனை மௌலி துணித்தவனை, எத்துணைக் காவல் மிகுப்பினும் வெயிலவன் வீழ்வதன்முன் கொன்றிடுவேன்; தப்பின் கனலிற் குதித்திடுவேன்' என வஞ்சின முரைத்து, உரிய படைக்கலம் பெறுதற்குக் கண்ணனுடன் கயிலை சென்றனன். இச்செய்தியைத் துரியோதனற்குத் தெரிவித்துவிடும்படி தருமர் வீமன் மகன் கடோற்கசனை அனுப்புகின்றனர்.].

(வாயிற் காவலர் 'யார்' என வினவியமைக்குக்
கடோற்கசன் கொடுத்த விடை)

1. எதிரெதிர் கொற்றவன் வாயிலின்
நின்றவர் யாரென வெய்துதலும்
'அதிர்முர சக்கொடி யோன்அர
வக்கொடி அரசனி டைப்பகர்வான்
முதிரவு ரைத்ததொர் மொழியுள
தச்சொன்மொ ழிந்திட வந்தனன்யான்
எதிரறு வெற்றிய ரிக்கொடி
யோன்மகன்' என்றனன் விக்ரமனே.

(கடோற்கசன் அவையுட் புகுதல்)

2. அம்மொழி தீயுரும் ஏறென
நீடவை அரசர்செ விப்படலோர்
செம்மொழி யற்றவன் மொழிவழி
சென்றொரு சிறிதும தித்தருளான்
'நும்மொழி விட்டொரு மெய்ம்மொழி
கேள்'என நோதகு நெஞ்சினனும்,
'வெம்மொழி வித்தக எம்மொழி
நுந்தைதன் மெய்ம்மொழி' என்றனனே.

(செய்தியினைச் சொல்லுதல்)

3. 'தன்றிரு மைந்தனை மௌலிது
ணித்தச யத்திர தன்றனைவாள்
வென்றிகொள் காவலர் காவல்மி
குப்பினும் வெயிலவன் வீழ்வதன்முன்
கொன்றிடு வேன்;அது தப்பின
ருங்கன லூடுகு தித்திடுவேன்,
என்றுமொ ழிந்தரன் வாழ்கயி
லாயமும் எய்தினன் வில்விசயன்.

4. 'வஞ்சனை யால்அம ரிற்பகை
தன்னைம லைப்பது பாதகமென்(று)
அஞ்சின னாதலின் நீயறி
யும்படி ஐயன்வி டுத்தனனால்,
எஞ்சினன் நாளையுன் மைத்துனன்
என்றுகொள்' என்றனன் வன்றிறல்கூர்
நெஞ்சினில் வேறொரு சஞ்சல
மற்றநி சாசரன் மாமருகன்.

வேறு

(துரியோதனன் கூற்று)

5. 'மன்மைந்தர் பலரொடும்போய் மறித்தொருவர்
மீளாமல் மலைந்து வீழ
என்மைந்தன் இறந்திடவும் யாதொன்றும்
புகலாமல் இருக்கின் றேன்யான்;

தன்மைந்தன் இறந்தனனும், தான்தழலின்
மூழ்குவனும்; சபதங் கூறி
வின்மைந்தின் மிகுந்தவருக் கழுதிரங்கி
அரற்றுவது வீரந் தானே?

6. 'பயத்திரவின் நடுங்கியரன் பருப்பதம்புக்
கவன்கொடுத்த படையும் வாங்கி
வயத்திரத மால்கடவ வந்தெதிர்தோன்
றுவனுகில் மகர மோதுங்
கயத்திரவி விழுவதன்முன் கையறுதன்
புதல்வனைப்போல் களத்தின் மாளச்
சயத்திரதன் கொடுங்கணையால் தான்படுதல்
உறுதியெனச் சாற்று வாயே.

7. 'என்னினும்பார் தனக்குரியன்; சிலைத்தொழிலில்
சிலைக்குருவாய் எவரும் போற்றும்
மன்னினுந்தான் மிகவலியன்; தண்டெடுத்தால்
உந்தையினும் வலியன்; சால
உன்னினுந்தோள் உரனுடையன்; மதியாமல்
இப்படிநீ உரைக்கல் ஆமோ?
தன்னினும்போர்க் கெளியனே சயத்திரதன்
தானென்று சாற்று வாயே.

8. ஆளையா ணிலையறிவ தல்லதுமற்
றறிபவர்யார்? அணிந்த போரின்
நாளையார் வெல்வரெனத் தெரியுமோ?'
எனநவின்று நகைத்தான் மன்னே,
பாளைவாய் நெடுங்கமுகின் மிடறொடியக்
குலைத்தெங்கின் பழங்கள் வீழ
வாளைபாய் குருநாடும் எந்நாடு
முழுதாளும் மன்னர் கோமான்.

(அங்கர் கோமான் கன்னனின் கூற்று)

9. 'தாரரசன் மகன்துச்சா தனன்மகன்சல்
லியன்மகன்வேல் சகுனி என்னும்
பேரரசன் மகன்முதலா எத்தனைபேர்
பட்டாலும் பெரிய தன்றே

பாரரசா ளுதற்கிருந்த பார்த்தன்மா
மகன்ஒருவன் பட்டா ஞகில்
ஆரரசுக் கினியுரியார், அந்தோ'என்
றுரைத்தான்மற் றங்கர் கோமான்.

10. 'அங்கிருந்து சயத்திரதன் ஆவிகவர்ந்
திடுவலென ஆண்மை கூறிப்
பங்கிருந்த உமாபதிபால் பணிந்துவரம்
பெறச்சென்றுன் பார்த்த ஞகில்,
கொங்கிருந்த தாராய்! நின் குடைநிழற்கீழ்
இதுகாலங் கூட்டங் கூடி
இங்கிருந்த வேழையரேம் என்செயமற்
றிருக்கின்றேம்?' என்று சொன்ஞன்.

(கடோற்கசன் வீர மொழிகள்)

11. இவன்மொழிந்த இகல்உரைகேட் டிடிம்பன்மரு
மகன்வெகுளுற் 'றென்சொன் ஞலும்
அவனிதல முழுதுமினி அரசாள
நினைந்திருந்தீர் அறிவி லீர்காள்,
சிவனெரிசெய் புரம்போலும் பாடிவீடு
அழலூட்டிச் சேனை யாவும்
பவனன்மகன் மகன்என்னும் பரிசறியத்
தொலைத்திடு படுத்து வேனே!

12. 'தசைகுருதி மிசையொழுகத் தனித்தனியே
எதிர்த்தவரைத் தலைகள் சிந்த
விசையன்வர வேண்டுமோ? மற் றுள்ளார்தி
ரண்டுவர வேண்டு மோதான்?
நிசைபுலரு முனைமுனைந்து நீறுக்கி
விடுகுவன்,என் நிருபன் சொன்ன
அசைவில்மொழி மறுத்துடற்றல் ஆகாதென்
றிருக்கின்றேன், அறிகி லீரே.

13. 'இருவரெதி ரெதிர்தம்மில் இகல்பொருதல்
உலகியற்கை; யாருங் கூடிப்
பருவமுருத் தனிக்குதலைப் பாலகனுக்
காற்றுமல் பறந்து போனீர்;

ஒருவனெடுந் தேரழிக்க ஒருவன்மலர்க்
கைதுணிக்க ஒருவன் பின்னைப்
பொருவனென அறைகூவிப் பொன்றுவித்தான்;
இதுகொண்டோ, புகல்கின் றீரே!'

(துரியோதனன் சீற்றம்)

14. வரைக்குவமை பெறுந்தடந்தோள் வீமன்மகன்
இப்படியே மதியான் ஆகி
உரைக்குமொழி கேட்டிருந்த உரகமணி
கொடிவேந்தன் உருத்து நோக்கி,
'இருக்குமெழில் அவைக்கேற்ற இயம்பாமல்
தன்மதத்தால் இயம்பு கின்ற
அரக்கிமக னுடனென்றுங் கழறேல்'என்
றனன் இருந்த அரசர் யார்க்கும்.

(பின்பு கடோற்கசன், சயத்திரதன் உயிர்போதல் உறுதி எனக் கூறி மீண்டனன் என்க).

குறிப்புரை

1. நின்றவர் – நின்றுகொண்டிருந்த காவலர். முரசக் கொடியோன்: தருமன். அரவக் கொடி அரசன்: துரியோதனன். முதிர – மேன்மையுற. அரிக்கொடியோன்: வீமன். விக்கிரமன் – பராக்கிரமனுகிய கடோற்கசன்.

2. தீ உரும் ஏறு என – தீயை உமிழும் பேரிடி போல. செம்மொழியற்றவன்: துரியோதனன். நோ தகு – புதல்வனை இழந்ததால் வருந்துகின்ற. வித்தகன் – தூதன்.

செம்மொழி, வெம்மொழி: பண்புத் தொகைகள்.

3. மௌலி – தலை. மைந்தன் – அபிமன்னியு. வில் விசயன்: அருச்சுனன்.

4. மலைப்பது – கொல்லுவது. ஐயன்: தருமன். எஞ்சினன் – இறந்தனன். நிசாசரன் – இரவில் சஞ்சரிக்கும் அரக்கனுகிய இடிம்பன்.

எஞ்சினன்: கால வழுவமைதி.

5. வில் மைந்தில் மிகுந்தவருக்கு – வில் வலிமையில் மிக்கவருக்கு. அரற்றுவது – கதறுவது.

6. பயத்து இரவின் – அச்சந்தரும் இரவில். பருப்பதம் – கயிலைமலை. மால்: கண்ணன். மகரம் மோதும் கயத்து – மகர மீன்கள் மோதுகின்ற கடலில்.

7. பார்தனக்கு உரியன் – பூமியை ஆளுதற்கு வலிமையுடையன்.

8. நிலை அறிவது – உருவத்தை (மாத்திரம்) அறிவது. பாளை வாய் – பாளையை யுடைய. மிடறு – கழுத்து.

இறுதி யிரண்டடிகளில் உயர்வு நவிற்சியணி பயின்றது. குலைத் தெங்கு: இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

9. தார் அரசன்: துரியோதனன். அங்கர் கோமான்: கன்னன்.

10. பார்த்தன் – அருச்சுனன். கொங்கு – பூந்தாது, வாசனை.

கவர்ந்திடுவல்: தன்மை ஒருமை எதிர்கால வினைமுற்று.

11. பாடி வீடு – பாசறை. பவனன் – வாயு. பரிசு – தன்மை.

12. திசை புலரும் முனம் – இவ்விரவு கழிந்து பொழுது விடிவதற்குள். நிருபன் – அரசன், தருமன். உடற்றல் – போர் செய்தல்.

13. பொன்றுவித்தான் – கொன்றான்.

14. உரகம் அணி – பாம்பின் உருவத்தையுடைய.

## வினாக்கள்

1. வில்லிபுத்தூராரைப்பற்றிக் குறிப்பு வரைக.

2. வாயிற் காவலர் 'யார்' என வினவியமைக்குக் கடோற்கசன் கூறியதென்ன?

3. 'நுந்தை மெய்ம்மொழி எம்மொழி?' என்ற வினாவிற்குக் கடோற்கசன் சொல்லியன யாவை?

4. அருச்சுனன் சென்ற செய்தி கேட்ட துரியோதனன் கூறியவற்றைத் தொகுத்து எழுதுக.

5. குருநாட்டு வளம் எவ்வாறு புனைந்து கூறப்பட்டது?

6. கடோற்கசன் மொழிந்ததைக் கேட்ட கன்னன் யாது கூறினன்?

7. கன்னனுரை கேட்டதும் கடோற்கசன் கனன்று கூறியன யாவை?

8. 'அரக்கி மகனுடன் ஒன்றுங் கழறேல்'—இடம் சுட்டி விளக்குக.

9. தொகை யிலக்கணம் தருக:

அதிர்முரசம், அரிக்கொடி, செம்மொழி, வன்றிறல்.

# 3. பெரிய புராணம்

## கண்ணப்ப நாயனார் புராணம்

பெருமை வாய்ந்த சிவனடியார்களின் புராணமாதலால் பெரிய புராணம் எனப்பட்டது. இதற்கு இந்நூலாசிரியர் இட்ட பெயர் திருத்தொண்டர் புராணம் என்பது. சைவத் திருமுறைகளுள் இது பன்னிரண்டாந் திருமுறை யாகும்.

இப் பெருநூலின் ஆசிரியர் சேக்கிழார் என்பவராவர். இஃது இவர் தம் குடிப்பெயரே. இவர்தம் இயற்பெயர் அருண்மொழித் தேவர் என்பது. தொண்டை நாட்டிலுள்ள குன்றத்தூர் இவரூர். இவர் வேளாளர் மரபினர். சிவ சமயத்தவர். இவர்தம் காலம் கி.பி. 11ஆம் நூற்றாண்டாகும். 12ஆம் நூற்றாண்டு எனவுங் கூறுவர் சிலர்.

இவர் அநபாய சோழனிடத்து அமைச்சராயிருந்து உத்தமச் சோழப் பல்லவர், தொண்டர் சீர் பரவுவார் என அவனால் பட்டஞ் சூட்டப் பெற்றுச் சிறப்புற்றவர். அச்சோழனின் வேண்டுகோளின்படியே இப் புராணத்தைப் பாடினார் என்பது வரலாறு.

பொத்தப்பி நாடு என்பது ஒரு மலை நாடு. அந்நாட்டினர் யாவரும் வேடர்கள். அவர்கள் தலைவன் நாகன் என்பவனுக்கு ஒரு மைந்தன் பிறந்தனன். மைந்தன் திண்மையாகத் தோன்றியமையால் திண்ணன் எனப் பெயர் சூட்டப் பெற்றனன். முதுமை எய்திய நாகன் தலைமையைத் திண்ணன் மீது வைத்தனன். திண்ணனும் வேடர்களும் காட்டு விலங்குகளைக் கொல்வான் வேண்டி வேட்டைக்குப் புறப்பட்டார்கள்.

வேட்டையாடுகையில் கொழுத்த பன்றியொன்று எழும்பி வலைகளை யறுத்துக்கொண்டு கடுவிசையுடன் ஓடிற்று. அதனைத் தொடர்ந்தார் திண்ணனார். அவர்பின் நாணன் காடன் என்ற இருவர் வேடர் தொடர்ந்தனர். தொலைதூர மோடித் திண்ணனார் பன்றியைக் கொன்றார். பின்பு நாணனும் காடனும் அவருடன் சேர்ந்தனர். பசி வருத்தியதால் பன்றியைத் தீயிலிட்டு உண்வான் கருதி அதனைச் சுமந்து சென்று பொன்முகலி யாற்றின் கரையினில் ஒரு மர நிழலை யடைந்தனர். தீ யுண்டுபண்ணக் காடனைப் பணித்துத் திண்ணனார் நாணனுடன், அரைக் காதத்துக் கப்பால் காட்சி யளித்த திருக்காளத்திமலையினை நோக்கி நடந்தார். ஆங்கே சோலையின் கண் வீற்றிருக்கும் குடுமித்தேவரை (சிவபெருமானை)க் காண வேண்டும் என்பது இவர்தம் ஆசை. மலையருகே செல்லச் செல்லத் திண்ணனார் உள்ளத்தே குடுமித் தேவரின்பால் மாளாத அன்பு சுரக்கின்றது. சென்று கண்டார்.

(கண்ட அவர் செயல்)

1. மாகமார் திருக்கா ளத்தி
   மலைஎழு கொழுந்தா யுள்ள
ஏகநா யகரைக் கண்டார்;
   எழுந்தபே ருவகை யன்பின்
வேகமா னதுமேற் செல்ல
   மிக்கதோர் விரைவி னோடு
மோகமாய் ஓடிச் சென்றார்;
   தழுவினார்; மோந்து நின்றார்.

2. நெடிதுபோ துயிர்த்து நின்று
நிறைந்தெழு மயிர்க்கால் தோறும்
வடிவெலாம் புளகம் பொங்க
மலர்க்கணீர் அருவி பாய
'அடியனேற் கிவர்தாம் இங்கே
அகப்பட்டார் அச்சோ' என்று
படியிலாப் பரிவு தானோர்
படிவமாம் பரிசு தோன்ற,

3. 'வெம்மறக் குலத்து வந்த
வேட்டுவச் சாதி யார்போல்
கைம்மலை கரடி வேங்கை
அரிதிரி கானந் தன்னில்
உம்முடன் துணையா யுள்ளார்
ஒருவரும் இன்றிக் கெட்டேன்!
இம்மலைத் தனியே நீரிங்
கிருப்பதே!' என்று நைந்தார்,

(நைந்தவர், தேவர்மீது பச்சிலையும் பூவும் இட்டிருக்கக் கண்டு, அது செய்தவர் ஒரு பார்ப்பனர் என நாணன் சொல்லக் கேட்டார். இறைவற்கு இறைச்சி கொண்டுவரப் புறப்பட்டார்.)

4. 'இவர்தமைக் கண்டே னுக்குத்
தனியராய் இருந்தார், என்னே!
இவர்தமக் கமுது செய்ய
இறைச்சியும் இடுவா ரில்லை;
இவர்தமைப் பிரிய வொண்ணா
தென்செய்கேன்? இனியான் சால
இவர்தமக் கிறைச்சி கொண்டிங்
கெய்தவும் வேண்டும்' என்று,

5. போதுவர் மீண்டு செல்வர்
புல்லுவர் மீளப் போவர்
காதலின் நோக்கி நிற்பர்
கன்றகல் புனிற்றுப் போல்வர்

'நாதனே! அமுது செய்ய
  நல்லமெல் லிறைச்சி நானே
கோதறத் தெரிந்து வேறு
  கொண்டிங்கு வருவேன்' என்பார்.

(இங்ஙனம் பிரியாமற் பிரிந்து சென்ற திண்ணனார் முன்பு காடனை விட்டு வந்த இடஞ் சென்று பன்றித் தசையை அம்பால் ஈர்த்துக் காய்ச்சு வாரானார்.)

6. கோலினிற் கோத்துக் காய்ச்சிக்
  கொழுந்தசை பதத்தில் வேவ
வாலிய சுவைமுன் காண்பான்
  வாயினில் அதுக்கிப் பார்த்துச்
சாலவும் இனிய வெல்லாம்
  சருகிலை இணைத்த கல்லை
ஏலவே கோலிக் கூட்டி
  யதன்மிசை யிடுவார் ஆனார்!

('மயல் கொண்டான் திண்ணன்; மாற்றற்கு அரிது' எனக் கானவர் மீண்டனர். திண்ணனார் ஊனமுது ஒரு கையிலும், தனு ஒரு கையிலும், மஞ்சன நீர் வாயிலும், பூசனை மலர்கள் தம் குடுமியிலுமாகக் கொண்டு, 'எம்பிரானார் சாலப் பசிப்பர்' என்று இரங்கிக் காளத்தி நோக்கிக் கடுகினார்.)

7. இளைத்தனர் நாய னார்என்(று)
  ஈண்டச்சென் றெய்தி வெற்பின்
முளைத்தெழு முதலைக் கண்டு,
  முடிமிசை மலரைக் காலில்
வளைத்தபொன் செருப்பால் மாற்றி,
  வாயின்மஞ் சனநீர் தன்னை
விளைத்தஅன் புமிழ்வார் போல
  விமலனார் முடிமேல் விட்டார்.

8. தலைமிசைச் சுமந்த பள்ளித்
  தாமத்தைத் தடங்கா ளத்தி
மலைமிசைத் தம்பி ரானார்
  முடிமிசை வணங்கிச் சாத்திச்

சிலைமிசைப் பொலிந்த செங்கைத்
திண்ணனார், சேர்த்த கல்லை
இலைமிசைப் படைத்த ஊனின்
திருவமு தெதிரே வைத்து,

9. ‘கொழுவிய தசைகள் எல்லாங்
கோலினில் தெரிந்து கோத்தங்(கு)
அழலுறு பதத்திற் காய்ச்சிப்
பல்லினால் அதுக்கி நாவில்
பழகிய இனிமை பார்த்துப்
படைத்தஇவ் விறைச்சி சால
அழகிது, நாய னீரே
அமுதுசெய் தருளும்’ என்றார்.

(இங்ஙனம் அமுது படைத்த திண்ணனார் இரவெல்லாம் தேவரைக் காத்து நின்று விடிந்ததும், அவர்க்கு ஊனமுது கொண்டு மீள வேட்டைக்குச் சென்றுவிட்டார். என்றும்போல அன்றும் சிவகோசரியார் வழிபாடு நிகழ்த்த குடுமித் தேவரைக் குறுகினார். இறைவரிடம் எலும்பு முதலியவற்றைக் கண்டு துடித்து அவற்றை அலகிட்டு நீக்கி, மீண்டும் முழுகி, வழிபாடு செய்து வீடு திரும்பினார். திண்ணனார் வந்தார்.)

வேறு

10. ஊனமுது கல்லையுடன் வைத்‘திதுமுன்
னையினன்றால்;
ஏனமொடு மான்கலைகள் மரைகடமை
இவையிற்றில்
ஆனவுறுப் பிறைச்சியமு(து), அடியேனும்
சுவைகண்டேன்;
தேனுமுடன் கலந்ததிது தித்திக்கும்’
எனமொழிந்தார்.

11. இப்பரிசு திருவமுது செய்வித்துத் தம்முடைய
ஒப்பரிய பூசனைசெய் தந்நெறியில் ஒழுகுவார்
எப்பொழுது மேன்மேல்வந் தெழும்அன்பால்
காளத்தி
அப்பரெதிர் அல்லுறங்கார் பகல்வேட்டை
யாடுவார்.

(சிவகோசரியார் கனவில் சிவனுர் தோன்றி யருளுதல்)

12. ‘அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல்
அன்பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமையறியும்
அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய
வாமென்றும்
அவனுடைய நிலைஇவ்வா றறிநீ’என்
றருள்செய்தார்

13. ‘உனக்கவன்றன் செயல்காட்ட நாளைநீ
ஒளித்திருந்தால்
எனக்கவன்றன் பரிவிருக்கும் பரிசெல்லாங்
காண்கின்ருய்
மனக்கவலை ஒழி’கென்று மறைமுனிவர்க்
கருள்செய்து
புனற்சடிலத் திருமுடியார் எழுந்தருளிப் போயினுர்.

(அங்ஙனமே சிவகோசரியார் மறைந்திருந்தார். திண்ணனுர் பண்டு போல் அன்றும் ஊன் முதலியன கொண்டு காளத்தியப்பரை அணையும போழ்தில்,)

வேறு

14. அண்ணலார் திருக்கா ளத்தி
அடிகளார் முனிவ ஞர்க்குத்
திண்ணனுர் பரிவு காட்டத்
திருநய னத்தில் ஒன்று
துண்ணென உதிரம் பாய
இருந்தனர் தூரத் தேயவ்
வண்ணவெஞ் சிலையார் கண்டு
வல்விரைந் தோடி வந்தார்.

15. வந்தவர் குருதி கண்டார்
மயங்கினுர் வாயில் நன்னீர்
சிந்திடக் கையில் ஊனுஞ்
சிலையுடன் சிதறி வீழக்

கொந்தலர் பள்ளித் தாமங்
குஞ்சிநின் றலைந்து சோரப்
பைந்தழை அலங்கல் மார்பர்
நிலத்திடைப் பதைத்து வீழ்ந்தார்.

(விழுந்தவர் எழுந்து இறைவனார் கண்ணைத் துடைத்தார். துடைத்தும் குருதி யொழுக்கு நின்றிலது. அது கண்டு அழுங்கிச் சென்று பச்சிலை மருந்து கொணர்கின்றார்.)

16. 'என்செய்தால் தீரு மோதான்
எம்பிரான் திறத்துத் தீங்கு
முன்செய்தார் தம்மைக் காணேன்;
மொய்கழல் வேடர் என்றும்
மின்செய்வார் பகழிப் புண்கள்
தீர்க்குமெய் மருந்து தேடிப்
பொன்செய்தாழ் வரையிற் கொண்டு
வருவனான்' என்று போனார்.

17. நினைத்தனர் வேறு வேறு
நெருங்கிய வனங்கள் எங்கும்
இனத்திடைப் பிரிந்த செங்கண்
ஏறென வெருக்கொண் டெய்திப்
புனத்திடைப் பறித்துக் கொண்டு
பூதநா யகன்பால் வைத்த
மனத்தினுங் கடிது வந்தம்
மருந்துகள் பிசைந்து வார்த்தார்.

(கண்ணிலே கண் அப்புதல்)

18. மற்றவர் பிசைந்து வார்த்த
மருந்தினால் திருக்கா ளத்திக்
கொற்றவர் கண்ணிற் புண்ணீர்
குறைபடா திழியக் கண்டும்
'இற்றையின் நிலைமைக் கென்னோ
இனிச்செயல்' என்று பார்ப்பார்
உற்றநோய் தீர்ப்ப தூனுக்(கு)
ஊனெனும் உரைமுன் கண்டார்.

19. 'இதற்கினி என்கண் அம்பால்
இடந்தப்பின் எந்தை யார்கண்
அதற்கிது மருந்தாய்ப் புண்ணீர்
நிற்கவும் அடுக்கும்' என்று
மதர்த்தெழும் உள்ளத் தோடு
மகிழ்ந்துமுன் இருந்து தங்கண்
முதற்சரம் அடுத்து வாங்கி
முதல்வர்தங் கண்ணில் அப்ப,

20. நின்றசெங் குருதி கண்டார்
நிலத்தினின் றேறப் பாய்ந்தார்
குன்றென வளர்ந்த தோள்கள்
கொட்டினார் கூத்தும் ஆடி
'நன்றுநான் செய்த இந்த
மதி'என நகையுந் தோன்ற
ஒன்றிய களிப்பி னாலே
உன்மத்தர் போல மிக்கார்.

(சிவனார் வலக்கண் குருதி யொழுக்கு நின்றது. ஆயினும் இடக் கண்ணினும் குருதி யொழுக்கினர் குமித்தேவர். திண்ணனார் கண்டார்.)

21. கண்டபின் 'கெட்டேன்; எங்கள்
காளத்தி யார்கண் ஒன்று
புண்தரு குருதி நிற்க
மற்றைக்கண் குருதி பொங்கி
மண்டுமற் றிதனுக் கஞ்சேன்;
மருந்துகை கண்டேன்; இன்னும்
உண்டொரு கண்ணக் கண்ணை
இடந்தப்பி ஒழிப்பேன்' என்று,

(தம் மறு கண்ணையும் இடந்திடத் துணிதல்.)

22. கண்ணுதல் கண்ணில் தங்கண்
இடந்தப்பின் காணும் நேர்பா(டு)
எண்ணுவார் தப்பி ரான்றன்
திருக்கண்ணில் இடக்கால் ஊன்றி

உண்ணிறை விருப்பி னேடும்
ஒருதனிப் பகழி கொண்டு
திண்ணனார் கண்ணில் ஊன்றத்
தரித்திலர் தேவ தேவர்.

(இறைவனார் செயல்)

23. செங்கண்வெள் விடையின் பாகர்,
திண்ணனார் தம்மை யாண்ட
அங்கணர், திருக்கா ளத்தி
அற்புதர் திருக்கை அன்பர்
தங்கண்முன் இடக்குங் கையைத்
தடுக்க,மூன் றடுக்கு நாக
கங்கணர் அமுத வாக்குக்
'கண்ணப்ப நிற்க' என்ற.

24. பேறினி இதன்மேல் உண்டோ?
பிரான்திருக் கண்ணில் வந்த
ஊறுகண் டஞ்சித் தங்கண்
இடந்தப்ப உதவுங் கையை
ஏறுயர்த் தவர்தங் கையால்
பிடித்துக்கொண் 'டென்வ லத்தில்
மாறிலாய் நிற்க' வென்று
மன்னுபே ரருள்பு ரிந்தார்!

குறிப்புரை

1. மாகம் ஆர்–ஆகாயத்தை அளாவிய

2. இச்செய்யுளும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். இவ்வாறு வருவதனைக் குளகம் என்பர். அச்சோ: வியப்புக் குறிப்பு. படி இலாப் பரிவு–உவமை இல்லாத அன்பு. படிவம்–வடிவம். பரிசு–தன்மை.

3. கைம்மலை–யானை; காரணப் பெயர். அரி–சிங்கம்.

4. சால–போதிய.

5. புல்லுவர்–தழுவுவார். புனிற்று (புனிறு + ஆ) – அண்மையில் ஈன்றதாகிய பசு. 'கன்று அகல் புனிற்றுப் போல்வர்': உவமை யணி.

6. கோத்து: பகுதி 'கோ'. வாலிய–இனிய. சருகு இலை–உலர்ந்த இலை. கல்லை–இலைக் கலம்.

7. ஈண்ட – விரைவாக. முதல் – கடவுள். விளைத்த – முதிர்ந்த. விமலன் – குற்றம் அற்றவர்.

8. பள்ளித் தாமம்—இறைவனுக்குச் சாத்துகின்ற மாலை. தடம் — பெருமை. கல்லை இலை—கல்லையாகிய இலை. சிலை—வில். செம்மை + கை = செங்கை.

9. கொழுவிய—கொழுத்த.

10. முன்னையின் + நன்று = முன்னையின்னன்று. ஆல்: அசைநிலை. ஏனம் – காட்டுப் பன்றி. கலை – ஆண்மான். மரை, கடமை: மான் வகைகள்.

11. இப்பரிசு—இவ்விதமாக. அல்—இரவு.

13. பரிவு இருக்கும் பரிசு—அன்பிருக்கும் தன்மை. புனல் சடிலம்—கங்கை யணிந்த சடை. காண்கின்றாய்: கால வழுவமைதி.

14. நயனம்—கண். சிலையார் – வில்லார்; திண்ணனார்.

15. குருதி – இரத்தம். நொந்து அலர்—கொத்தாக அலர்ந்த. குஞ்சி—குடுமி. பசுமை + தழை = பைந்தழை: பண்புத்தொகை. அலங்கல் மார்பர்: திண்ணனார். அலங்கல்—மாலை.

16. மொய் – வலிமை. மின்செய் வார் பகழிப் புண்கள்—ஒளி வீசுகின்ற நீண்ட அம்புகளால் உண்டான புண்கள். பகழிப் புண்கள்: மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை. இப்புண்களை ஆற்றும் பச்சிலை வேடர் அறிவர். பொன் செய்—அழகு விளங்கும். வருவன் + நான் = வருவனான்.

17. நினைத்தனர்: முற்றெச்சம். 'இனத்திடைப் பிரிந்த செங்கண் ஏறென': உவமை யணி. ஏறு—இடபம்; ஆண்சிங்கமும் ஆம். வெருக் கொண்டு—(அப்பருக்கு என்ன நேருமோ என) அச்சங்கொண்டு.

18. உரை முன் கண்டார் – பழமொழி மனத்திலே தோன்றப் பெற்றார்.

19. என் கண் – என்னுடைய கண்ணை. இடந்து – தோண்டி. மதர்த்து – பொங்கி. உள்ளம்—அன்பு. தம் கண் முதல்—தம் கண்களுள் முதன்மையானதாகிய வலக் கண்ணை. சரம்—அம்பு.

20. உன்மத்தர்—பித்துக்கொண்டவர்.

21. மண்டும்—அதிகமாகும்.

22. கண் + நுதல் = கண்ணுதல்; சிவபெருமான். காணும் நேர்பாடு. எண்ணுவார்—இடக் கண்ணை இடந்த பிறகு எவ்விதம் கண்டு சிவனாரின் இடக்கண்ணில் அப்புதல் இயலும் என எண்ணியவர். எண்ணுவார்: வினையாலணையும் பெயர்.

23. 'அற்புதர் திருக்கை, (திண்ணனார்) கையைத் தடுக்க, வாக்கு, "நிற்க" என்ற' என்க. செங்கண் ... அற்புதர்—சிவபெருமான். அம் கண்ணர்—அங்கணர். 'மூன்றடுக்கு வாக்கு' என்க.

24. ஏறு உயர்த்தவர் —இடபக் கொடியை யுடையவராகிய சிவனார்.

## வினாக்கள்

1. பெரிய புராணத்தைப்பற்றியும் அதன் ஆசிரியரைப்பற்றியும் குறிப்பு வரைக.

2. இடஞ் சுட்டிப் பொருளும் தருக.

(அ) அடியனேற் கிவர்தாம் இங்கே அகப்பட்டார், அச்சோ.

(ஆ) அன்பு உமிழ்வார்போல விமலனார் முடிமேல் விட்டார்.

(இ) எனக்கவன் பரிவிருக்கும் பரிசெல்லாங் காண்கின்றாய்.

(ஈ) ஊனுக்கு ஊனெனும் உரை முன் கண்டார்.

3. காளத்தி மலை நோக்கி நடந்த திண்ணனார் குடுமித் தேவரைக் கண்டதும் உற்ற நிலையும் உரைத்த மொழியும் யாவை?

4. 'கன்றகல் புனிற்றா' உவமையாகக் காட்டப்பட்ட இடத்தினைச் சுட்டி விளக்குக.

5. இறைவற்கு ஊனமுது எவ்வாறு பக்குவஞ் செய்யப்பட்டது?

6. குடுமித் தேவருக்குத் திண்ணனார் செய்த வழிபாட்டினை எழுதுக.

7. சிவகோசரியார் கனவில் சிவனார் சொற்றது என்னை?

8. இறைவர் கண்ணில் குருதியைக் கண்ட திண்ணனார் உற்ற நிலை யாது?

9. இறைவனார் இடக் கண்ணிலும் இரத்தங் கண்டபோது திண்ணனார் சொன்னதும் செய்ததும் என்ன?

10. திண்ணனார் இடக் கண்ணை இடந்திட எடுக்கவும் இறைவர் செய்தது யாது?

11. இலக்கணப் பெயர் தருக.

(அ) இவர்தமைக் கண்டேனுக்குத் தனியராய் இருந்தார், என்னே!

(ஆ) வாங்கிய சுவைமுன் காண்பான் வாயினில் அதுக்கிப் பார்த்து...

(இ) ஊனமுது.

(ஈ) மனக்கவலை ஒழிக.

(உ) மொய்கழல் வேடர்.

(ஊ) ஏறு உயர்த்தவர்.

# 4. திருவிளையாடற் புராணம்

## இந்திரன் பழி தீர்த்த படலம்

[சிவனூர் மதுரைப் பதியிலே நிகழ்த்திய திருவிளையாடல்களைச் சொல் லும் நூலாதலின் திருவிளையாடற் புராணம் எனப் பெயர் பெற்றது இந் நூல்.

இந்நூலின் ஆசிரியர் பரஞ்சோதி முனிவர் ஆவர். சோழ மண்டலத்தி லுள்ள திருமறைக் காடு என்பது இவரூர். வழி வழிச் சைவர்களாகிய அபிடேகத்தர் மரபில் மீனாட்சி சுந்தர தேசிகர் என்பவரின் மைந்தராகப் பிறந்தவர். இவரது காலம் 17ஆம் நூற்றாண்டு.

இந்திரனை ஒரு காலத்தில் கொலைப் பழி பிடித்துக்கொண்ட தென்பது புராணம். அதனை அவன் தீர்த்துக்கொண்ட கதையைச் சொல்வது 'இந்தி ரன் பழி தீர்த்த படலம்' எனப்பட்டது.

(துவட்டா என்பவனின் மகனை இந்திரன் கொன்றனன். உடனே துவட்டா ஒரு வேள்வி செய்ய, அவ்வேள்விக் குண்டத்திலிருந்து விருந்திரா சுரன் என்னும் ஒரு கொடிய அசுரன் தோன்றலானான். அவ்வசுரனை இந்திரன்மீது ஏவினான் துவட்டா. அவ்வசுரனோடு போருடற்ற ஆற்றாத இந்திரன் பிரமனிடம் சென்று முறையிடுகின்றனன். பிரமன் சொல்லு கின்றனன்:)

1. 'ஆற்றவும் பழையதுன் அங்கை வச்சிரம்;
மாற்றலர் உயிருண வலியின் றுதலால்
வேற்றொரு புதியது வேண்டு மால்; இனிச்
சாற்றுதும் அதுபெறும் தகைமை, கேட்டியால்.

2. 'தொடையகன் மார்ப, நாம் தூய பாற்கடல்
கடையுநாள் அசுரருஞ் சுரரும் கையில்வெம்
படையொடும் அடையன்மின்; பழுதென்(று) அப்படை
அடையவுந் ததீசிபால் அடைவித் தாமரோ.

3. 'சேட்படு நாள்நனி செல்லத் தேவரா,
வாட்படை யவுணரா, வந்து கேட்டிலர்;
ஞாட்படை படையெலா ஞான நோக்கினால்
வேட்படை வென்றவன் விழுங்கி னனரோ!

4. ‘விழுங்கிய படையெலாம் வேற றத்திரண்(டு)
ஒழுங்கிய தான்முது கந்தண் டொன்றியே;
எழுங்கதிர்க் குலிசமாம்; அதனை யெய்துமுன்
வழங்குவன் கருணையோர் வடிவ மாயினான்.’

(பிரமன் இவ்வாறு கூறலும் இந்திரன் ததீசி முனிவனிடம் சென்று வேண்டுகின்றனன்.)

5. அடிகணீர் மருதமொன்(று), அதனை வேண்டியிம்
முடிகொள்வா னவரொடு மூந்தி னேன், அது
செடிகொள்கா ரிருளுடல் அவுணர்த் தேய்த்தெமர்
குடியெலாம் புரப்பதோர் கொள்கைத் தாயது.

6. யாதெனின் இனையதுன் யாக்கை யுள்ளதென்(று)
ஓதலும், யாவையும் உணர்ந்த மாதவன்
ஆதவற் கண்டதா மரையின் ஆனனப்
போதலர்ந்(து) இன்னன புகல்வ தாயினான்.

(ததீசி மொழிந்ததும் செய்ததும்)

7. ‘நடுத்தயா விலார்தமை நலியத் துன்பநோய்
அடுத்தயா வருந்திரு வடைய யாக்கையைக்
கொடுத்தயா வறம்புகழ் கொள்வ னேயெனின்,
எடுத்தயாக் கையின்பயன் இதனின் யாவதே?’

வேறு

8. என்றனன் கரணம் ஒன்றி
எழுகருத் தறிவை யீர்ப்ப
நின்றனன் பிரம நாடி
நெறிகொடு கபாலங் கீண்டு
சென்றனன் விமான மேறிச்
சேர்ந்தனன் உலகை நோன்பால்
வென்றவன் துறக்கம் புக்கு
வீற்றினி திருந்தா னம்மா!

(இந்திரன் முனிவனின் முதுகந் தண்டினை வச்சிரப் படையாகச் செய்து வானோர் சேனையொடு அசுரனை எதிர்க்கப் புறப்பட்டனன். இரு சேனைக்கும் பெரும்போர் நடந்தது.)

9. தாளொடு கழலும் அற்றார்
தலையொடு முடியு மற்றார்
தோளொடு வீர மற்றார்
தும்பையோ டமரு மற்றார்
வாளொடு கரமு மற்றார்
மார்பொடு கவச மற்றார்
கோளொடு மாண்மை யற்றார்
குறைபடக் குறையா மெய்யர்.

10. தொக்கன கழுகு சேனஞ்
சொரிகுடர் பிடுங்கி யீர்ப்ப,
உக்கன குருதி மாந்தி
யொட்டல்வாய் நெட்டைப் பேய்கள்
நக்கன பாடல் செய்ய,
ஞாட்பினுட் கவந்த மாடப்
புக்கன, பிணத்தின் குன்றம்
புதைத்தபார் சிதைத்த தண்டம்.

(இந்திரன் குலிசம் விடுதலும் அசுரன் செயலும்)

11. வீங்கிரு ளொதுங்க மேக
மின்விதிர்த் தென்னக் கையில்
ஓங்கிருங் குலிச வேலை
யொல்லென விதிர்த்த லோடும்
தீங்குளம் போன்றி ருண்ட
திணியுடற் கள்வ னஞ்சி
வாங்கிருங் கடலில் வீழ்ந்தான்
மறைந்தமை நாக மொத்தான்.

(இந்திரன் அகத்திய முனிவனிடம் சென்று நிகழ்ந்தது கூறி வேண்டுகின்றனன்.)

12. ‘யாவையு முணர்ந்த வெந்தைக்
கியானெடுத் துணர்த்து கின்ற
தாவதென்? அமருக் காற்ற[து]
ஆழிபுக் கொளித்தா னவி

வீவது மவனுல் வந்த
  விழுமநோ யெல்லா மின்று
போவதுங் கருதி நுப்பாற்
  புகுந்தனம் அடிகள்,' என்றான்.

(அகத்தியரின் செயல்)

13. கைதவன் கரந்து வைகுங்
  கடலைவெற் படக்குங் கையிற்
பெய்துழுந் தெல்லைத் தாக்கிப்
  பருகினுன்; பிறைசேர் சென்னி
ஐயன தருளைப் பெற்றார்க்
  கதிசய மிதென்கொல்! மூன்று
வையமுத் தொழிலுஞ் செய்ய
  வல்லவர் அவரே யன்றோ!

(வற்றிய கடலின் காட்சி)

14. அறந்துறந் தீட்டு வார்தம்
  அரும்பெறற் செல்வம் போல
வறந்தன படுநீர்ப் பௌவம்;
  வடவைகட் புலப்பட் டாங்கு
நிறைந்தசெம் மணியும், அத்தீ
  நீண்டெரி சிகைபோல் நீண்டு
சிறந்தெழு பவளக் காடும்
  திணியிருள் விழுங்கிற் றம்மா!

15. வறந்தநீர் தன்னின் மின்னு
  வாள்விதிர்த் தென்னப் பன்மீன்
எறிந்தன, நெளிந்த நாகம்,
  இமைத்தன வளையும் முத்தும்,
செறிந்தன கரந்த யாமை,
  சேர்ந்தபல் பண்டஞ் சிந்தி
முறிந்தன வங்கம், கங்க
  முக்கின சிறுமீ னெல்லாம்!

(ஆங்கொரு மலைமீது விருத்திராசுரன் தோற்றம்)

16. செருவினுடைந்து போன
செங்கண்வா ளவுணன் அங்கோர்
அருவரை முதுகிற் கார்போல்
அடைந்துவா ளுடர் செய்த
உருகெழு பாவந் தானோர்
உருவெடுத் திருந்து நோற்கும்
பரிசென நோற்று னின்னும்
பரிபவ விளைவு பாரான்.

(அசுரனின் அழிவு)

17. கைதவ நோன்பு நோற்கும்
கள்வனைக் கண்டு வானோர்
செய்தவ மனையான் யாணர்
வச்சிறஞ் சீரிப் பான்போற்
பொய்தவன் றலையைக் கொய்தான்;
புணரிவாய் நிறையச் சோரி
பெய்தது; வலாரி தன்னைப்
பிடித்தது பிரமச் சாயை.

(பிரமச் சாயை சூழவும், அஞ்சிய இந்திரன், அது தீர்ப்பான் வேண்டி, வியாழ பகவானின் கட்டளைப்படி, பூலோகம் போந்து கடம்பவனத்தை யடைதலும் அவன் பழி நீங்குவதாயிற்று.)

வேறு

18. தொடுத்தபழி வேறாகி விடுத்தகன்ற(து);
இந்திரன்றான் சுமந்த பாரம்
விடுத்தவனைத் தளவிறந்த மகிழ்வெய்தித்
தேசிகன்பால் விளம்பப் பாசங்
கெடுத்தவன் ‘மா தலம்புனித தீர்த்தமுள;
இவணமக்குக் கிடைத்தல் வேண்டும்;
அடுத்தறிக’ வெனச்சிலரை விடுத்தவ்வே
றுநிலநின் றப்பாற் செல்வான்.

19. அருவிபடிந் தருவியெறி மணியெடுத்துப்
பாறையிலிட் டருவி நீர்தூய்க்
கருவிரல்கொய் தலர்சூட்டிக் கனியூட்டி
வழிபடுவ கல்லா மந்தி;
ஒருதுறையில் யாளிகரி புழைக்கைமுகந்(து)
ஒன்றற்கொன் றூட்டி யூட்டிப்
பருகுவன; புலிமுலைப்பால் புல்வாய்க்கன்(று)
அருத்தியிடும் பசிநோய் தீர!

20. நெளியராக் குருளைவெயில் வெள்ளிடையிற்
கிடந்துயங்கி நெளியப் புள்ளே(று)
ஒளியருச் சிறைவிரித்து நிழல்பரப்பப்
'பறவைநோ யுற்ற தேகொல்
அளியவா யச்சோ'வென் றேதியயன்
மடமந்தி யருவி யூற்றுந்
துளியநீர் வளைத்தசும்பின் முகந்தெடுத்துக்
கருங்கையினுற் சொரிவ மாதோ!

(ஆங்கொரு சிவலிங்கம் உளதென ஒற்றர் கூறக் கேட்டு, அதனைக் கண்டு, பணிந்து இந்திரன் தன் கவலை தீரப்பெறுகின்றனன்.)

## குறிப்புரை

1. வச்சிரம் – வச்சிரப் படை. மாற்றலர் – பகைவர். 'ஆல்' இரண்டும் அசை நிலைகள். அகம் + கை = அங்கை. கேள் + (ட்) இ = கேட்டி; 'ட்' எழுத்துப் பேறு.

2. அப் படை அடையவும் – அவ் வாயுதங்கள் அனைத்தையும். ததீசி: ததீசி முனிவன். அரோ: அசைநிலை.

3. சேண் படு நாள் – மிக நீண்ட காலம். தேவரா – தேவராகிலும். அவுணர் – அசுரர். ஞாட்பு படை அடை எலாம் – போருக்குப் பொருந்திய அப்படைகள் யாவற்றையும். வேள் படை – மன்மதனுடைய அம்புகளை. அரோ: அசைநிலை.

4. ஒழுங்கியது – ஒழுங்குபட்டது. குலிசம் – வச்சிரப் படை. எய்தும் முன் – கேட்பதற்கு முன்.

5. மருதது – மறக்காமல் அளிக்க வேண்டுவது. செடி கொள் – முடை நாற்றத்தை யுடைய. மருதது: ஒன்றன்பால் வினையாலணையும் பெயர். புரப்பது: தொழிற் பெயர். அடிகள் + நீர் = அடிகணீர்.

6. ஆனனப் போது – முகமாகிய பேரரும்பு.

7. நடு தயா இலார் தமை நலிய – நடுவு நிலைமையும் கருணையும் இல்லாதவர்கள் தம்மை வருத்துதலால். 'அடுத்த யாவரும்' என்க. திரு – இன்பம். 'கெடுத்து, (அயா,) அறம் புகழ்' என்க. 'அயா'. ஐயா என்பதன் போலி. ஐயா: இந்திரனே.

8. ஈர்ப்ப – இழுத்து அடக்கிக் கொள்ள. பிரம நாடி நெறி கொடு – பிரம நாடி என்னும் சுழுமுனை நாடியின் வழியாக.

என்றனன், நின்றனன், சென்றனன், சேர்ந்தனன்: முற்றெச்சங்கள். இருந்தான்: முற்று.

9. தும்பை – தும்பை மாலை. போருடற்றும்போது தும்பை யணிவர் வீரர். இதனைத் தும்பைத் திணை என்பர். கோள் – வலிமை. குறைபடக் குறையா மெய்யர்: தேவர்.

10. உக்கன குருதி – சொரிவனவாகிய இரத்தம். ஒட்டல் வாய் – ஒட்டிய வாய்களையுடைய. நக்கன–சிரித்து. ஞாட்பு – போர்க்களம். கவந்தம் – தலை யிழந்த உடல்கள். ஈற்றடியை 'பார் புதைத்த பிணத்தின் குன்றம் அண்டம் சிதைத்தது' எனக் கொள்க.

11. ஒல்லென விதிர்த்தலோடும் – விரைவாக அசைத்த வுடனே. வாங்கு – வளைந்த. மைந்நாகம் என்பது இந்திரன் வச்சிரத்தால் மலைகளின் சிறகுகளை யறுத்து வீழ்த்திய ஞான்று வாயுவின் துணையினல் கடலுள் ஒளித்த ஒரு மலை.

12. ஒளித்தான் – ஒளித்தவனாகிய விருத்திரனுடைய. ஒளித்தான்: வினையாலணையும் பெயர். ஆழி: காரணப் பெயர்.

13. கைதவன் – வஞ்சகனாகிய விருந்திரன். வெற்பு அடக்கும் கையில் – விந்த மலையை அடக்கிய கையில். உழுந்து எல்லைத்து ஆக்கி – உழுந்தின் அளவினதாகச் செய்து. ஐயன் – சிவன். மூன்று வையம் முத்தொழிலும் செய்ய – மூன்றுலகத்தும் முத்தொழிலும் செய்ய.

இங்குப் பயின்றது வேற்றுப்பொருள் வைப்பணி.

14. படு நீர்ப் பௌவம் – மிக்க நீரினை யுடைய கடல். வடவை – வடவைத் தீ. சிகை – கொழுந்து.

உவமையணி இங்குப் பயின்றது.

15. வளை – சங்கு. 'யாமை செறிந்தன கரந்த' என்க. கங்கம் – பருந்து. முக்கின – விழுங்கின. வங்கம் – கப்பல்.

நெளிந்த, கரந்த: 'அன்' பெறாத பலவின்பால் வினைமுற்றுகள். செறிந்தன: முற்றெச்சம்.

16. கார் – மேகம். உரு கெழு பாவம் – அஞ்சத் தக்க பாவம். பரிபவம் – துன்பம். இங்கும் உவமை யணி வந்தது.

17. யாணர் – புதிய. சிரிப்பான்போல் – பழக்குவான் போல். புணரி – கடல். வலாரி – இந்திரன். சாயை – கொலைப் பழி.

புணரி: காரணப் பெயர்.

18. (கடம்பவனத்தை நெருங்கியபோது) பழி அகன்றது. தேசிகன் — இந்திரனோடு வந்த வியாழன். அவ்வேறு ஆம் நிலை நின்று — அப்பழி நீங்கிய இடத்தினின்றும்.

19. கல்லா மந்தி — அறிவில்லாத குரங்குகள். படிந்து — நீராடி. அருவி நீர் தூய் — அருவி நீரால் ஆட்டி. யாளி கரி — யாளிகளும் யானைகளும். இவை இயல்பில் பெரும் பகை யுடையன. புழைக் கை முகந்து — துளையை யுடைய கைகளால் நீரை முகந்து. புல்வாய் — மான்.

குரங்குகள் மணியைச் சிவலிங்கமாகப் பாவித்தன என்க.

20. குருளை — குட்டி. உயங்கி — வருந்தி. புள் ஏறு — பறவை ஏறிய கருடன். சிறை — சிறகு. துளிய நீர் — துளிகளை யுடைய நீரினை. வளை தசும்பில் — சங்காகிய குடத்தில்.

அச்சோ — ஐயோ: இரக்கக் குறிப்பு.

## வினாக்கள்

1. திருவிளையாடற் புராணம்: குறிப்பு வரைக.

2. விருத்திரனை அழிக்கப் பிரமன் இந்திரனுக்குச் சொன்ன வழி யாது?

3. ததீசியின் முதுகெலும்பு வலியுற்ற தெங்ஙனம்?

4. இந்திரன் வேண்டியதும் ததீசி உற்ற நிலையும் உரைத்த மொழியும் யாவை?

5. அசுரர்க்கும் தேவர்க்கும் நிகழ்ந்த போரில் வீரர்க்குற்ற இன்னல்கள் யாவை?

6. 'ஐயன தருளைப் பெற்றார்க்கு அதிசயம் இது என்கொல்'—இடங்காட்டி விளக்குக.

7. வற்றிய கடலின் காட்சியினைத் தெரிவிக்க.

8. கடம்பவனக் காட்சியினை வரைக.

9. இவ்வுவமைகள் எவற்றிற்கு ஆளப்பட்டன?

(அ) அறந் துறந்து ஈட்டுவார்தம் அரும்பெறல் செல்வம்.

(ஆ) தீ நீண்டெரி சிகை.

(இ) அருவரை முதுகில் கார்.

10. இலக்கணக் குறிப்பு எழுதுக:

(அ) படையோடும் அடையன்மின்.

(ஆ) நாள் நனி செல்ல,

(இ) தோக்கன கழுகு சேனம்; பேய்கள் நக்கன பாடல் செய்ய.

(ஈ) நீண்டு எரிசிகை.

(உ) திணியிருள் விழுங்கிற் றம்மா.

# 5. கலிங்கத்துப் பரணி

முதற் குலோத்துங்கன் என்னும் சோழன் கலிங்கத்தின்மீது தன் படையினை யனுப்பி வெற்றி கண்ட செய்தியினைச் சிறப்பித்துப் பாடும் நூல் இது.

பரணி என்பது தொண்ணூற்றாறு வகைத் தமிழ்ப் பிரபந்தங்களுள் ஒன்று. போரில் ஆயிரம் யானைகளைக் கொன்ற வீரனின் வெற்றியைப் புகழ்ந்து பாடுவது இந்நூலாகும். ஈரடித் தாழிசைகளால் புறப்பொருள் இலக்கணம் அமையப் பாடப்படுவது.

பரணி நாளில் பேய்கள் கூழட்டு மகிழ்ந்துண்ணும் காட்சி கூறப்படு மாதலின் 'பரணி' எனப் பெயர் பெற்றதென்ப. வேல் வாள் ஆயனவற்றால் அமைக்கப்பட்டதோர் பரண்மேலிருந்து புலவன் இந்நூலைப் பாடுவனாதலின் பரணி எனப் பெயர் பெற்றது எனவுங் கூறுப.

கலிங்கத்துப் பரணியின் ஆசிரியர் சயங்கொண்டார் என்னும் புலவராவர். இவர் சோழநாட்டுத் தீபங்குடி என்னு மூரிற் பிறந்தவர். சிவ சமயத்தினர். இவர்தம் காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டு.

குலோத்துங்கனின் சேனைக்குத் தலைமை தாங்கிக் கலிங்க வெற்றியைக் கொணர்ந்தவன் கருணாகரத் தொண்டைமான் என்னும் பல்லவச் சிற்றரசனாவன்.]

## போர் பாடியது

(அஃதாவது, படைகள் போருடற்றும் காட்சியினைப் பாடுவது. கலிங்க நாட்டிலிருந்து வந்த பேய் ஒன்று காளியைப் பார்த்து இச்செய்தியினைக் கூறுவதாகப் பாடப்பட்டது இப்பகுதி.)

1. எடுமெடு மெடுமென வெடுத்ததோர்
   இகலொலி கடலொலி யிகக்கவே!
   விடுவிடு விடுபரி கரிக்குழாம்
   விடும்விடு மெனுமொலி மிகைக்கவே!

2. வெருவர வரிசிலை தெறித்தநாண்
   விசைபடு திசைமுகம் வெடிக்கவே!
   செருவிடை யவரவர் தெழித்ததோர்
   தெழியுல குகள்செவி டெடுக்கவே!

3. எறிகட லொடுகடல் கிடைத்தபோல்
   இருபடை களுமெதிர் கிடைக்கவே!
   மறிதிரை யொடுதிரை மலைத்தபோல்
   வருபரி யொடுபரி மலைக்கவே!

4. கனவரை யொடுவரை முனைத்தபோற்
கடகரி யொடுகரி முனைக்கவே!
இனமுகின் முகிலொடு மெதிர்த்தபோல்
இரதமொ டிரதமு மெதிர்க்கவே!

5. பொருபுலி புலியொடு சிலைத்தபோற்
பொருபட ரொடுபடர் சிலைக்கவே!
அரியினொ டரியின மடர்ப்பபோல்
அரசரு மரசரு மடர்க்கவே!

6. விளைகனல் விழிகளின் முளைக்கவே!
மினலொளி கனலிடை யெறிக்கவே!
வளைசிலை யுருமென விடிக்கவே!
வடிகணை நெடுமழை படைக்கவே!

7. குருதியி னதிவெளி பரக்கவே
குடர்நிரை நுரையென மிதக்கவே!
கரிதுணி படுமுட லடுக்கியே
கரையென விருபுடை கிடக்கவே!

## களம் பாடியது

(அஃதாவது, போர் முடிவுற்ற பின்பு அக்களத்துக் காட்சியைப் பற்றிப் பாடியது. கலிங்கப் பேய் சொல்லக் கேட்ட காளிதேவி தன் பேய்க் கணங் களோடு சென்று, அப்பேய்களுக்கு அக்களக் காட்சியைக் 'காண்மின் காண் மின்' எனக் காட்டியதாகப் பாடப்பட்டது இப்பகுதி.)

8. உடலின்மேற் பலகாயஞ் சொரிந்து பின்கால்
உடன்பதைப்ப உதிரத்தே யொழுகும் யானை
கடலின்மேற் கலந்தொடரப் பின்னே
செல்லுங்
கலம்போன்று தோன்றுவன காண்மின்,
காண்மின்!

9. நெடுங்குதிரை மிசைக்கலணை சரியப் பாய்ந்து
நிணச் சேற்றில் கால்குளிப்ப நிரையே
நின்று
படுங்குருதிக் கடும்புனலை யடைக்கப் பாய்ந்த
பலகுதிரைத் தறிபோன்ற பரிசு காண்மின்!

10. விருந்தினரும் வறியவரு நெருங்கி யுண்ண
மேன்மேலு மிகமலரு மேலோர் போலப்
பருந்தினமுங் கழுகினமுந் தானே யுண்ணப்
பதுமமுக மலர்ந்தாரைப் பார்மின்,
பார்மின்!

வேறு

11. நெருங்காக வச்செங்க் ளத்தேத
யங்குந்நி ணப்போர்வை மூடிக்கொள
கருங்காகம் வெண்காக மாய்நின்ற
வாமுன்பு காணுத காண்மின்களோ!

12. மிடையுற்ற தேர்மொட்டு மொட்டொக்க
வெஞ்சோரி நீரொக்க வீழ்தொங்கல்பா
சடையொக்க வடுசெங்க ளம்பங்க
யப்பொய்கை யாமாறு காண்மின்களோ!

குறிப்புரை

1. எடும் — தொடங்குங்கள். இகக்க — வெல்லவும்.

2. வெருவா — அஞ்சும்படி. வரிசிலை — கட்டு அமைந்த வில்வி விருந்து. நாண் — நாணோசை. 'விசை தெறித்த நாண்' என்க. தெழித்தது — ஆரவாரித்தது. தெழி — முழக்கம்.

இச்செய்யுள் உயர்வு நவிற்சி யணி.

3. கிடைத்தல் — எதிர்த்தல். மறிதிரை — சுருண்டு விழும் அலைகள். மலைத்தல் — போரிடுதல்.

இங்குப் பயின்றது இல்பொருள் உவமை யணி.

எறிகடல், மறிதிரை, வருபரி: வினைத்தொகைகள்.

4. வரை — மலை. முகில் இனம் — மேகக் கூட்டங்கள். இதுவும் இல்பொருளுவமை யணி.

5. சிலைத்தபோல் — முழங்கிப் போரிடுதல் போல். சிலைத்தல் — முழங்குதல். படர் — வீரர்கள். இஃது உவமை யணி.

6. விளை கனல் — மிக்க நெருப்பு, (சினம்). கனல் இடை — அந் நெருப்பிடை. உரும் — இடி. வடி கணை — கூரிய அம்புகள். உருவகமும் உவமையும்.

7. கரி — யானை. உருவகமும், உவமையும் வந்தன.

8. காயம் சொரிந்து — காயங்களிலிருந்து இரத்தம் சொரிந்து. ஒழுகும் — நீந்தும்.

9. கலணை – தவிசுகள். பாய்ந்தும் நிணச்சேற்றில் கால் புதைந்து கிடைத்தலால் நிரையே நிற்கின்றன வென்க. படும் – ஒலிக்கும். 'குதிரைத் தறி' என்பது குதிரை மரம். நீர்ப்பெருக்கை அடைத்து வைக்க உதவும் கட்டைகளைக் குதிரை மரங்கள் என்பர்.

10. பதுமம் – தாமரை.

11. நெருங்கு – பிணங்கள் நெருங்கிக் கிடக்கின்ற. ஆகவம் – போர். 'செம்மை ஆகவம் களத்தே தயங்கும்' என்க. தயங்கும் – விளங்கும். நின்றவா – நின்ற ஆ(று), நின்ற வகை. இங்கு ஏதுவணி பயின்றது.

12. மிடையுற்ற – நெருங்கி யிருக்கின்ற. மொட்டு (இரண்டாவது) – தாமரை யரும்பு. வீழ் தொங்கல் – அறுந்து வீழும் பீலிக் குடைகள். பாசடை – பசிய இலைகள். பங்கயம் – தாமரை. உவமை யணி.

## வினாக்கள்

1. பரணி: குறிப்பு வரைக.

2. கலிங்கத்துப் பரணி எழுதப்பட்ட வரலாறு தருக.

3. சேனைகள் போரிட்ட காட்சியினை நும் சொந்த சொற்களில் வரைக.

4. நதி, நுரை, கரை எனப் புனையப்பட்ட காட்சி யாது?

5. போர் முடிந்த பின்றை அக்களங் கண்ட காட்சியினைத் தொகுத்து உரைக்க.

6. இவ்வொப்பனைகள் எவற்றிற்காக ஆளப்பட்டன?

(அ) அரியினொ டரியினம் அடர்ப்ப.

(ஆ) கடலின்மேல் கலம் தொடரப் பின்னே செல்லும் கலம்.

(இ) குதிரைத் தறி.

7. கருங்காகம் வெண்காக மாயினமையும், போர்க்களம் கமலப் பொய்கையாயினமையும் எங்ஙனம்?

8. உவமை யணி, உயர்வு நவிற்சி யணி, இல்பொருளுவமை யணி, ஏதுவணி என்பன யாவை? இப்பகுதியிலிருந்து உதாரணம் காட்டுக.

9. இலக்கணக் குறிப்பு எழுதுக.

(அ) எடுமேடு மேடுமென...

(ஆ) எரிகடல், மறிதிரை, வருபரி.

(இ) தோன்றுவன காண்மின்.

# 6. இரட்சணிய யாத்திரிகம்

## அழிம்பன் தோல்விப் படலம்

இரட்சணியம் என்பது மீட்சி அல்லது விடுதலை என்னும் பொருளது. ஒரு மனிதன் தீவினையிலிருந்து விடுதலை பெற்று மோட்சத்தை நோக்கிச் செல்லும் செலவினைப்பற்றி யுரைக்கும் நூல் 'இரட்சணிய யாத்திரிகம்' எனப்பட்டது.

இக்காவியத்தின் ஆசிரியர் எய்ச். ஏ. கிருஷ்ண பிள்ளை யவர்கள். இவர் திருநெல்வேலிப் பாளையங்கோட்டையினைச் சேர்ந்தவர். இவர்தம் காலம் கி.பி. 1827 முதல் 1900 வரை. பிறவியில் விட்டுணு சமயத்தினர். கிறிஸ்துபிரானின் பேரன்பினால் தடுத்தாளப்பட்டுப் பின் கிறிஸ்து சமயத்தையே ஏற்றுச் சிறந்த கிறிஸ்தவராக வாழ்ந்தார். 'Pilgrim's Progress' என்ற ஆங்கிலக் காவியத்தினை முதனூலாகக் கொண்டு இரட்சணிய யாத்திரிகத்தை இவர் செய்து முடித்தார். இக்காவியத்தின் பெருமை கருதி இவரைக் கிறிஸ்தவக் கம்பர் என்பர். இந்நூலினை ஓர் உருவகக் காவியம் எனலாம்.

இரட்சணிய சமய நிர்ணயம், இரட்சணியக் குறள், இரட்சணிய மனோகரம் என்பன இவர் இயற்றிய வேறு நூல்கள்.

'அழிம்பன் தோல்விப் படலம்' என்பது நிதான பருவத்துள் வருவது. இக்காவியத்தின் கதாநாயகன் கிறிஸ்தியான் (கிறிஸ்தவன்,) சிலுவைக் காட்சி கண்டு, பாவச் சுமை நீங்கப் பெற்று, மோட்சம் நோக்கிச் செல்லுகின்றவன், தாழ்மை என்னும் ஒரு பள்ளத்தாக்கினைக் கடந்துகொண்டிருக்கிறான். அங்கு அழிம்பன் என்னும் ஒரு கொடிய அரக்கன் தோன்றிக் கிறிஸ்தியானை மடக்கிப் போரிடுகின்றனன். அவ்வரலாறு கூறும் படலம் இது.

(தாழ்மைப் பள்ளத்தாக்கில் சென்றுகொண்டிருக்கிற கிறிஸ்தியான் ஒரு பேரொலி கேட்டு நிற்கின்றான். அந்நிலையில் அழிம்பன் என்னும் அரக்கன் தோன்றுகிறான்.)

1. நஞ்சமும் அவித்தையும் இருளும் நாசமும்
வஞ்சமும் கொடுமையும் மறமும் தீமையும்
செஞ்சவே திரண்டுருத் தெரிய நின்றிடும்
அஞ்சனக் கருநிறத்(து) அவுண யாக்கையன்,

2. பேயுமஞ் சுறுபெரும் பேய்மு கத்தினன்,
காயெரி பங்கியன், கடுத்து றுங்கொடு
வாயினன், வக்கிர தந்தன், வன்கணன்,
தீயெழு புகையென உயிர்க்குந் தீயவன்,

3. பாபத்தை மணந்தவன், பழியைப் பெற்றவன்,
சாபத்தைப் படைத்தவன், தருமநாயகன்
கோபத்தை யடைந்தவன், குவல யத்தினுக்(கு)
ஆபத்தை விளைப்பவன், அறத்தைத் தின்பவன்,

4. இப்படு பாதகன் அழிம்பன் என்பவன்:
மெய்ப்படு கிறிஸ்தவன் விழிக்கு நேர்எதிர்
கைப்படக் காண்டலும் கலங்கி உள்ளழிந்(து)
எப்படி எனக்கினி உய்வென்(று) எண்ணுவான்.

('நாசதேசத்துக்கு மீண்டுஞ் செல்; இன்றெனில் உன் உயிரைப் போக்குவேன்' என் அழிம்பன் கிறிஸ்தவனை அச்சுறுத்துதல்.)

5. 'நன்றுநன் றுன்னிலை! நாச தேசமும்
துன்றிய குடிகளும் சொந்த மாம்எனக்(கு)
என்றறி, நீயுமென் தொழும்பன், இன்றெனில்
கொன்றுயிர் குடிப்ப(ன்,)ஈ துளத்துக் கோடியால்;

6. 'பொற்புறு நாசதே சத்துப் போந்துநீ
அற்புத வளம்நுகர்ந் தாயுள் நாளெலாம்
முற்படு காமியம் முழுதுந் துய்த்திரு;
பிற்படு கதிநினைந் திரங்கிப் பேதுறேல்;

7. 'இணங்குவா யெனில்இக சுகத்தை யீகுவல்;
பிணங்குவா யெனில்உயிர் பிழிந்து தேக்குவல்;
உணங்கியோய்! எதுதுணி(பு)? உரைத்தி,'
என்றனன்
நிணங்கெழு குருதிவேல் நிசாச ரேசனே;

(அது கேட்ட கிறிஸ்தவன் நெஞ்சத்தில் அருட்பலம் மிக்கவனாகி இவை மொழியலுற்றனன்.)

வேறு

8. 'கொடுமதிப டைத்துலவு கோழைநர மல்லால்
நடுமதிப டைத்தவருன் நச்சுமதி கொள்ளார்;
அடுமதிப டைத்திழிய ழிம்பவழி வெய்தும்
கொடுமதிப டைத்தனைகெ டாப்பழிப டைத்தோய்!

9. 'விள்ளரிய பாதகவி னைச்சுமைவி மூத்த
வள்ளலருட் சிற்சுருதி வாய்மைமதி யொன்றே
கொள்ளுவல்;பு றத்துமதி கொள்ளமனம்
உள்ளேன்;
தெள்ளமுது குத்துவிடம் உண்பதுகொல் சீர்மை!'

(இவ்வாறு கிறிஸ்தவன் சொல்லவும் அரக்கன் மொழிகின்றனன்)

10. அடா!சிறிய பையல்!மச கத்துணையும் அல்லாய்!
கெடாமுதல ருட்டுணைகி டைக்குமென நம்பிக்
கடாசலமொ டேயமர் கலக்கவரு கின்றாய்!
படாதுபடு வாயொருக ணத்திலது பார்த்தி!

(இருவருக்கும் போர் தொடங்கிவிட்டது)

11. நன்மைபர ஞானமொளி நல்லறமி வற்றைத்
தின்மையறி யாமையிருள் தீமறம டர்த்து
வன்மைமிகு வெஞ்சமம்ம லைத்திடுதல் போலாம்
தொன்மறைவ லானெடுப சாசமர்தொ டுத்தல்!

(நெடுநேரப் போருக்குப்பின் கிறிஸ்தியான் கீழே வீழ்தல்)

12. கொள்ளி யார்அழல் சுடுகணை யாக்கையில் குளிப்ப
ஒள்ளி யோன்சிறி(து) அலமரல் உற்றமை
யோர்ந்து
துள்ளி யோடிவந்(து) எதிர்உறீஇ மல்லமர்
தொடுத்துத்
தள்ளி வீழ்த்தினன் நிலனுற அழிம்பனும்
சழக்கன்.

(அரக்கன் துணிவு)

13. ஆரியன்தளர்ந்(து) அவனியிற்படிந்துமூச்சயர்ந்து
போரி யன்றில னுக,இன் னேதலை புரட்டி
வீரி யம்பெறு வேன்,வெற்றி எனதென விளித்துப்
பூரியன்கெடு புணர்ப்பினல் அருகுறப் போந்தான்.

(இந்நிலையில் கிறிஸ்தவன் தன் நெஞ்சில் இறைவனை வேண்டவும், அருட்பலம் பெற்று 'ஜெபம்' என்று சொல்லப்படுகின்ற மந்திரப்படையை உபயோகிக்கின்றனன்.)

14. மந்தி ரத்தனி வாட்படை யோங்கிவன் கண்ணன்
தந்தி ரத்தட மார்புறப் புகுத்தலும் தலைசாய்ந்(து)
அந்த ரம்பட அலறினன்; அழிபெருங் குருதி
சிந்தி யங்கவன் வெஞ்சினத் தீத்தழல் சிதைத்த.

(அழிம்பன் மீக்கிளர்ந்து ஓடுதல்)

15. நெஞ்சு ரங்கிழிந் தழிம்ப(ன்)நீள் நிலத்துறீஇ நெடிது
சஞ்ச லம்படத் தடஞ்சிறை யிரண்டையுந் தடிவான்
செஞ்சொல் ஆரணன் மந்திர வாள்கரந் திகழ்த்த
அஞ்சி வாய்வெரீஇ மீக்கிளர்ந்(து) அதோகதி யடைந்தான்.

---

குறிப்புரை

1. நஞ்சம் – நஞ்சு. அவித்தை – அறியாமை; மாயை. செஞ்சவே – நேராக. அஞ்சனம் – மை.

2. பங்கி – மயிர். வக்கிர தந்தன் – வளைந்த பல்லுடையன்.

3. படு – கொடிய. மெய்ப்படு – சத்தியம் விளங்குகின்ற.

4. கொள் + (த்) + இ = கோடி; த்: எழுத்துப்பேறு. ஆல்: அசை நிலை.

5. போந்து: 'புகு' பகுதி. காமியம் – தீச் செயல்கள். பேதுறேல் – மயங்காதே.

6. உணங்குதல் – சிந்தை வாடுதல். நிசாசரன் – அரக்கன்.

7. நரம் – நரர். 'அடுமதி படைத்து இழி அழிம்ப, கெடாப் பழி படைத்தோய், அழிவு எய்தும் கொடுமதி படைத்தனை' என்க. அடுதல் – கொல்லுதல், தடுத்தல். கெடாப் பழி – என்றும் நீங்காத நிந்தை.

8. விள்ள அரிய – பேசுதற்கு அருமையான. சிற்சுருதி வாய்மை மதி – ஞானத் திருமறை சொல்லுகின்ற சத்திய போதனை. கொள்ளுவல்: தன்மை ஒருமை வினைமுற்று. உகுத்து—கொட்டிவிட்டு. முன் ஒரு பொருள் பேசி, அதனை வலியுறுத்தற் பொருட்டுப் பின் ஓர் உலகறி பொருளை அமைத்தமையான் இச்செய்யுள் வேற்றுமை யணி.

9. மசகம் – கொசுகு. கெடா முதல் – கடவுள். கட்டாசலம் – யானை.

10. தீ மறம் – கொடிய பாவம். அடர்த்து – நெருங்கி. வெம்மை + சமம் = வெஞ்சமம் (பண்புத் தொகை)–கொடிய போர். பசாசம்–பிசாசு; அழிம்பன். இச் செய்யுள் உவமை யணி.

11. குளிப்ப – அழுந்த. ஒள்ளியோன் – கிறிஸ்தவன். அலமரல் – அஞ்சுதல், வருந்துதல். சழக்கன் – தீயவன். உறீஇ: சொல்லிசை யளபெடை.

12. இன்னே – இப்பொழுதே. வீரியம் – வெற்றி. புணர்ப்பு–சூழ்ச்சி, செயல். பூரியன் – கீழ்மகன்.

13. வன் கண்ணன் – கொடிய அரக்கனுடைய. குருதி பெருகியதால் அழிம்பன் அஞ்சி அடங்கினன் என்பதை, அவனது சினமாகிய கொடிய நெருப்பைக் குருதிப் பெருக்கு அணைத்தது என்றார். தற்குறிப்பேற்ற வணி.

14. தடஞ்சிறை யிரண்டு – அழிம்பனுக்கிருந்த பெரிய சிறகுகள் இரண்டு. தடிவான் – வெட்டுவதற்கு; 'செய்வான்' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். ஆரணன் – கிறிஸ்தவன்; ஆரணம் – மறை. கரம் திகழ்த்த – கரத்தி லெடுக்க.

## வினாக்கள்

1. அழிம்பனின் தோற்றமும் தன்மையும் இத்தகைய வெனத் தொகுத்துரைக்க.

2. கிறிஸ்தியான் தன் வரலாறு சொன்னபோது அழிம்பன் சொல்லிய மருட்டுரை யாது?

3. அம்மருட்டுரைக்கு எதிர்ப்புரையாகக் கிறிஸ்தியான் சொற்றது யாது?

4. மறை வல்லானோடு அழிம்பன் அமர் தொடுத்தனைப் புலவர் எவ்வாறு ஒப்பனை செய்கின்றனர்?

5. அழிம்பன் எவ்வாறு தோற்றோடினான்?

# 7. பாஞ்சாலி சபதம்

[பாஞ்சால நாட்டு மன்னன் மகள் பாஞ்சாலி என்பவள் பாண்டவர்க்கு மனையாள். துரியோதனன் அரண்மனையில் பாண்டவர்க்கு முன்னிலையில் பாஞ்சாலி துகிலுரியப்பட்டபோது அவளைக் கண்ணன் காத்தருளினன். அவ்வமயம் அவள் செய்த சபதத்தின் வரலாறு கூறும் நூல் இது.

ஆசிரியர் சுப்பிரமணிய பாரதியார் அவர்கள் ஒரு வரகவி. திருநெல்வேலியைச் சேர்ந்த எட்டயபுரம் இவரூர். இவர் அந்தணர் மரபினர். கி.பி. 1882 முதல் 1921 வரை வாழ்ந்தவர். நமது நாட்டின் சுதந்தரப் போராட்டத்தில் விளங்கிய ஒரு வீரர் இவர்.]

### வீமன் செய்த சபதம்

1. வீமன் எழுந்துரை செய்வான்:—'இங்கு
விண்ணவர் ஆணை; பராசத்தி யாணை;
தாமரைப் பூவினில் வந்தான்—மறை
சாற்றிய தேவன் திருக்கழ லாணை;
மாமக ளைக்கொண்ட தேவன்—எங்கள்
மரபுக்குத் தேவன் கண்ணன்பதத் தாணை:
காமனைக் கண்ணழ லாலே—சுட்டுக்
காலனை வென்றவன் பொன்னடி மீதில்

2. 'ஆணையிட் டிஃதுரை செய்வேன்:—இந்த
ஆண்மை யிலாத்துரி யோதனன் றன்னைப்
பேணும் பெருங்கனல் ஒத்தாள்—எங்கள்
பெண்டு திரௌபதி யைத்தொடை மீதில்
நாணின்றி "வந்திரு" என்றான்—இந்த
நாய்மக னாந்துரி யோதனன் றன்னை,
மாணற்ற மன்னர்கண் முன்னே,—என்றன்
வன்மையி னால்யுத்த ரங்கத்தின் கண்ணே

3. 'தொடையைப் பிளந்துயிர் மாய்ப்பேன்;—தம்பி
சூரத் துச்சாதனன் தன்னையு மாங்கே
கடைபட்ட தோள்களைப் பிய்ப்பேன்;—அங்குக்
கள்ளென ஊறுமி ரத்தங் குடிப்பேன்;
நடைபெறுங் காண்பிர், உலகீர்!—இது
நான்சொல்லும் வார்த்தையென்
றெண்ணிடல் வேண்டா;
தடையற்ற தெய்வத்தின் வார்த்தை;—இது
சாதனை செய்க, பராசத்தி!' என்றான்.

### பாஞ்சாலி செய்த சபதம்

தேவி திரௌபதி சொல்வாள்:—'ஓம்,
தேவி பராசத்தி ஆணை யுரைத்தேன்;
பாவி துச்சாதனன் செந்நீர்,—அந்தப்
பாழ்த்துரி யோதனன் ஆக்கை இரத்தம்,

மேவி யிரண்டுங் கலந்து—குழல்
மீதினிற் பூசி நறுநெய் குளித்தே
சீவிக் குழல்முடிப் பேன்யான்;—இது
செய்யுமுன் னேமுடி யேன்,'என் றுரைத்தாள்.

### வினாக்கள்

1. பாஞ்சாலி சபதம் என அந்நூலுக்குப் பெயர் வரக் காரணம் என்ன?

2. காமனைக் கண்ணழலாலே சுட்டவன் யாவன்? வரலாறு தருக.

3. 'காலனை வென்ற' வரலாறு யாது?

4. துரியோதனன் அவையில் வீமன் விடுத்த சூளுரை யாது?

5. பாஞ்சாலியின் சூளுரை யாது?

# பல்சுவைப் பகுதி

[பல்சுவைப் பகுதியில் 84 வரிகள் பாடத்திற்கெனத் தெரிந்துகொள்க.]

## 1. முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ்

[கடவுளையேனும் ஆசிரியரையேனும் வள்ளல்களையேனும் குழந்தை யாக வைத்துக் காப்பு முதலிய பத்துப் பருவங்கள் அமைத்துப் பாடப்படுவது பிள்ளைத் தமிழ் இலக்கணம் அமைந்த நூலாகும். பத்துப் பருவங்களாவன: காப்பு, செங்கீரை, தாலம், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, (இவற்றிக்குமேல் ஆண்பாலாயின்) சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்பன; (பெண்பாலாயின்) ஈற்று மூன்றும் அம்மானை, நீராடல், ஊசல் என்பன.

இப் பிள்ளைத் தமிழ், முருகனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது.

ஆசிரியர் குமர குருபரர் ஆவர். இவர் தமிழ்ப் புலமை செறிந்த ஒரு சிவ சமயத் துறவி. 17ஆம் நூற்றாண்டினர்.]

### செங்கீரைப் பருவம்

(இது பொருள் தெரியாத ஒலியை எழுப்பும் பருவம். மழலைக்கும் முந்தியது. 'கீர்' என்பது சொல். சொல்லுக்குரிய அமைதி இல்லாத ஒலியைச் 'செங்கீர்' என்றனர் போலும்!)

செம்பொன டிச்சிறு கிண்கிணி யோடு
சிலம்பு கலந்தாடத்
திருவரை யரைஞா ணரைமணி யொடுமொளி
திகழரை வடமாடப்
பைம்பொ னசும்பிய தொந்தியொ டுஞ்சிறு
பண்டி சரிந்தாடப்
பட்ட நுதற்பொலி பொட்டொடு வட்டச்
சுட்டி பதிந்தாடக்
கம்பி விதம்பொதி குண்டல முங்குழை
காது மசைந்தாடக்
கட்டிய சூழிய முச்சியு முச்சிக்
கதிர்முத் தொடுமாட
அம்பவ ழத்திரு மேனியு மாடிட
ஆடுக செங்கீரை,
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை.

## 2. மதுரை மீனாட்சியம்மை குறம்

[குறத்தி யொருத்தி குறி கூறுவதாக அமையும் பிரபந்தம் குறம் என வழங்கும். தலைவன்பால் விருப்புற்ற தலைவி யொருத்தியைக் கண்டு குறத்தி குறி சொல்லுவதாக இந்நூல் அமைதல் மரபு. இங்கே, சொக்க லிங்கப் பெருமான்பால் விருப்புற்ற மீனாட்சியம்மையைக் கண்டு குறத்தி குறி சொல்லுகின்றனள்.

ஆசிரியர்: குமரகுருபர சுவாமிகள் 17ஆம் நூற்றாண்டினர்; சைவர்.]

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

செண்டிருக்கும் வடவரையிற் சேலிருக்கு மரசிருக்குந்
தென்ன ரீன்ற
கண்டிருக்கு மதுரமொழிக் கனியிருக்குந் துவரிதழங்
கயற்கட் பாவை.
வண்டிருக்கு நறைக்கமல மலரிருக்கும்பரி புரத்தாண்
மனத்துள் வைத்துக்
கொண்டிருக்குந் தமிழ்முனிவன் குடியிருக்கும்
பொதியமலைக் குறத்தி நானே.

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

கொழுங்கொடியின் விழுந்தவள்ளிக்
கிழங்குகல்லி யெடுப்போம்
குறிஞ்சிமலர் தெரிந்துமுல்லைக்
கொடியில்வைத்துத் தொடுப்போம்
பழம்பிழிந்த கொழுஞ்சாறுந்
தேறலும்வாய் மடுப்போம்
பசுந்தழையு மரவுரியு
மிசைந்திடவே யுடுப்போம்
செழுந்தினையு நறுந்தேனும்
விருந்தருந்தக் கொடுப்போம்
சினவேங்கைப் புலித்தோலின்
பாயலிற்கண் படுப்போம்
எழுந்துகயற் கணிகாலில்
விழுந்துவினை கெடுப்போம்
எங்கள்குறக் குடிக்கடுத்த
வியல்பிதுகாண் அம்மே!

# 3. சீட்டுக் கவி

[சீட்டு என்பது கடிதம். சீட்டுக் கவி என்பது கவிதையால் எழுதப்படும் கடிதமாகும். புலவர்கள் பரிசில் கருதியோ நட்புக் கருதியோ வள்ளல்கள் முதலியவர்களுக்குச் சீட்டுக் கவி எழுதியனுப்புவர்.

இங்கே வரும் கவியின் ஆசிரியர் அந்தகக் கவி வீராகவ முதலியார் என்பவர். செழியதரையன் என்ற வள்ளலுக்கு அனுப்பப்பட்டது இது. வீரராகவர் பிறவி தொட்டுக் குருடராயிருந்ததால் 'அந்தகக் கவி' என வழங்கப் பட்டார். இவர் பொன் விளைந்த களத்தூரைச் சார்ந்த பூனூரில் பிறந்தவர். இவரது காலம் பதினாறும் நூற்றாண்டின் பிற்பகுதியாகும்; சமயம் சைவம்.]

ஏடாயி ரங்கோடி எழுதாது தன்மனத்
தெழுதிப் படித்த விரகன்
எதுசொலினும் அதுவே யெனச்சொலும் கவிவீர
ராகவன் விடுக்கும் ஓலை;
சேடாதி பன்சிரம் அசைக்கும் கலாகரன்,
திரிப தகைகுல சேகரன்,
தென்பாலை சேலம் செயித்ததா கந்தீர்த்த
செழியனெதிர் கொண்டு காண்க!

பாடாத கந்தருவம், எறியாத கந்துகம்,
பத்தி கோணுத கோணம்,
பறவாத கொக்(கு), அனல் பண்ணுத கோடை, வெம்
படையாய்த் தொடாத குந்தம்,
சூடாத பாடலம், பூவாத மாத்தொடை
தொகுத்து முடியாத சடிலம்
சொன்னசொல் சொல்லாத கிள்ளையென் றெங்கும்
துதிக்க வரவிட வேணுமே!

# 4. சிலேடை

(சிலேடை என்பது இருபொருள்படப் பாடுவது. 'சிலேஷம்' என்ற வடமொழி சிலேடை எனத் தமிழில் வழங்குகின்றது.

இங்கு வந்துள்ள செய்யுட்களின் ஆசிரியர் காளமேகப் புலவர் என்பவர். இவர் சிலேடை பாடுவதில் சமர்த்தர். திருமலைராயன் காலத்தவர்.)

சந்திரனுக்கும் மலைக்கும்

நிலவாய் விளங்குதலா னீள்வான் படிந்து
சிலபோ துலாவுதலாற் சென்று—தலைமேல்
உதித்து வரலா லுயர்மா மலையை
மதிக்கு நிகராக வழுத்து.

நாய்க்கும் தேங்காய்க்கும்

ஓடுமிருக்கு மதனுள்வாய் வெளுத்தி ருக்கும்
நாடுங் குலைதனக்கு நாணுது—சேடியே
தீங்கான தில்லாத் திருமலைரா யன்வரையில்
தேங்காயு நாயுமெனச் செப்பு.

---

# 5. மாலைப் போது

ஆயிரங் கோடிக் கப்பால் ஆங்கே
சேய்மை யிருந்து செங்கர நீட்டிப்
பொன்னொளி தன்னைப் பொலிவுட னிறைத்துப்
பூமிப் பெண்ணைப் போற்றிய பகலோன்,

பொருது முடித்த போர்மக ளொருவன்
படையைச் செருகிப் பாசறை சென்ற
பான்மைய தாகப் பல்கதிர் சுருக்கி
ஏரிக் கப்பால் எழுந்து நின்ற
மலைப்புறத் தடங்க மாண்பொடு செல்ல,
அடுகளந் தன்னில் அகலச் சிந்தி
ஓடிய செந்நீர் உறைந்த காட்சி
ஆடியிற் பிடித்தென அருமையே தோன்ற
வானம் பிடித்ததன் வண்ணம் சிவக்க,
புறமுது கிட்டான் புதல்வன் என்ற
பொய்யுரை கேட்டு மெய்யென மயங்கி
அரிவாள் ஏந்தி அமர்க்களம் ஓடிய
தனிமூ தாட்டி, தன்னுடைத் தோன்றல்
விழுப்புண் ஏற்று விழுந்தது கண்டு
ககனத் தெறிந்த கையரி வாளெனச்
சந்திரன் ஒருபால் அந்தரந் தோன்ற,
விழுந்த பிணத்தை விரும்பிய நரியின்
விருப்பொலி கேட்டு வெருண்டு விரையும்
பருந்தினை யொக்கப் பகல்பொழு தோட
மாலைப் போது மண்மீ துற்றதே!

—பொன்னு. ஆ. சத்தியசாட்சி.

## 6. ஒரு மருந்து

[சென்னை இராச்சியத்து அவைப் புலவரென்னும் மாண்பு பெற்ற நாமக்கல் கவிஞர் திரு. இராமலிங்கம் பிள்ளையவர்கள் இக்கவிதையின் ஆசிரிய ராவார்கள்.]

எந்திர வித்தைகள் வேணது கற்ருேம்!
என்னென்ன வோபல புதுமைகள் பெற்ருேம்.
சந்திரன் செவ்வாய் மண்டலத் தோடும்
சங்கதி பேச வழிகளைத் தேடும்
அந்தமில் லாப்பல சக்திகள் உற்றும்
அடிதடி சண்டையை விட்டிட மட்டும்
தந்திரம் ஒன்று படித்திலம் ஐயோ!
தரணியில் மக்கள் தவிப்பது பொய்யோ!

இத்தனைத் தீமைக்கும் ஏற்ற மருந்து;
இந்திய ஞானிகள் கண்ட மருந்து,
உத்தமர் யாரும் உவக்கும் மருந்து;
உலகத்தில் துன்பம் ஒழிக்கும் மருந்து;
சத்தியம் சாந்தம் இரண்டு சரக்கை
சமனிடை அன்பெனும் தேனில் குழைத்துப்
பத்தியம் தெய்வ நினைப்புடன் உண்டால்
பாருக்குள் பேருக்கும் போரிலை கண்டாய்.

## 7. நினைவும் முடிவும்

[இக்கவிதையும், இதனையடுத்து வரும் கவிதையும் 'மலரும் மாலையும் என்ற நூலிலிருந்து கொள்ளப்பட்டவை. ஆசிரியரவர்கள் நாஞ்சில் நாட்டுத் தேரழுந்தூரில் பிறந்து அண்மைக் காலம் வரை வாழ்ந்து வந்தார். நெடுங் காலம் தமிழாசிரியர் பணியில் இருந்தவர் இவர். ஆசிய ஜோதி, மலரும், மாலையும், உமர் கயாம் முதலிய பல அரிய செய்யுள் நூல்களை இவர்கள் இயற்றியுள்ளார்கள்.]

'இருளும் அகலும், இரவியும் தோன்றும்,
பொருவிலித் தாமரைப் பூவும் மலரும்;
மலரும் பொழுதிவ் வன்சிறை நீங்கி
உலகில் எங்கும் உலவித் திரிந்து
பூவெழு பற்பல புதுவனங் கண்டு
நாவெழு சுவைதரும் நறைமிக உண்டு
வாழ்குவன்' என்றொரு மதுகரம் இருப்பத்
தாழ்மத வேழமொன் றூழ்கயம் இறங்கிப்
பாசிலை பூவெலாம் பறித்து
வீசி எறிந்து வெறிகொண் டதுவே!

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

## 8. யார் பெரியர்?

கண்ணைக் கெடுப்பர் கவிராயர்; அக்கண்ணை
எண்ணி உரைகாரர் ஈவாரே—மண்ணுலகில்
ஆக்கு பவரோ அழிப்பவரோ மேலாவார்?
நோக்கி நீஉண்மை நுவல்.

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

# 9. வழிபாட்டுப் பாடல்கள்

## தேவாரம்

[இப் பாடல் அகத்தியர் தேவாரத் திரட்டு என்னும் நூலில் 'திருக்கயி லாயம்' என்னும் பகுதியில் வருவது. ஆசிரியர் திருநாவுக்கரசு நாயனர் சிவ சமயக் குரவர் நால்வருள் ஒருவர்.]

வானத்தார் போற்றும் மருந்தே போற்றி
வந்தென்றன் சிந்தை புகுந்தாய் போற்றி
ஊனத்தை நீக்கும் உடலே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
தேனத்தை வார்த்த தெளிவே போற்றி
தேவர்க்கும் தேவனாய் நின்றாய் போற்றி
கானத்தீ ஆடல் உகந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி!

—தேவாரம், திருநாவுக்கரசு நாயனர்.

## இரட்சணிய மனோகரம்

[தீவினையினின்று பெறுகின்ற இரட்சிப்பினால் எழுந்த மனமகிழ்ச்சி யான பாடல்களைக்கொண்ட நூல் 'இரட்சணிய மனோகரம்' எனப்பட்டது. ஆசிரியர் எச். ஏ. கிருஷ்ண பிள்ளையவர்களைப்பற்றி 'இரட்சணிய யாத்தி ரிகம்' என்னும் பகுதியில் காண்க.]

கள்ளமுறுங் கடையேனும்
கடைத்தேறப் பெருங்கருணை
வெள்ளமுகந் தருள்பொழியும்
விமலலோ சனநிதியை
உள்ளுருவப் புறுதேனை
உயிர்க்குயிரை உலவாத
தெள்ளமுதைத் தீங்கனியைச்
சிலுவைமிசைக் கண்டேனே!

நிந்தனைசெய் திருப்பாணி
நிரையமூத்திக் கொலைபுரியும்
வெந்தொழிலர் 'செய்வினையின்
விளைவறியார் பொறுத்தருளும்

எந்தை'யென எழிற்கனிவாய்
இதழவிழெம் பெருமானைச்
செந்தனிக்கோல் கொளுந்தேவைச்
சிலுவைமிசைக் கண்டேனே!

## பல்சுவை : குறிப்புரைகள்

### 1. முத்துகுமார சுவாமி பிள்ளைத் தமிழ்:

செங்கீரை: கிண்கிணியும் சிலம்பும் பாதங்களில் அணியப்படுவன. அரைமணி – அரையில் அணியும் ஓராபரணம். அசும்புதல் – ஒளியொழுகுதல். பண்டி – வயிறு. பட்டம் – வாள். சுட்டி – நெற்றியணி. குழைகாது – வடிந்த காது. சூழி – ஒருவகைக் கொண்டை. முச்சி – உச்சிக் கொண்டை. குண்டலம் – ஆடவர் காதணி.

### 2. மீனாட்சி யம்மை குறம்:

செண்டு இருக்கும் வடவரை: கரிகாலன் செண்டாலெறிந்தமையால் அச் செண்டின் அடையாளமிருக்கும் இமய மலை. சேல் – பாண்டியருடைய அடையாளப் பொறி. தென்னர் – பாண்டியர். கண்டு – கற்கண்டு. துவர் இதழ் – சிவந்த உதடுகள். அம் கயல் கண் பார்வை – உமாதேவி. இவர் தடாதகைப் பிராட்டியார் என்ற பெயரில் மலயத்துவசப் பாண்டியற்குப் புதல்வியாய்த் தோன்றியமை குறித்துத் 'தென்னர் ஈன்ற... பாவை' என்றார். பரிபுரத் தாள் – சிலம் பணிந்த பாதம்.

விழுந்த – தாழ உண்டாகிய. தேறல் – தேன். பாயல் – படுக்கை. கயற்கணி – கயல் போன்ற கண்களையுடையவளாகிய உமையம்மை. வினை – பாவம்.

### 3. சீட்டுக் கவி:

விரகன் –அறிஞன்; சேடாதிபன் – ஆதிசேடன் எனும் பாம்பு; கலாகரன் – கலை வல்லோன்; திரிபதகை – கங்கையாறு; குலசேகரன் – குலத் தலைவன்; தென்பாலை – தெற்கேயுள்ள பாலைக்காடு. செழியன் – செழியதரையன். பாண்டி மன்னன் பொருட்டுப் போரிட்டுப் பாலைக்காடு சேலம் முதலியவற்றை வென்றவன் செழியன். அவனைத் 'தாகந்தீர்த்த செழியதரன்' எனவுங் கூறுவர்.

கந்தருவம் – இசை, குதிரை; கந்துகம் – பந்து, குதிரை; பத்தி – வரிசை; கோணம் – மூலை, குதிரை; கொக்கு – கொக்கெனும் பறவை, குதிரை; கோடை – கோடைக்காலம், குதிரை; குந்தம்–ஒரு போர்க் கருவி, குதிரை; பாடலம் – ஒரு காலணி, குதிரை; மா – மாமரம், குதிரை; தொடை – மாலை; சடிலம் – சடை, குதிரை; கிள்ளை – கிளி, குதிரை.

வள்ளலிடம் குதிரை வேண்டுமென்று கேட்கிறவர் இவ்வாறு சிலேடை அமைத்துப் பாடுகிறார்.

4. சிலேடை:

நிலவாய் – ஒளியாய்; நிரந்தரமாய். வான் – வானத்தில்; மேகம்.

ஓடும் இருக்கும் – (நாய்) ஓடும், நிற்கும், (தேங்காய்) ஓடு சூழ்ந்திருக்கும்.

5. மாலைப் போது:

'ஆயிரங்கோடி' என்றது எண்ணிருந்த மைல்களை. பகலோன் – சூரியன். படை – போராயுதம். அடுகளம் – போர்க்களம். ஆடி – கண்ணாடி. 'வானம் பிடித்து அதன் வண்ணம் சிவக்க' என்க. வண்ணம் – நிறம். விழுப்புண் போரில் முகத்தினும் மார்பினும் படும் காயம். ககனம் – வானம்.

இங்குக் கூறப்படும் முதியோளின் வரலாறு போன்றனவற்றைப் புறநானூறு 277, 278ஆம் பாடல்களில் காணலாம். இங்கே, அத்தமிக்கும் சூரியனுக்குப் பாசறை செல்லும் போர் வீரனும், செவ்வானத்திற்குக் குருதிக் களத்தைக் காட்டும் கண்ணாடியும், பிறைச் சந்திரனுக்கு மூதாட்டி எறிந்த அரிவாளும், பகலுக்குப் பருந்தும், மாலைக்கு நரியும் ஒப்பனைகள் ஆம்.

7. நினைவும் முடிவும்:

பொருவு – இணை, ஒப்பு. வன்மை + சிறை = வன்சிறை; பண்புத்தொகை. நறை – தேன். மதுகரம் – வண்டு. தாழ் மதம் – ஒழுகுகின்ற மதத்தினையுடைய; அற்பத்தனமான மதத்தினையுடைய எனினும் அமையும். பாசிலை: பண்புத்தொகை.

8. யார் பெரியார்:

இங்குக் 'கண்' என்றது ஏழாம் வேற்றுமை உருபினை. அது தொக்கு வருவதும் தோன்றி வருவதும் இங்குப் பாடப்பட்டன.

9. வழிபாட்டுப் பாடல்கள்:

தேவாரம்: ஊனத்தை – குற்றத்தை. உடலே – திருவுருவே. அழலாய் – நெருப்புருவாய். தேனத்தை – தேனை (அத்து : சாரியை). கானம் – மயானம்.

இரட்சணிய மனோகரம்: விமல லோசனம் – குற்ற மில்லாத கண்கள். உலவாத – கெடுதல் இல்லாத.

இருப்பாணி – இரும்பினாலாகிய ஆணிகள். நிரை – தொகுதி எந்தை : விளி. கிறிஸ்து சிலுவையில் அறையுண்டபோது, தம்மைக் கொலை புரிவார்க்காகப் பிதாவை நோக்கி, 'பிதாவே, இவர்களுக்கு மன்னியும்; தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியாதிருக்கிறார்களே' என்று வேண்டிய அருட் செயல் இங்கே கூறப்படுகிறது. எத்துணை கொடியாரையும் மன்னித்து ஈடேற்றும் கடவுளைச் சிலுவையில் கண்டேன் என்பது கருத்து.

வெங்தொழில்: பண்புத் தொகை. எந்தை : 'என் தந்தை' என்பதன் மரூஉ.

## வினாக்கள்

### முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ்:

1. பிள்ளைத் தமிழ் என்றால் என்ன?

2. செங்கீரைப் பருவத்தில் முருகன் விளங்கிய பொலிவினை நும் சொந்த சொற்களில் வரைக.

### மதுரை மீனாட்சியம்மை குறம்:

1. குறத்தி பொதிய மலையினை எவ்வாறு சிறப்பிக்கின்றாள்?

2. குறக் குடிக்கடுத்த இயல்புகளாக அவள் கூறுவனவற்றை நும் சொந்த சொற்களில் வரைக.

### முக்கூடற் பள்ளு:

வடகரை நாடு, தென்கரை நாடு ஆகியவற்றின் வளம் பாடப்பட்டுள்ள சிறப்பினை விளக்கமாக எழுதுக.

### சீட்டுக் கவி:

1. சீட்டுக் கவி என்பதென்ன?

2. இக்கவியில் வீரராகவர் தம்மைப்பற்றியும், தாகந் தீர்த்த செழியனைப் பற்றியும் கூறுவ தென்ன?

3. தமக்கொரு குதிரை வேண்டுமென்பதைக் கவிஞர் எவ்வாறு தெரியப்படுத்துகிறார்?

### சிலேடை:

நும் பாடப் பகுதியிலிருந்து காளமேகப் புலவர் சிலேடை அமைக்கும் திறனைப் புலப்படுத்துக.

### மாலைப் போது:

மாலைப்போது ஒரு போர்க்களத்திற்கு ஒப்பிடப்பட்டுள்ள வகையினை நும் சொந்த சொற்களில் எழுதுக.

### நினைவும் முடிவும்:

1. தாமரைப் பூவில் இரவெல்லாம் தூங்கிக்கொண்டிருந்த வண்டின் நினைவுகள் யாவை?

2. அந்த நினைவு நனவாயிற்று என்பதைத் தெளிவாகக் கூறுக.

### யார் பெரியார்?

இக்கவிதையில் உள்ளபடி, கவிராயர்க்கும் உரைகாரர்க்கும் உள்ள வேற்றுமை யாது? 'யார் பெரியவர்' என்பதற்கு நும்முடைய பதில் யாது?

### வழிபாட்டுப் பாடல்கள்:

1. கயிலை மலைச் சிவபிரானைத் திருநாவுக்கரசர் எவ்வாறு போற்றுகிறார்.

2. இங்குப் பாடப்பட்டுள்ளவாறு, கிறிஸ்து பெருமானின் பெருமைகளைத் தொகுத்துரைக்க.

# உரைநடைப் பகுதி

## 1. மனிதன்*

திருவாரூர் திரு. வி. கலியாணசுந்தரனார் அவர்கள்

மனிதன் எவன்? மனித உடல் தாங்கினோர் அனை வரும் மனிதராவாரோ? பின்னை எவர் மனிதர்?

உலகத்திலே உயிர்கள் எடுக்கும் பிறவிகள் பல. அவைகளுள் சிறந்தது மனிதப் பிறவி. மனிதப் பிறவி விழுப்ப முடைய தென்று கூருத அறிஞ ரில்லை. பாரி டைத் தோன்றிய பலரும் "மனிதப் பிறவி விழுமியது" என்று ஒருமுகமாக உரைத்துப் போந்தனர்.

உலகில் ஒன்றைப்பற்றி ஒருமைக் கருத்து எழல் அரிது. அரிதில் ஒன்றெழுமேல் அஃது எத்தகைமை யுடையதா யிருக்கு மென்று சொல்லவும் வேண் டுமோ? அஃது எவரும் ஏற்கத் தக்க உண்மை யுடையதா யிருந்தே தீரல் வேண்டும்,

மனிதப் பிறவியின் விழுப்பம்

மனிதப் பிறவியின் விழுப்பத்தைக் குறித்து யாண் டும் ஒரே கருத்து உலவுதல் வெள்ளிடை மலை. இஃது ஒன்றே மனிதப் பிறவியின் விழுப்பத்தை உறுதி செய்தற்குப் போதிய சான்றாகும்.

இவ்விழுமிய ஒருமைக் கருத்து நந்தமிழ்ச் சான் ரோர் உள்ளத்திலும் முகிழ்த்திருக்கிறது. அவர் மனிதப் பிறவியின் மாண்பைப்பற்றி வாய்மலர்ந்த செம்மொழி களிற் சில வருமாறு:—

"மனித்தப் பிறவியும் வேண்டுவதே
இந்த மாநிலத்தே"
"வாய்த்தது நந்தமக்கு ஈதோ
பிறவி மதித்திடுமின்"

---

*இது நம் தமிழ்ப் பெரியா ரவர்களின் 'மனித வாழ்க்கையும் காந்தி யடிகளும்' என்ற நூலிலிருந்து கொள்ளப்பட்டது.

'இன்னம் பாலிக்குமோ இப்பிறவியே' — அப்பர்

'அரிது அரிது மானுட ராதல் அரிது'—
ஔவையார்

பற்பல பிறவிகளுள் மனிதப் பிறவி மட்டுஞ் சிறந்து விளங்குவதற்குக் காரண மென்னே? அதைச் சிறிது ஆராய்வோம்.

உயிர்கள் பல திறம். அவைகளில் எவ்வித வேற்று மையும் இல்லே. உயிர்கள் உடலேப் பெற்ற பின்னரே அவைகளிடத்துப் பல திற வேற்றுமைகள் தோன்றுகின் றன. வேற்றுமை உயிரைப் பற்றியும் நிற்க வில்லே; உடலேப் பற்றியும் நிற்க வில்லே; உயிரும் உடலும் ஒன்று பட்டு வாழ்க்கையுறுங் காலத்தே உண்டாகிறது.

உயிரும் உடலும் ஒன்றுபடுங் காலத்து அறிவு விளக்கம் பெறுகிறது. அவ்விளக்கம் உயிர்கள் புகும் உடலுக் கேற்றவாறும், அவ்வுடலுள் அரும்புங் காரணங்கட்குத் தக்கவாறும், மிளிர்ந்து மிளிர்ந்து படிப்படியாக விரிந்து வளர்கிறது. அவ்வவ் வளர்ச்சி தோறும் வேற்றுமை யுற்றுக்கொண்டே போகிறது. இது பற்றியே உயிர்கள் கூட்டம் அறுவகையாக நம் முன்னேர்களால் பிரிக்கப்பட்டதுபோலும்.

தொல்காப்பியம்—பொருளதிகாரம்— ம ர பி ய லி ல் உயிர்கள் அறுதிறமாக வகுக்கப்பட்டிருப்பதைக் காண்க. அவை ஓரறி வுயிர்களாகிய தாவர முதல் ஆறறி வுயிர்க ளாகிய மனிதர் ஈருக உள்ளன. அவ்வுயிர்களிடை அறிவு விளக்கத்தில் முறை முறையே வேற்றுமை விளங்கல் கண்கூடு.

மனிதனுக்கு அடுத்தபடியாக உள்ளது விலங்கு. விலங்குக்கு ஐந்தறிவு உண்டு. மனிதனுக்கோ ஆறறிவு உண்டு. ஆருவது அறிவே மன உணர்வு எனப்படும். மன உணர்வு விலங்குகளிடத்தும் ஏனேய உயிர்களிடத் தும் விளக்க மின்றிக் கிடக்கும். அவ்வுணர்வு மனிதப் பிறவியிலேயே கூர்ந்து விளங்குகிறது. அது பகுத் தறிவு என்றுஞ் சொல்லப்படும்.

சுவை(ரசம்), ஒளி(ரூபம்), ஊறு (ஸ்பரிசம்), ஓசை (சப்தம்), நாற்றம் (கந்தம்) என்னும் ஐந்தறிவும் மனிதனுக்கும், விலங்குக்கும் பொதுவா யிருப்பன. பகுத்தறிவென்னும் மன உணர்வு மனிதப் பிறவியில் மட்டுங் கூர்ந்து விளங்குவது. இவ்வொன்றை மனிதன் சிறப்பாகப் பெற்றிருத்தலான் அவன் விலங்கினும் மேலாகப் போற்றப்படுகிருன். அவன் பிறவி விழுமிய தென்றுங் கொள்ளப்படுகிறது. இது பொது முறை. இதற்குப் புறனடையும் உண்டு.

"மனித உடல் தாங்கிய அனைவரிடத்தும் பகுத்தறிவு விளங்குகிறதா; அவ்வறிவு விளங்கப்பெற்ற எல்லாரும் அதன் வழி நின்ருெழுகுகின்றனரா" எனில், இல்லை யென்க. சிலரிடம் பகுத்தறிவு விளங்குவதே யில்லை. அவ்வறிவு விளங்கப் பெறுவோருள்ளும் பலர் அதன் வழி நின்று ஒழுகுகிரு ரில்லை. இவ்விருவரும் ஓரினத்தவரே யாவர். இவரல்லாத பிறரே மனித ராவர்.

மக்கள், மாக்கள்

இக்காரணம்பற்றியே மனித வுடல் கொண்டோர் இரு திறமாகப் பிரிக்கப்பட்டிருக்கிருர். ஒரு கூட்டத்தவர் மக்க ளெனப்படுவர்; மற்ருெரு கூட்டத்தவர் மாக்க ளெனப்படுவர். முன்னவர் மன உணர் வென்னும் ஆருவதறி வுடையவர். பின்னவர் அது விளங்கப் பெருதவர். "மக்கள் தாமே ஆறறி வுயிரே" "மாவு மாக்களும் ஐயறி வினவே" என்பது தொல்காப்பியச் சூத்திரம்.

சரித்திரக் காலத்துக்கு முன்னரே நந்தமிழ் மக்கள் மெய்ப்பாட்டானும், அகத்திணையானும் உயிர்களின் புற நிகழ்ச்சிகளையும் உள் நிகழ்ச்சிகளையும் அளந்து, உயிர்க் கூட்டங்களை அவைகளின் அறிவு விளக்கத்துக் கேற்றவாறு வகுத்துத் தொகுத்திருக்கிருர்கள். அத்தகைய தமிழ் மக்களின் நுண்ணறிவு இதுகாலை "பாழ் பட்டதே" என்று இரக்கமுருது வேறென் செய்வது?

மனிதப் பிறவியில் விளக்கமுறும் மனவுணா வென்னும் ஆறுவ தறிவு வழி நின்றொழுகுவோரே மனிதராவர் ஏனையோர் விலங்கனையா ரென்க.

மனிதன்

ஆறுவது அறிவு விளங்கப்பெற்று அதன் வழி நிற்கும் மனிதன் தன்னுயிர்போல் மன்னுயிரைப் பார்ப்பான். இரக்கமே அவன் உள்ளத்தில் குடிகொண்டு நிலவும். அவன் தனக்கென்று உலகத்தில் வாழான். தன் வாழ்க்கை மற்றவர்க்கே என்று அவன் கருதுவன். அவன் கொலை களவு கள் காமம் பொய் என்னும் ஐம் பெரும் பாவங்களுக்கு அஞ்சுவன். அவன் கரணங்களெல்லாம் அன்பு மயமாகப் பொலியும். விலங்கியல்பு அவனிடத்தில் தோன்றுதல் அருமை. அன்னான் பிற உயிர்களின் துன்பத்தைத் தன் துன்பமாகக் கொள்வன். இன்னோரன்ன இயல்பு வாய்ந்த ஒருவனையே மனிதன் என்று கூறலாம்.

மனிதப் பிறவியைப் பெற்றுள்ளோர் பலர் தமது உடலையே பொருளாகக் கொண்டு, தமது நலங் கருதி உலகத்தில் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் விலங்கு போன்றவர்கள்; மாக்கள் எனப்படுவார்கள். அக்கூட்டம் உள்ள வரை உலகத்தில் போரும் பிணக்கும், நியாய மன்றங்களும் பெருகிக்கொண்டே போகும்.

இப்பொழுது உலகத்தில் பலர் மனிதச் சட்டை போர்த்துத் திரியினும், அன்னார் இன்னும் மனிதராய் வாழ்கின்றா ரில்லை. உலகத்தில் மக்கள் பெருகி மாக்கள் அருகு நாள் எந்நாள்?

அந்நாள் அணித்தோ? சேய்த்தோ? அதை அணித்தே காண்டல் கூடும். அது மனிதன் முயற்சியைப் பொறுத்து நிற்கிறது. மனிதன் முயற்சி யெனில் கடவுள் என் செய்கிறார் என்று சிலர் கருதலாம். கடவுளைப்பற்றி உலவுந் தவறான எண்ணங்களுள் இஃதும் ஒன்று. கடவுள் துணை என்றும் ஒரு பெற்றியதாகவே யிருக்கிறது. அதன்கண் மாறுபாடு என்றும் உறுவ

தில்லை. அதை அடைய வேண்டுவது பகுத்தறிவு பெற்றுள்ள மனிதன் கடமை.

கடவுள் அங்கு இங்கு எனுதபடி எங்கும் நீக்கமற நிற்கும் பேரறிவு. அக்கடவுள் உண்மையை எங்ஙனம் உணர்வது? இயற்கையின் வாயிலாகவே அதன் உண்மையை உணரல் கூடும்.

உயிர் உடல்போலக் கடவுளும் இயற்கையும் இருக்கின்றன. இத்தொடர்பை நோக்கியே கடவுளை அப்பனென்றும், இயற்கையை அன்னையென்றும் புலவர்கள் கூறிப் போந்தார்கள்.

கடவுள் என்னும் நம் அப்பன், இயற்கை என்னும் நம் அன்னை வாயிலாகவே உயிர்களின் விளக்கத்துக்கு வேண்டப்படுங் கடன்களை ஆற்றியிருக்கிறுன். இயற்கையின் வழி மனிதன் நிற்க நிற்க அவன் கடவுளின் அருட்டுணையைப் பெற்றுக்கொண்டே போவன். இயற்கைக்கு மாறுபட்டு நிற்பவன் அத் துணை பெருது இடர்ப்படுவன். ஆகவே கடவுள் என் செய்வார்? கடவுள் செய்வதைச் செய்தே யிருக்கிறுர்.

மன்பதை முற்றும் இயற்கை வழி நிற்கும் நாள் எந்நாளோ அந்நாளே அருளுலகம் முற்றும் மலரும் நாளென்க. அந்நாளை அணித்தே காண்டல் மனிதன் கொள்ளும் வாழ்க்கையைப் பொறுத்து நிற்கிறது.

வினக்கள்

1. மனிதப் பிறவியினைப்பற்றிய கருத்தொருமைபற்றி ஆசிரியர் யாது கூறுகின்றனர்?

2. உயிரும் உடலும் ஒன்றுபடுங் காலத்து நிகழ்வது என்ன?

3. 'மனவுணர்வு' என்பது யாது?

4. பொதுமுறையாகக் கூறின் மனிதன்—விலங்கு வேறுபாடு யாது?

5. மனிதராவார் யார்?

6. ஆறுவது அறிவு விளங்கப் பெறும் மனிதரிடத்து விளங்கும் சிறப்பியல்புகள் யாவை?

7. இக்கட்டுரையில் கடவுளைப்பற்றி வெளியிடப்படும் கருத்துக்கள் யாவை?

பயிற்சி

'ஒழுக்கமே உயர்வு' என்னும் பொருள்பற்றி ஒரு கட்டுரை வரைக.

# 2. வெறுப்புப் பாயிரம்*

மகாமகோபாத்தியாய டாக்டர், உ. வே. சா. ஐயரவர்கள்

எந்த நூலாயினும் பலரிடம் சிறப்புப் பாயிரங்கள் பெற்று அவற்றோடு அதனை வெளியிடுதல் முற்காலத்து வழக்கம். அவை அதிகமாக இருப்பதை ஒரு பெரிய கௌரவமாக நினைத்து வந்தார்கள். ஒரு நூலுக்கு அதனிடத்துள்ள பொருட் சிறப்பால் மதிப்பு இருக்குமோ இராதோ அது வேறு விஷயம். தக்க வித்துவான்கள் சிறப்புப் பாயிரம் அளித்துவிட்டார்களானால் அந்த நூல் எல்லோராலும் மதிக்கப் பெறுவதாகும்.

நூல் இயற்றியவர் தக்க பண்டிதராக இருக்க வேண்டு மென்பது அவசிய மன்று; பெரிய மனிதர்களுடைய பழக்கம் அவருக்கு இருந்தால் போதும். அவர்களைக் கொண்டு அங்கங்கே உள்ள வித்துவான்களிடம் சிறப்புப் பாயிரம் வாங்கச் செய்து சேர்ப்பார்கள். நூலாசிரியரை முன்னே பார்த்திராத வித்துவான்கள்கூட இடையே வந்து வற்புறுத்தும் கனவான்களுக்காகச் சிறப்புப் பாயிரம் தருவார்கள். நூல் செய்தவர் அந்த நூலை இயற்றும் விஷயத்தில் தாம் மேற்கொள்ளும் உழைப்பைவிட அதிக உழைப்பை அதற்குச் சிறப்புப் பாயிரம் பெறுவதற்கு மேற்கொள்ளுவார். சில சமயங்களில் சில பாடல்களால் அமைந்த நூலுக்குப் பல பாடல்கள் சிறப்புப் பாயிரமாக இருப்ப துண்டு.

பெரிய வித்துவான்கள் சிறப்புப் பாயிரங்களைத் தகுதி அறிந்து அமைப்பார்கள். "இன்னார் இன்ன நூலை இன்னார் கேட்க இயற்றினார்" என்று மாத்திரம் சிலருடைய நூல்கள் விஷயத்திற் சொல்வார்கள். வேறு சிலருடைய விஷயத்தில் சிறப்புப் பாயிரமே ஒரு தனி நூலென்னும்படி சொற்சுவை பொருட்சுவை தோன்ற அமைப்பார்கள். வில்லிபுத்தூ ராழ்வார் பாரதத்திற்கு

*இவ்வரலாறு ஐயரவர்களின் "வித்துவான் தியாகராச செட்டியார்" என்னும் நூலிலிருந்து கொள்ளப்பட்டது.

முன்னே உள்ள சிறப்புப் பாயிரமும், ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய சிறப்புப் பாயிரங்களிற் பலவும் அவருடைய மாணுக்கர்கள் அவர் முறையைப் பின்பற்றி இயற்றிய சில சிறப்புப் பாயிரங்களும் இவ்வகைக்கு உதாரணங்களாகும்.

இவ்வாறு அக்காலத்தில் சிறப்புப் பாயிரம் வாங்கும் முயற்சி அதிகமாக நிகழ்ந்தமையால் அதைச் சிறப்புப் பாயிர காலம் என்று சொல்லலாம்.

சிறப்புப் பாயிரம் பெறும் முயற்சியில் ஈடுபட்டவர்களுடைய ஜபம் தியாகராச செட்டியாரிடம் பலியாது. செட்டியார் யாரிடமும் கண்டிப்பாகப் பேசுவார். செய்யுள் நன்ருக இல்லையாஞல் அந்த விஷயத்தை ஒளி மறைவில்லாமல் வெட்டென்று சொல்லிவிடுவார். ஆகையால் உண்மையான வித்துவான்களே சிறப்புப் பாயிரம் வேண்டுமென்று அவரை அணுகுவார்கள்.

இதற்கு மாருக ஒருநாள் ஐயாத்துரை யென்பவர் சிறப்புப் பாயிரத்துக்காகச் செட்டியாரிடம் வந்தார். அவர் முன்பே பலமுறை செட்டியாரிடம் வந்து முயன்றும் இவர் சம்மதியாமையால் போய்விட்டார். அவர் ஓர் அந்தாதி இயற்றியிருந்தார். இலக்கண இலக்கியங்களை ஆராய்ந்து மிகவும் சிரமப்பட்டு அந்தப் பிரபந்தத்தைச் செய்ததாகச் செட்டியாரிடம் சொல்லி எப்படியாவது ஒரு சிறப்புப் பாயிரச்செய்யுள் வேண்டுமென்று மன்ருடினுர். அதில் உள்ள குறைகளைக் கண்டு செட்டியார் கொடுக்க வில்லை. பிறகு ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் சென்று அவர் மனம் உருகும்படிப் பேசி ஒரு பாடல் கேட்டார். ஏழைகளிடத்தில் மிக்க கருணையுள்ள அப்புலவர்பிரான் மனமிரங்கி ஒரு செய்யுள் செய்து கொடுத்தார். அந்த வித்துவானுக்கு உத்ஸாகம் கட்டுக் கடங்காமல் பெருகியது. “இதைக் காட்டித் தியாகராச செட்டியாரிடமும் சிறப்புப் பாயிரம் வாங்கி விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பது,” என்ற உறுதி பூண்டு கும்பகோணத்திற்கு வந்தார்.

செட்டியாரைப் பார்த்து, "நான் எவ்வளவே வித்துவான்களிடம் சிறப்புப் பாயிரம் வாங்கியிருக்கி றேன், உங்களுக்குத்தான் மனம் இரங்க வில்லை. உங்கள் சிறப்புப் பாயிரம் இல்லாவிட்டால் எனக்குப் பெருங் குறையாகவே இருக்கும். இந்தப் பிரபந்தத்தில் குற்றம் இருக்கலாம். தாங்கள் சொல்லுகிறபடி அவற்றைத் திருத்திக்கொள்ளுகிறேன். எப்படியாவது ஒரு பாடல் செய்து தந்து என்னை ஆதரிக்க வேண்டும்" என்றார்.

"அவ்வளவு வித்துவான்கள் கொடுத்திருக்கிறார் களே; பின்னும் என்னுடையது எதற்காக?" என்று கேட்டார் செட்டியார்.

"அப்படிச் சொல்லக்கூடாது. பெரிய வித்துவான் கள் கொடுத்திருக்கிறார்களென்பது வாஸ்தவந்தான். உங்கள் குருவாகிய மகாவித்துவான் பிள்ளையவர்களே கொடுத்திருக்கிறார்கள்; ஆதலால் தாங்களும் கொடுக்க வேண்டும்."

"என்ன! உண்மையாகவா? எங்கே அதைக் காட் டும்" என்று பரபரப்புடன் செட்டியார் கேட்டார். வித்து வான் எடுத்துக் காட்டினார்.

செட்டியாருக்குப் பிள்ளையவர்களுடைய கருணை யின்மேல் கோபம் வந்தது. சிறிது நேரம் யோசித்தார். "சரி, இதோ ஒரு பாடல் சொல்கிறேன்; எழுதிக் கொள் ளும். நீர் நல்ல இலக்கணப் பயிற்சி உடையவரானால் இந்தச் செய்யுளில் அருமையான இலக்கணப் பிர யோகங்கள் இருப்பதைக் காணலாம்" என்று சொல்லி விட்டுப் பின்வரும் செய்யுளைச் சொன்னார்.

"ஐயாத் துரையென்பா னந்தாதி யொன்றினிது
செய்யாக் கொடுத்தான் திரைப்புவிக்கே—மெய்யாக்
மேலோர்செய் அந்தாதி மேன்மை
விளங்கிடப்பன்
னூலோராப் புல்லறிவி னல்."

இந்தப் பாடலை வித்துவான் எழுதிக்கொண்டு வாசித் தார்.

"விஷயம் விளங்குகிறதா?" என்று கேட்டார் செட்டியார்.

"ஒருவாறு விளங்குகிறது. பின் இரண்டடிகளில் தான் சந்தேகம்—"

"தெரியுமே, அங்கே உள்ள இலக்கணப் பிரயோகம் உமக்கு விளங்க வில்லைபோல் இருக்கிறது. சரி, பாட்டு முழுவதுக்குமே அர்த்தம் சொல்கிறேன், கேளும்" என்று இவர் ஆரம்பித்தார்.

"ஐயாத்துரை யென்பான்—ஐயாத்துரை என்று சொல்லப்படுபவன். இங்கே, என்பான் என்பதற்கு, என்று சிறப்பிக்கப்படுபவ னென்பது அர்த்தம். பழைய உரைகளில் ஊரெனப்படுவது உறையூரென்று உதார ணம் காட்டியிருப்பதை நீர் படித்திருக்கலாமே!"

வித்துவான் படித்தாரோ படிக்கவில்லையோ சந் தோஷத்தினால் பல்லை இளித்துக்கொண்டே, "ஆமாம்" என்றார்.

"அந்தாதி ஒன்று—ஓர் அந்தாதிப் பிரபந்தத்தை. ஒன்று என்பதைக் கவனியும். மற்ற எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்து தனியே புகழ்பெற்று நிற்பது; ஆகை யால் ஒன்று என்று சொல்லப்பட்டது."

"நன்றாயிருக்கிறது" என்று தலையை அசைத்தார் நூலாசிரியர்.

"இனிது செய்யாக் கொடுத்தான் திரைப் புவிக்கே: திரைப்புவிக்கு—கடல் புடைசூழ்ந்த உலகத்திற்கு உப காரமாக, இனிது செய்யா—இனிமையாகச் செய்து, கொடுத்தான்—வழங்கினான். உம்முடைய செய்யுள் உலகமெல்லாம் பரவிப் புகழடைவதற்கு ஏற்ற தென் பதைத் திரைப்புவிக்கே என்ற பாகம் குறிப்பிக்கின்றது. செய்யா என்பது செய்து என்ற அர்த்தத்தில் வரும் வினையெச்ச மென்பது தெரியு மல்லவா?"

"ஆமாம் தெரியுமே" என்றார் வித்துவான்.

"மெய்யாக—உண்மையாக, மேலோர்செய் அந்தாதி மேன்மை விளங்கிட—பெரியோர்கள் இயற்றிய அந்தாதிகளின் சிறப்பெல்லாம் இந்த அந்தாதியிலே விளங்கும்படி, பல அந்தாதிகளில் உள்ள பல வகை நயங்களும் இதில் உள்ளன என்பது கருத்து. இவ்வளவு சிறப்புப் போதாதா?"

"எல்லாம் உங்கள் பேரன்பு. உங்கள் வாக்கின் பெருமையை நான் சொல்ல வேண்டுமா?" என்று குதூகலத்தோடு வித்துவான் சொன்னார்.

"பன்னூல் ஓரா—பல நூல்களை ஆராய்ந்து, புல்—அதனுற் பொருந்திய, அறிவினுல்—கல்வியறிவினுல். ஓரா என்பது செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். புல்லறிவு வினைத்தொகை. தெரிந்ததா?"

"தெரிந்தது."

"ஆகவே இந்தப் பாட்டினுல் உம்முடைய நூலாராய்ச்சியையும் அறிவையும் சிறப்பித்துப் பாராட்டியிருக்கிறேன்" என்று செட்டியார் தம் பிரசங்கத்தை முடித்தார்.

அந்த வித்துவான் சந்தோஷத்தால் பூரித்துப் போனுர். பாவம்! அந்தச் செய்யுளை விஷமமாகச் செய்து கொடுத்ததாக எண்ண முடியாதபடி செட்டியார் பொருள் சொல்லி அவரை மயக்கி அனுப்பிவிட்டார். அந்தப் பாட்டுச் சிறப்புப் பாயிரமாக இராமல் வெறுப்புப் பாயிரமாக இருப்பதை அந்த மனிதர் உணரவே இல்லை.

ஐயாத்துரை மறுநாளே திருவாவடுதுறைக்கு வந்து செட்டியார் அளித்த செய்யுளைப் பிள்ளையவர்களிடமும் அவருடைய மாணுக்கர்களிடமும் காட்டி மகிழ்ந்தார். நாங்கள், செட்டியார் வேண்டு மென்று அவ்வித்துவானைக் குறைவாகச் சொல்லியிருத்தலை அறிந்து உள்ளுக்குள்ளே சிரித்தோம். வித்துவானிடம் ஒன்றும் சொல்ல வில்லை. அந்த வாரம் சனிக் கிழமை யன்று செட்டியார் மடத்திற்கு வந்தார். பிள்ளையவர்களிடம்,

"யார் வந்து கேட்டாலும் சிறப்புப் பாயிரம் கொடுத்து விடுகிறீர்கள். எனக்கு அது கழுத்தறுப்பாக முடிகிறது. எந்த மடையனாவது தப்புந் தவறுமாக எதையாவது பாடிக்கொண்டு வந்து சிறப்புப்பாயிரம் வேண்டுமென்று கேட்கிறான். நான் கண்டிப்பாக மறுத்து விடுகிறேன். உடனே இங்கே ஓடிவந்து உங்களிடம் அழுது புலம்பிக் கேட்கிறான். நீங்கள் சிறப்புப் பாயிரம் கொடுத்துவிடு கிறீர்கள். அவன் அதைப் பெற்றுக்கொண்டு சும்மா போகிறானா? அதை எடுத்துக்கொண்டு என் முகத்துக்கு நேரே நீட்டி, 'உங்கள் குருவே கொடுத்திருக்கிறபோது நீங்கள் பிரமாதப்படுத்திக்கொள்கிறீர்களே' என்கிறான். 'அரவு யர்த்தோன் கொடுமையினும் முரசுயர்த்தோய் நினதருளுக் கஞ்சினேனே' என்று பீமன் சொன்ன வார்த்தையை நான் சொல்ல வேண்டியிருக்கிறது. உங்கள் கருணை என்னைத் தர்ம சங்கடத்திற்கு உள்ளாக்கு கிறது" என்று படபடப்பாகப் பேசினார்.

"அது கிடக்கட்டும்; ஐயாத்துரைக்கு நீ என்ன, அப்படிப் பாடிக் கொடுத்தாய்?" என்று பிள்ளையவர்கள் கேட்டார்கள்.

"பின்னே என்ன செய்வது? அவன் அதில் இருக்கிற விஷயம் இன்ன தென்று தெரியாமலே உத்ஸாகத்தோடு வாங்கிக்கொண்டு போய்விட்டான். நாளைக்கு யாராவது அந்தப் பாட்டின் உண்மைப் பொருளைச் சொன்னால் பிறகு என் பக்கமே திரும்பிப் பார்க்கமாட்டான்" என்று விடை யளித்தார் செட்டியார்.

"அந்தப் பாட்டினால் அவரை எப்படித் திருப்திப் படுத்தினாய்?" என்று ஆசிரியர் கேட்டார்.

செட்டியார் தாம் அவருக்குச் சொன்னபடி பொருளைச் சொல்லிக் காட்டினார். அருகில் எல்லாவற் றையும் கேட்டுக்கொண்டிருந்த நாங்கள், "அதன் உண் மைப் பொருளையும் உங்கள் வாயாலேயே சொல்லி விடுங்கள்" என்று வேண்டிக்கொண்டோம். அவர் சொல்லத் தொடங்கினார்:

"ஐயாத்துரை என்பான்—ஐயாத்துரை யென்னும் அநாமதேயப் பேர்வழி, அந்தாதி ஒன்று—அந்தாதி ஒன்றை, இனிது செய்யா—இனிமையாகச் செய்யாமல் (பல குற்றங்களுடன் இயற்றி), திரைப்புவிக்கே கொடுத் தான்—இந்த மண்ணில் போடுவதற்குத் தகுதியானபடி கொடுத்தான். மெய்யாக—உண்மையாக, மேலோர் செய் அந்தாதி மேன்மை விளங்க—இந்த நூலின் சிறுமை யாலே முன்னோர்கள் இயற்றிய அந்தாதிகளின் மேன்மை நன்றாகப் புலப்படும்படி, பன்னூல் ஓராப்புல் அறிவினால்—பல நூல்களை ஆராயாத புன்மையான அறிவினால். படிக்காத மூடன்; அவன் பிரபந்தம் மண்ணிலே எறியத்தான் ஏற்றது என்பது கருத்து."

இப்படிச் சொல்லி முடிந்தவுடன் முன்னே அவர் சொன்ன அர்த்தத்துக்கும் இதற்கும் எவ்வளவு மாறு பாடு உள்ள தென்பதை அறிந்து விழுந்து விழுந்து சிரித்தோம்.

## வினாக்கள்

1. முற்காலத்தில் சிறப்புப் பாயிரம் பெறும் வழக்கத்தினைப்பற்றி எழுதுக.

2. அக்காலத்தே பெரிய வித்துவான்கள் சிறப்புப் பாயிரம் எவ்வாறு வழங்கினார்கள்.

3. தியாகராச செட்டியாருடைய குணவிசேடத்தினைப்பற்றி எழுதுக.

4 ஐயாத்துரை என்பார் தம் அந்தாதி நூலுக்குச் செட்டியாரவர் களிடம் சிறப்புப் பாயிரம் பெற்ற வரலாற்றினை வரைக.

5. தாம் செய்த பாயிரப் பாட்டுக்குச் செட்டியாரவர்கள் ஐயாத்துரை யிடம் சொன்ன பொருள் யாது?

6. அவர்கள் பிள்ளையவர்களின் மாணக்கரிடம் அப்பாடலுக்குச் சொன்ன உரை யாது?

## பற்யிசி

'ஆசிரியரும் மாணவரும்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை வரைக.

# 3. திருக்குறள் உவமைத் திறம்*

டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள்

உலகில் வழங்கி வருகின்ற ஒவ்வொரு மொழியிலும் நூல் இயற்றுகின்ற புலவர்கள் பல வகை அணிகளை ஆங்காங்கு அமைத்துத் தமது நூலை அழகு செய்வது வழக்கம். அவ்வாறே தமிழ் மொழியிலும் நூல் எழுதப்போந்த புலவர்கள் சிந்தைக்கும் செவிக்கும் இன்பம் தருவனவாகிய பலவகை அணிகளை அமைத்து அழகு செய்துள்ளார்கள். இத்தகைய அணிகளில் உவமை அணி என்பதே சிறந்த தாகும்.

## உவமை அணியின் தன்மை

ஒரு நூலாசிரியர் தாம் எடுத்துக்கொண்ட பொருளை இனிது விளக்கி மேம்படுத்தும் பொருட்டு அதனோடு மற்றொரு தெரிபொருளை ஒப்பிடும் பான்மையே உவமையென்று சொல்லப்படும். இத்தன்மை வாய்ந்த அணி பலவகையாக இலக்கியங்களில் பயின்றுள்ளது.

## சங்க நூல்களும் பின் நூல்களும்

உவமை அணியை ஆளும் தன்மையில் சங்க மருவிய நூல்களுக்கும், பிற் காலத்து நூல்களுக்கும் பெரிதும் வேற்றுமை காணப்படுகின்றது. சங்க நூல்களில் காணப்படுகின்ற உவமைகள் பெரும்பாலும் மிகைபடாமல், எடுத்துக்கொண்ட பொருளை இனிது மனத்தில் விளக்குகின்றன. ஆனால் பிற்காலத்துச் சிலவற்றில் ஆளப்பட்டுள்ள உவமைகள் வரம்பு இகந்து மிகைபட்டு வனப்பின்றி அமைந்திருக்கின்றன.

---

*இக்கட்டுரை 'திருவள்ளுவர் நூல்நயம்' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டது. சென்னை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்பட்டது இந்நூல்.

## சாதாரணப் பொருளை உவமையாகக் கூறல்

தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனர் அமைத்திருக்கின்ற உவமைகள் பெரும்பாலும் ஆழமும் அழகும் உடையனவாய், நவில்தோறும் நமக்கு இன்பம் தந்து மகிழ்விக்கின்றன. உவமைக்காக எடுத்துக் கொள்ளும் பொருளும், எப்போதும் நம்மைச் சுற்றிலும் காணப்படும் சாதாரணப் பொருள்களாகவே இருக்கக் காண்கின்ருேம். இத்தகைய சாதாரணப் பொருள்களைக் கொண்டு உயரிய உண்மைகளை ஆசிரியர் விளக்கும் திறம் கண்டு மகிழ்வதற் குரியதாகும். உலகப் பொருள்களை ஒரு புலவர் பார்ப்பதற்கும், மற்றையவர்கள் பார்ப்பதற்கும் பெரிதும் வேற்றுமை யுண்டென்று அறிவுடையோர் கருதுகின்ருர்கள். மற்றைய மக்களுக்குச் சாதாரணப் பொருள்களாகவே தோன்றும் உலகப் பொருள்கள் புலவர்கள் மனத்தில் மாண்புடைய கருத்துக்களையும், எண்ணங்களையும் எப்பொழுதும் எழுப்புவனவாகும். நறுமணங் கமழும் நந்தவனத்தில் செல்லும் ஒருவன், அதன்கண் அழகிய பல நிறங்களோடு அமைந்து விளங்கும் மலர்களைக் கண்டு மகிழ்வான். அம்மலர்களின் இனிய மணத்தை நுகர்ந்து இன்பமடைவான். ஆனல் ஒரு புலவன் அந்நந்தவனத்தில் செல்வானுல், அங்கு அவன் கண்ணெதிரே தோன்றும் ஒவ்வொரு மலரும் இறைவனது பெருங் கருணைத் திறத்தையும் பேராற்றலையும் விளக்கிக் காட்டும் விழுமிய பொருளாக அமையும். மலரில் அமைந்து விளங்கும் மணமானது இறைவனுடன் இரண்டறக் கலந்த ஆன்ருேர் தன்மையை அறிவுறுத்தி நிற்கும். இதுவே கற்ருேர் ஒரு பொருளைக் காண்பதற்கும், மற்ருேர் அதனைக் காண்பதற்கும் உள்ள வேற்றுமை யாகும்.

## தலை மயிரும் இழிந்த மக்களும்

இத்தன்மையை நாயனர் குறளில் நன்கு காணலாம். தலையினின்றும் மயிரானது பிரிந்து கீழே விழுவதை நாம் ஒவ்வொரு நாளும் கண்டிருக்கின்ருேம். ஆனல்

அக்காட்சி நம்முடைய மனத்தில் ஓரெண்ணத்தையும் எழுப்பிய தில்லை. ஆனால் இப்பொருளை உவமையாகக் கொண்டு நம் ஆசிரியர் ஓர் உயர்ந்த உண்மையை வெளியிடுகின்றார்.

தலையின் இழிந்த மயிர் அனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை

என்னும் குறளில் கண்ட உவமையைச் சிறிது கருதுவோம். மக்களாய்ப் பிறந்தவர்கள், தமக்குரிய நிலையினின்றும் தவறுவார்களானால், அவர்கள் தலையினின்றும் இழிந்த மயிரினை ஒப்பார்கள் என்பது இக்குறளின் கருத்தாகும். மக்களாய்ப் பிறந்தவர்கள் தமது உயர் பிறப்பிற்கு உரிய ஒழுக்கத்தில் தவறாதவர்களாய், தமக்குரிய நிலையில் வழுவாது இருப்பார்களேயானால், எல்லாராலும் போற்றப்படுவார்கள். ஆனால், மக்கள் தம் நிலையினின்றும் தவறுவார்களாயின், எல்லாராலும் அவமதிக்கப்பட்டு இழிவடைவார்கள். தலையிலுள்ள மயிரானது தனக்குரிய உயர்ந்த இடத்தில் இருக்குமளவும், நறுநெய் பூசி, நன்மலர் சூடி, பூவும் புகையும் மேவிய விரையும் பொருந்தித் திகழும். ஆனால் அம் மயிரானது, தன்னிலையினின்றும் தவறிக் கீழே விழுமானால் தனது வளமும் வனப்பும் இழந்து, காலால் மிதியுண்டு, புழுதியில் விழுந்து, துடைப்பத்தால் புழைக்கடையில் தள்ளுதற்குரிய தன்மை எய்தும். இவ்வுவமையின் பொருத்தமும் உண்மையும் தெளிவாக விளங்குகின்றது.

உறங்கலும் விழித்தலும்
இறத்தலும் பிறத்தலும்

இன்னும் ஓர் உவமையை எடுத்துக்கொள்வோம். உறங்குவதும், விழிப்பதும் நாம் ஒவ்வொருவரும், ஒவ்வொரு நாளும் செய்கின்ற தொழில்களாம். சிலர் தம் மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றில், ஒரு நாளிலேயே பலமுறை உறங்குவதும் விழித்தலும் உண்டு. ஆயினும் அந்நிகழ்ச்சி நம் மனத்தில் யாதோர்

அரிய கருத்தையும் தூண்டியதில்லை. ஆனால் நம் தெய்வப் புலவர், இவ்வியற்கை நிகழ்ச்சியைக் கொண்டு, விளக்குதற்கரிய மறுபிறப்புண்மையை நன்கு விளக்குகின்றார்.

உறங்கு வதுபோலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

மக்களுக்கு இவ்வுலகில் இறத்தலும், பிறத்தலும், இயல்பாகவே மாறி மாறி வருகின்றன. பிறந்தவர் இறத்தலும், இறந்தவர் மீண்டும் பிறத்தலும், உறங்குவதும் பின் உறக்கத்தினின்றும் விழித்தலும் போலவே இருக்கின்றன. ஒருவன் உறங்கும் காலத்தில், அவனுடைய ஐம்பொறிகளும் அயர்ந்து, உணர்வு அற்றிருந்தாலும், மனம் அயராத நிகழ்ச்சியுடையதாய் இருத்தல்போல, "இறக்கும்பொழுது உடல் ஒன்றே போன்றி ஒழியுமன்றி, அவ்வுடம்பில் தங்கியிருந்த உயிர், அழியாது மறு பிறப்பில் சென்று சேரும்." இவ்வுவமையின் நயத்தை உணர்ந்தே, மணிமேகலை நூல் செய்த சீத்தலைச் சாத்தனர்,

'பிறந்தவர் இறத்தலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்றது உண்மையின்,'

என்று திருக்குறள் உவமையையே அமைத்துத் தம் நூலை அழகு செய்தனர்.

**கை மானம் காத்தலும்**
**நண்பன் துன்பங் களைதலும்**

இன்னும் மற்றொரு எளிய உவமையால் நாயனர் நட்பின் திறத்தினை நன்றாக எடுத்துரைத்தார்.

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு.

ஒருவனது மானத்தைக் காக்கின்ற ஆடை நெகிழ்ந்து விடுமாயின், கையானது விரைந்து சென்று அவிழ்ந்த ஆடையைக் கட்டுவதை நாம் ஒவ்வொருவரும் கண்டிருக்கின்றோம். இதனை உவமையாகக்

கொண்டு நட்பின் இயல்பை நாயனார் விளங்க வைத்தார். ஒருவன் அரையில் கட்டியிருக்கும் ஆடை அவிழ்ந்து விழுமேயானால், அவ்வரைக்கு வந்த மானத்தைத் தனக்கு வந்ததாக எண்ணி, கையானது விரைந்து சென்று உடையை மறுபடியும் உடுத்து மானங் காக்கும். அதுபோல, ஒருவன் துன்பத்தால் வருந்துவானாயின், அவனுக்கு நேர்ந்த துன்பத்தைத் தனக்கு நேர்ந்ததாக நினைந்து விரைந்து சென்று அத்துன்பத்தைக் களை தலே நண்பனது தன்மையாகும். மெய்வேறு கைவேறு என்னும் வேற்றுமை யின்றி மெய் தானடைந்த மானத்தைக் கை தானாகவே சென்று காத்தல்போல, அவன் வேறு, தான் வேறு என்னும் உணர்ச்சியின்றி அவனே தானாய்த் தானே யவனாய் எண்ணி, அவன் வேண்டிக் கொள்ளாத நிலைமையில், தானே விரைந்து சென்று துயர் களைதல் நண்பனது தன்மை யாகும். இவ்வாறு உலகில் ஒவ்வொருவரும் அறிந்த ஒரு நிகழ்ச்சியைக் கொண்டு நாயனார் ஓர் உயரிய உண்மையைத் தெளிவாக விளக்கியுள்ளார்.

* * *

மணமற்ற மலர்

இன்னும், நன்றாகப் பல நூல்களைப் படித்திருந் தும் பேசுந் திறமை அமையப் பெறாத மக்களைப்பற்றிப் பேசவந்த நாயனார்,

> இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்ற(து)
> உணர விரித்துரையா தார்,

என்று கூறுகின்றார். கொத்துக் கொத்தாய் மிக அழ காக மலர்ந்திருக்கும் பூக்கள் மணமில்லாதிருந்தால் பயனழிதல் போல, தாம் கற்ற பொருளை எடுத்துச் சொல்லும் இயல் பில்லாதவர்கள் பயனற்றவராவார்கள் என்பது இக்குறளின் பொருளாகும். ஒரு மலரைக் காணும்பொழுது, அதனது அழகிய இதழ்களையும், நிறத்தையும், அழகையும் கண்டு ஆனந்த மடைகின் றோம். இன்னும் கொத்துக் கொத்தாக மலர்ந்து விளங்

கும் மலர்களின் அடுக்கையும் அமைப்பையும் கண்டு களிக்கின்றோம். ஆயின் ஒரு மலரின் நலம் அதன் மணமே யாகும். மணமற்ற மலர் மாண்புடையதாகக் கொள்ளப்படமாட்டாது. அதுபோல பல நூல்களையும் கற்றுணர்ந்த நல்லாரைக் காண்பது நன்றே யாகும். கல்வி அழகைத் தம்மிடத்தில் கொண்டு விளங்குதலால் அவர் காட்சி மனத்திற்குப் பெரிதும் மகிழ்ச்சி தரு கின்றது. ஆனால் தாம் கற்ற பொருளைப் பிறர்க்கு எடுத்துச் சொல்ல இயலாதவிடத்து, அவர் கல்வி மணமற்ற மலர்போல் பயனற்றதாகும். இக்கருத்தையே பிற்காலத்துப் புலவர் ஒருவர், 'கல்வியொடு சொல் வன்மையும் அமைந்திருப்பது பொன்மலர் மணமும் உடையது போலாகும்' என்று கூறிப்போந்தார்.

## உவமானமும் உதாரணமும்

இனி உவமானத்திற்கும், உதாரணத்திற்கும் உள்ள வேற்றுமையை நன்றாய் உணர்ந்து கொள்ள வேண்டும். இவ்வேற்றுமையை நாயனார் குறளில் நன்கு காணலாம். பெரும்பாலும் உவமை என்னும் அணியில், உவமானம் என்றும் உவமேயம் என்றும் இரண்டு பகுதிகள் காணப்படும். இவற்றுள் உவமானமாக ஆசிரியர்கள் எடுத்து ஆளும் பொருள், காட்சியாலாவது அல்லது நூலறிவாலாவது, நன்றாய்த் தெளியப்பட்ட ஒரு பொருளாக இருக்கும். இவ்வாறு தெரிந்த பொருளைக் கொண்டு, வேறொரு பொருளின் தன்மையையோ, அல்லது உயரிய உண்மைகளையோ, தெளிவுபடுத்துவதே வழக்கமாகும். இதுவே உவமையின் தன்மையென்று இதுகாறும் ஆராய்ந்த உவமைகளால் அறிந்திருக்கலாம். ஆனால் நாயனார் நூலில் உவமைபோன்ற உதாரணங்கள் அமைந்திருக்கக் காண்கின்றோம். அருளில்லார்க்கு அவ்வுலக மில்லாததுபோல, பொருளில்லார்க்கு இவ்வுலக மில்லை என்பது ஒரு குறளின் கருத்தாகும். அழுக்காறுடையவனிடம் ஆக்கம் இல்லை. அதுபோல ஒழுக்க மில்லானிடம் உயர்வு இல்லை

என்பது மற்றொரு குறளின் பொருளாகும். இவைகளில், ஓர் உண்மையை மற்றோர் உண்மையால் விளக்கும் தன்மை காணப்படுகின்றதே யல்லாமல், உவமையணியாக இவற்றைக் கருதுவதற்கு இடமில்லை. ஆகவே இத்தன்மை வாய்ந்த ஒப்புமை காணுமிடத்து அதனை உவமையென்று கொள்ளாது உதாரணம் என்று கொள்ளுதலே பொருத்தமாகத் தோன்றுகிறது.

## முடிவு

இதுகாறும் கூறியவற்றால், தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் தமது நூலில் அமைத்த உவமைகள், அப்பெரியாரது அறிவின் ஆழத்தையும் பரப்பையும் வெள்ளிடை மலைபோல் விளக்குகின்றன வென்பதும், அவர் எடுத்தாளும் உவமைகள், அளவிற் சிறியனவாய் அமைந்திருப்பினும், ஆழமும் அழகும் ஒருங்கே யுடையனவாய், பயில்வோருக்குப் பெரும்பயனையும், நயனையும் அளிக்கின்றன வென்பதும் நன்கு அறியப் படும்.

### வினாக்கள்

1. உவமை என்பது என்ன?

2. உவமை ஆட்சியில் சங்க கால நூல்களுக்கும் பிற்கால நூல்களுக்கும் உள்ள வேற்றுமை என்ன?

3. 'மாந்தர் நிலையின் இழிந்தக் கடை' அவர் எதனை ஒப்பர்? எவ்வாறு?

4. சாக்காடு பிறப்பு ஆகிய இவ்விரண்டனையும் வள்ளுவர் விளக்கும் நயத்தினைப் புலப்படுத்துக.

5. 'உடுக்கை இழந்தவன் கை' எதற்கு உவமையாக ஆளப்பட்டது? அவ்வாட்சியின் பொருத்தத்தினைக் காட்டுக.

6. 'இணரூழ்த்தும் நாறா மலர்' எதற்கு உவமையாக ஆளப்பட்டது? அவ்வாட்சியின் பொருத்தத்தினைக் காட்டுக.

7. 'உவமைபோன்ற உதாரணங்கள்' என ஆசிரியர் கூறும் கருத்தினைச் சுட்டிச் சான்றுகளும் தருக.

### பயிற்சி

இப்பாடத்துள் வாராதனவும் உவமையணி யமைந்தனவுமாய இரண்டு குறட்பாக்களைத் தெரிந்துகொண்டு அவற்றிற்கு நும் சொந்த சொற்களில் நயம் வரைக.

# 4. கீதாஞ்சலி*

இரவீந்திரநாத தாகூர்

தமிழாக்கம்: வி. ஆர். எம். செட்டியார் அவர்கள், பி.ஏ.

## இறைவன் படைத்தான்

இறைவ! என்னை முடிவற்ற நிலையில் படைத்திருக்கின்றாய். அதுவே நினது இச்சை. இந்த மண் பாண்டத்தை அடிக்கடி காலி செய்து புத்துயிர் நிறைக்கின்றாய்.

இச்சிறிய வேய்ங்குழலைக் கையிலேந்தி நீ காடு மலையெல்லாம் கடந்து செல்கின்றாய், போகுமிடமெல்லாம் குழல் ஊதி நவ நவமான அமுத கீதங்களை அள்ளிச் சொரிகின்றாய்.

சாகா வரமளிக்கும் நின் கரம் தீண்டியதும், என் ஏழை உள்ளம் இன்பத்தின் எல்லை தாண்டி நின் வண்மையைப் பாட ஆரம்பிக்கிறது.

என் சின்னஞ் சிறு கைகள் நிரம்பி வழியும்படி நீ அரிய பல கொடைகள் அருள்கின்றாய். யுகம் யுகமாக நின் கொடைகள் கருணைப் பிரவாகமாய்க் குவிந்து பெருகுகின்றன. ஆயினும் நான் இன்னும் குறையிரந்து நிற்கின்றேன்.

## காணிக்கை

இந்தச் சிறு பூவைப் பிடுங்கி எடுத்துக்கொள் தாமதியாதே, அது வாடி மண்ணில் விழுந்து மறையும் என்று அஞ்சுகிறேன்.

நினது மாலையில் அதற்கு ஓர் இடம் அமையாவிடினும், நினது கையால் கிள்ளி எடுத்துக்கொள்; அதில் ஒரு துக்க ஸ்பரிசம் அமைந்துள்ளது. நான் இதை அர்ப்பணிக்குமுன், இன்றைய தினம் முடிந்துவிடுமோ என்று கவலையுறுகிறேன்.

---

* இவை சென்னை, 'ஸ்டார் பப்ளிகேஷன்ஸ்' என்ற பண்ணையாரின் 'கீதாஞ்சலி' என்னும் தமிழ்ப் பதிப்பிலிருந்து கொள்ளப்பட்டவை.

அதனுடைய வருணம் ஆழமில்லாவிடினும், அதனுடைய வாசனை மங்கியிருந்தபோதிலும், இப்போதே காலத்தை இழந்துவிடாமல், இந்தப் பூவைக் கிள்ளி நினது பணிக்கு அமைத்துக்கொள்ளுக!

## திருவடிகள் திரியும் இடங்கள்

உனது பாத கமலங்களுக்கு ஏற்ற பொன்மணை இங்கே இருக்கிறது. ஆனால் பாதங்களை இங்கே காணவில்லை. தீனர், திக்கற்றவர், தாழ்ந்தோருடைய குடிசைகளிலே, உன் திருவடிகள் தங்குகின்றன.

நான் உனக்குச் செய்யும் பணி அவ்வளவு தாழ்ந்த ஆழத்தில் கலக்க வில்லை. அங்கமெலாம் வளைந்து நான் பணிந்து பணிந்து பார்த்தாலும், தீனர், திக்கற்றவர், தாழ்ந்தோரிடையே விளங்கும் உன் சேவடிக் கொழுந்துவரை அவ்வளவு தாழ்வாகப் பணிய முடியவில்லை.

தீனர், திக்கற்றவர், தாழ்ந்தோரிடையே கந்தை உடுத்துத் திரியும் நின் கழலிணைச் செருக்குடையார் எந்நாளும் சேரவே முடியாது.

தீனர், திக்கற்றவர், தாழ்ந்தோரிடையே, நாதியற்றவருக்கு நாதியாய், ஏழை பங்காளனாய் நீ திரிந்து உலவும் இடத்தைச் சேர்வதற்கு, எது வழி என்று அறியாமல் என் இருதயம் இடர்ப்படுகின்றது.

## இறைவன் எங்கே

ஜப மாலை உருட்டுவதை விட்டுவிடு! மந்திரமும் தந்திரமும் ஆடலும் பாடலும் அவனைக் காட்டமாட்டா! தாளிட்டு அடைபட்ட கோயிலின் இருளடைந்த மூலையில், யாரைப் பூசிக்கிறாய்? கண்களைத் திறந்து, உன் கடவுள் உன் முன்னிலையில் இல்லையென அறிந்துகொள்!

கடினமான தரையில் ஏர் கட்டி உழுவாரிடமும் சாலை அமைக்கச் சரளைக்கல் உடைப்பாரிடமும் அவன் இருக்கிறான். அவர்களுடன் அவன் மழையில் நனை

கிருன், வெயிலில் உலர்கிருன். அவன் ஆடையில் தூசி படிந்திருக்கிறது. உன் காஷாயத்தைக் களைந்தெறி; அவனைப் போலவே நீயும் புழுதியில் இறங்கி வா!

விடுதலை! எங்கிருந்து விடுதலை கிடைக்கும்? நம் ஆண்டவனே நம்மீது அருள் சுரந்து சிருஷ்டித்தளை களைத் தன் திருமேனியில் பூண்டிருக்கிருன்; என்றும் நம்மைவிட்டுப் பிரிய முடியாமல் அவன் இணைக்கப்பட் டிருக்கிருன்.

பூவையும் நறும்புகையையும் உன் பூசையையும் விட்டு வெளியே வா! உன் ஆடை கிழிந்து அழுக் கடைந்தால் என்ன? நெற்றி வேர்வை நிலத்தில் விழ உழைத்து, நின் ஈசனைக் கண்டுகொள்!

சுதந்தர சுவர்க்கம்

எங்கு மனம் பயமற்று விளங்குகிறதோ,
எங்கே தலை கம்பீரமாய் நிமிர்கிறதோ,
எங்கு அறிவு சுதந்தரத்துடன் பொலிகிறதோ,
எங்குக் குறுகிய சாதிமதப் பிளவுகளால் உலகம்
உடையாமல் உருப் பெற்றிருக்கிறதோ,
எங்கு உண்மையின் ஆழத்தினின்று சொற்கள்
உதயமாகின்றனவோ,
எங்கே தளரா முயற்சி பரிபூரணத்தை நோக்கிக்
கைகளைப் பரப்புகிறதோ,
எங்குப் பகுத்தறி வெனும் தெளிந்த ஆறு
மாண்டொழிந்த பழக்கங்களான பயங்கரப்
பாலை மணலில் பாயாது மீள்கிறதோ,
எங்கே விரிந்த சிந்தனையிலும் செயலிலும் எனது
உள்ளத்தை நினது அருள் இழுத்துச்
செல்லுகின்றதோ
அந்தச் சுதந்தர சுவர்க்கத்தில், என் அப்பனே,
எனது நாடு விழித் தெழுவதாக!

குழந்தை

குழந்தையின் கண்களில் தவழும் தூக்கம் எங் கிருந்து வருகிறது, யாருக்காவது தெரியுமா? மின்மினி

கள் பிரகாசிக்கும் நிழல் நிறைந்த கானகத்தின் நடுவி லுள்ள ஒரு கிராமத்தில், இரண்டு மாய மொட்டுக்கள் தொங்கிக்கொண்டிருக்கின்றன. இவைகளிலிருந்துதான் தூக்கம் பிறக்கிற தென்று வதந்தி. அங்கிருந்துதான் தூக்கம் குழந்தையின் கண்களைக் கொஞ்ச வருகிறது!

குழந்தை தூங்கும்போது அதன் உதடுகளில் மின்னும் சிரிப்பு எங்கிருந்து வருகிறது, யாருக்காவது தெரியுமா? ஆம், ஒரு பிறைச் சந்திரனின் வெண்மை யான இள வெண்கிரணம், இலையுதிர்காலத்தில், மறை யும் ஒரு மேகத்திரையின் முனையைத் தொட்டு, காலைப் பனியிற் குளித்த கனவில் தோன்றியது அந்தப் புன் முறுவல்,—என்றொரு வதந்தி பரவி வருகிறது—குழந் தையின் உதடுகளில் தவழ்ந்து விளையாடும் புன்முறுவல்!

குழந்தையின் அவயவங்களில் மலர்ந்து சொலிக் கும் மெல்லிய இனிய புதுமை—இஃது இந்நாள்வரை எங்கே ஒளிந்திருந்தது, யாருக்காவது தெரியுமா? ஆம், குழந்தையின் தாய் ஒரு சிறு பெண்ணுயிருந்தபோது, அது காதலின் மௌன விந்தையாக அவளுடைய இத யத்தில் உறங்கிப் பரவிக் கிடந்தது—சிசுவின் உடலில் மலர்ந்து கிடக்கும் இனிய மெல்லிய புதுமை வெள்ளம்!

**காரணம்**

எனது குழந்தாய், நான் உனக்கு வருணம் தீட்டிய பொம்மைகள் கொண்டுவரும்போது, மேகங்களிலும் நீரிலும் வண்ண சாலங்கள் விளையாடுவதன் காரணத்தை யும் மலர்களில் வண்ணங்கள் தீட்டப்பட்டிருப்பதன் காரணத்தையும் உணர்கின்றேன்.

நீ ஆட வேண்டும் என்பதற்காக நான் பாடும் பொழுது, இலைகளின் சலசலப்பில் இசை அமைந் திருக்கும் காரணத்தையும், பூமி தேவியின் இதயத்தில் ஒலிக்கும் வண்ணம் கடல் அலைகள் ஒன்று சேர்ந்து இசைப்பதன் காரணத்தையும் நான் உண்மையாக அறிந்துகொள்கிறேன்.



நீ ஆவலோடு நீட்டி யுள்ள கைகளுக்கு நான் இனி மையான தின்பண்டங்கள் கொண்டு வரும்பொழுது, பூக்கிண்ணத்தில் தேன் நிறைந்திருப்பதற்கும், கனி வர்க்கங்களில் இனிய ரசம் இரகசியமாய் நிரம்பிவருவ தற்கும் என்ன காரணம் என்பதை நான் உண்மை யாகவே அறிந்துகொள்கிறேன்.

உன்னைச் சிரிக்க வைக்க நான் உன் முகத்தில் முத்த மிடும்போது, விண்ணிலிருந்து காலை ஒளி மின்னிப் பீறிட்டு வரும் இன்பத்தையும், வேனில் காற்று என் உடலுக்கு அளிக்கும் இன்பத்தையும் நான் நன்கு உணர்கிறேன்.

இறை தரும் கோடை

அநித்தியமான மானிடராகிய எங்களுக்கு நீ அளிக்கும் கொடைகள், எங்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்துவிட்டுக் குறையாமல் உன்னிடமே திரும்பி வருகின்றன.

ஆறு தன்னுடைய நித்திய வேலையைச் செய்கின் றது; கழனிகளின் வழியாயும் கிராமங்களின் வழியாயும் வேகவேகமாய் ஓடுகிறது. ஆனல் இடையருது அதன் வெள்ளம் இறுதியில் உன் திருவடிகளைக் கழுவவே ஓடி வருகிறது.

பூ தன் மணத்தால் காற்றை இனிமையாக்கு கிறது; ஆனல் இறுதியில் தன்னை உனக்கே அர்ப் பணிக்கிறது.

உன்னைப் பூசிப்பதால் உலகம் குறைவடைய வில்லை; வறுமை யடைய வில்லை.

கவிஞனின் சொற்களினின்று, மனிதர்கள் தமக்கு விருப்பமான பொருள்களைக் கொள்ளுகிருர்கள். ஆனல் அச்சொற்களின் இறுதிப் பொருள் உன்னையே சுட்டிக் குறிக்கின்றது.

## வினக்கள்

1. கீதாஞ்சலி: குறிப்பு வரைக.

2. 'வேய்ங்குழல்' என்று இங்கு குறித்தது எதனை? அதன் பொருட் சிறப்பினைப் புலப்படுத்துக.

3. கவிஞர் தம்மை இறைவற்குக் காணிக்கையாகப் படைக்கும் பண்பினைக் கூறுக.

4. இறைவர் திருவடி நடமாடும் இடங்கள் யாவை?

5. ஈசன் எங்கே இருக்கின்றனன்? அவனைக் கண்டு கொளற்கு மார்க்கம் யாது?

6. கவிஞரின் கற்பனையிற் காணப்படும் சுதந்தர சுவர்க்கம் எவ்வியல்பு களை யுடையது?

7. தூக்கம், தூங்கும்போது உதடுகளில் மின்னும் சிரிப்பு, அவயவங் களில் மலரும் மெல்லிய இனிய புதுமை ஆகிய இவைகள் குழந்தைகளுக்கு எங்கிருந்து வருகின்றன.

8. தாகூர் இயற்கையை வருணிக்கும் திறமையைப் புலப்படுத்துக.

---

# 5. திபேத்தும் திபேத்தியரும்*

வித்துவான் ம. வி. இராகவன் அவர்கள்

## திபேத்துப் பீடபூமி

திபேத்து நாடு முழுவதும் உயரமான பீடபூமி யாகும். இப்பீடபூமி உலகில் உள்ள ஏனைப் பீடபூமிகள் அனைத்தினும் உயரமானது. இது, கடல் நிலையினின் றும் பதினையாயிரம் அடி உயரத்தில் உள்ளது. கண் ணுக்கு எட்டுமளவும் எல்லையற்ற பெருவெளி கடல் போலப் பரந்து தோன்றுகிறது. மரம் செடி கொடிகள் அற்ற வெறும் மலைகள், எங்கும் நிறைந்திருக்கின்றன. உயரமான மலைகளின்மீது உருகாத பனியடைகள் மூடிக்கொண்டுள்ளன. இங்குப் பயிர் நிலங்களைக் காண்டல் அரிது. இந்நாடு உயரமான பீடபூமியாகை யால், இங்கு மழை பெய்வ தில்லை; மழைக்கு மாருகப் பனிக்கட்டியே பெய்யும். இது பெரும்பாலும் வறட்சி யும் குளிர்ச்சியும் மிக்க நாடு. வேனிற் காலத்தில் முற் பகல் வெப்பமாக இருக்கும்; பிற்பகலில் குளிர்காற்று

* இஃது ஆசிரியரவர்களின் 'கயிலை மால்வரை' என்னும் நூலிலிருந்து கொள்ளப்பட்டது. சென்னை, 'பழனியப்பா பிரதர்ஸ்' வெளியீடு.

வீசும். திபேத்தின் குளிர், தாங்குதற் கரிய கடுமையாக உள்ளது. அஃது உடலுக்குள் ஊடுருவிச் சென்று எலும்பையும் ஒடுக்கி உள்ளத்தையும் நடுக்குறுத்தும். காற்றுப் படும் உறுப்புகள் தீயினுற் சுட்டாற் போன்று தீய்ந்து கருகிவிடும். வேனிற் காலத்தில் ஆங்காங்கு புல் பூண்டுகள் காணப்படும். நாடு முழுவதும் சுற்றி னும் மரங்களைக் காண முடியாது. சில இடங்களில் ஒன்று அல்லது இரண்டு அடி உயரமுள்ள டாமா என் னும் ஒருவகைக் காரைச் செடிகள் குத்துக் குத்தாக வளர்ந்திருக்கும். அவை பசுமையாக இருக்கையி லேயே தீப்பற்றி எரியும் அற்புதத் தன்மை வாய்ந்தவை! கெண்டைக்கால் அளவே உள்ள இக்காரைச் செடிகள் வளர்ந்துள்ள இடத்தைத் திபேத்தியர் காடு என்று கூறு கின்றனர். மரத்தையே கண்டறியாத அவர்கட்கு அக் குறுஞ் செடிகளின் செறிவே காடாகக் காட்சியளிக் கிறது!

## பிராணிகள்

திபேத்தில் செம்மறியாடுகளும், வெள்ளாடுகளும் மிகுதியாக வுள்ளன. இங்கு யாக் என்னும் ஒருவகைச் சடை மாடுகள் வளர்க்கப்படுகின்றன. அவை கவரி என்றும், சமரி என்றும் வழங்கப்பெறும். அவை திபேத்தியருக்கு வாகனமாகவும் பொதி மாடுகளாகவும் பயன்படுகின்றன. அவற்றின் வாலில் மயிர் அடர்ந் திருக்கும். அவற்றின் வெண்ணிற மயிர் ஆலயங்களில் கடவுள் திருவுருவங்கட்கும், அரண்மனைகளில் அரசர் கட்கும் வீசப்படும் சாமரைகளாக உபயோகப்படுகின்றன; கருநிற மயிரால் மகளிர் கூந்தலோடு சேர்த்து முடித்துக் கொள்ளும் சவரி செய்யப்படுகிறது. திபேத்தியர் அவற் றின் மயிரைக்கொண்டு கூடார அமைப்புக்கு வேண்டும் கம்பளங்களைச் செய்துகொள்ளுகின்றனர். சடை மாட்டின் பாலைத் திபேத்தியர் பானமாகப் பருகுகின்ற னர். அதன் மணமும் சுவையும் நம்மனோர்க்கு ஒவ்வா. சடை மாட்டின் பால் மிக்க தடிப்புள்ளதாகையால், அது

நம் உடலுக்கு ஊறு பயக்கும். திபேத்தியர் அப்பாலைக் கடைந் தெடுத்து வெண்ணெயைத் தோற் பைகளில் இட்டு விற்கின்றனர். அதன் முடை நாற்றம் நம் குடரைப் புரட்டும். திபேத்தியர் உப்பிட்ட தேனீர்ப் பானத்தையும் அவ்வெண்ணெயையும் மூங்கிற் குழாயில் பெய்து கடைந்து பருகுகின்றனர். அவர்கள் அதனை விளக்கெரிக்கவும் பயன் படுத்திக்கொள்ளுகின்றனர். சடைமாடுகளே யன்றிக் கழுதை கோவேறு கழுதை முதலியனவும் திபேத்தியரால் வளர்க்கப்படுகின்றன. இங்கு ஜப்பு என்னும் ஒருவகை மாடுகளும் உள்ளன. அவை சவரிக் காளைக்கும் இந்தியப் பசுவிற்கும் பிறந்த கலப்புச் சாதிப் பிராணிகளாகும். இவை யாவும் திபேத்தியருக்குப் பொதி சுமக்க உதவுகின்றன.

## ஊரும் வீடும்

திபேத்தில் பிராணிகளைத் தவிர வேறு வண்டி போன்ற ஊர்திகள் கிடையா. ஆதலின், அவை செல்லுதற்குரிய நிலையான அகன்ற வழிகள் இல்லை; பிராணிகளும் மக்களும் நடந்து செல்வதால் தேய்ந்து தோன்றும் குறுகிய நடைவழிகளே உள்ளன. திபேத்தில் தக்களக்கோட்டை ஒன்றே பெரிய ஊராகும். வேறு எங்கும் அது போன்ற ஊர்களே கிடையா. ஒரு கூடாரம் அல்லது இரு கூடாரங்கள் உள்ள இடங்கள் கிராமங்கள் எனப்படுகின்றன. திபேத்திய மக்களுள் பெரும்பாலோர் சடை மாட்டின் மயிரால் அமைத்த கூடாரங்களிலேயே வசிக்கின்றனர். சிலர் மலைச் சரிவுகளில் குகைபோன்று குழி வெட்டி, அதனுள் வாழ்கின்றனர். ஒரோவழி அருமையாகக் காணப்படும் ஒரு சில வீடுகளும் கல்லாலும் மண்ணாலுமே கட்டப்பட்டுள்ளன. திபேத்தியர் வீடுகள் அழுக்கும் அசுத்தமும் நிறைந்து காணப்படும். வீடுகளைச் சுற்றிலும் ஆட்டுக் கொம்புகளும் எலும்புகளும் சிதறுண்டு கிடக்கும். அவ்வீடுகளின் அருகில் செல்லவும் நம் உள்ளம் கூசும்,

திபேத்திய மக்கள்

திபேத்தியருள் பெரும்பாலோர், ஆடு மாடு மேய்க்கும் ஆயர் வாழ்க்கையர்; வீடு வாயில் இன்றிக் கூடாரங்களிலும் குகைகளிலும் வசிப்பவர்; நிலையாக ஓரிடத்தில் இருந்து வாழாது, அலைந்து திரிபவர். அவர்களில் வாணிகம் செய்து வாழ்வோரும் சிலர் உள்ளனர். அவர்கள் கம்பளம், உப்பு, வெங்காரம் போன்ற பொருள்களை ஓரிடத்தினின்றும் வேறிடங்கட்குக் கொண்டு சென்று விற்கின்றனர். அவர்கள் தூய்மை இன்றியும் நாகரிகம் அற்ற நிலையிலும் உள்ளனர். பல் துலக்குவதும், நீராடுவதும், ஆடை துவைப்பதும் அவர்கள் அறியாத செயல்களாகும். அவர்கள் உடலினின்றும் ஒருவகைத் தீய நாற்றம் வீசும்;உடலில் வெண்ணெய் ஊறிக் கிடக்கும். திபேத்தியர் உடல் வன்மை வாய்ந்தவர்கள்; அழகுடையவர்கள் அல்லர். வெறுக்கத் தக்க விகாரத் தோற்றம் உடையவர்கள். குளிர்காற்றினால் அவர்கள் முகமும் கையும் கரிந்து கறுத்திருக்கும். அவர்கள் குளிர்காற்றின் கொடுமையினின்றும் காத்துக் கொள்ளுதற்பொருட்டு உடல் முழுதும் சடைமாட்டின் வெண்ணெயைப் பூசிக்கொள்ளுவர்; தாளளவு நீண்ட கம்பள உடைகளையும், காலுறைகளையும் அணிவர். குளிர்காலத்தில் அவர்கள் ஆட்டுத் தோலினாலான உடையை உடுப்பவர். திபேத்தில் ஆடவர் முகத்திலும் மயிர் வளர்வ தில்லை. ஆடவரும் பெண்டிரும் ஒத்த உடையே உடுக்கின்றனர். இருபாலரும் தலைமயிரைப் பின்னிக்கொள்ளுகின்றனர். இங்கு இருபாலர்க்கும் வேற்றுமை காண்பது அரிது.

திபேத்திய ஆடவர்கள் இடக்காதில் பெரிய வளையங்களை அணிகின்றனர். மகளிர் தலைமயிரைப் பல சடைகளாகப் பின்னி, நுனியில் சோழிகளையும் மணிகளையும் கோத்த கோவைகளைத் தொங்கவிட்டுக் கொள்ளுகின்றனர். அவர்கள் அணியும் ஆபரணங்கள் பெரும்பாலும் வெள்ளியும் பவளமும் கலந்தவை. கஸ்தூரி மான்களின் கொம்புகளையும் அவர்கள் கழுத்

தணியாக அணிவர். அவர்கள் முத்தும் பவளமும் கோக்கப்பெற்ற தலைப்பாகைகளை அணிவதும் உண்டு. பேய் பிசாசுகள் தீண்டாதிருத்தற் பொருட்டு மந்திரம் பொறித்த கவசங்களையும் செப மாலைகளையும் கழுத்தில் அணிந்து கொள்ளுகின்றனர். அந்நாட்டு மகளிர் முகத்தில் பனிப் புண்ணை மறைக்கக் கருப்பட்டி பூசிக் கொள்ளுவர். இது பார்ப்பதற்கு மிகவும் அருவருப்பா யிருக்கும்.

ஆடவரும் பெண்டிரும் தக்களியால் நூல் நூற்பர். எலும்பினுற் செய்த ஊசி கொண்டு கையுறை காலுறைகள் பின்னுவர். பெண்டிர் சாணம் சேர்க்கும் கூடை ஒன்றை முதுகில் கட்டிக்கொண்டிருப்பர். திபேத்தில் விறகு கிடையாதாகலின் ஆடு, குதிரை, சடைமாடு ஆகிய பிராணிகளின் உலர்ந்த சாணத்தைக்கொண்டே அடுப்பு எரிக்க வேண்டும். திபேத்தியர் தங்கள் ஆடு மாடுகட்கு எங்கெங்கு புல் கிடைக்குமோ, அங்கெல்லாம் சென்று கூடாரம் அமைத்துக்கொண்டு வாழ்கின்றனர். அவர்கள் புகையிலை, கத்திகள், எலும்புக் கரண்டிகள், உணவுகள் இவற்றைச் சட்டைப் பையில் உடன்கொண்டு செல்லுகின்றனர். அவர்கள் வளர்க்கும் ஆயிரக் கணக்கான ஆடு மாடுகள், கல்வளைகளில் அரிதாகக் காணப்படும் அற்பப் புல் பூண்டுகளை மேய்ந்து உயிர் வாழ்வது வியக்கத் தக்கதாகும்.

திபேத்தியர் புலால் உண்பவர்கள். வறுத்த கோதுமை மாவு, பச்சை இறைச்சி இவையே திபேத்தியரின் சிறந்த உணவுகள். சடை மாட்டின் பாலையும் வெண்ணெயையும் அவர்கள் விருப்பி உட்கொள்ளுகின்றனர். பிராணிகளின் உலர்ந்த சாணத்தைக் கொண்டு துருத்தியின் உதவியால் தீ மூட்டித் தேயிலைப் பானம் செய்து பருகுகின்றனர். திபேத்தியர் ஒருவகை மது பானமும் செய்கின்றனர். அவர்கள் எங்குச் செல்லினும் அப்பானம் நிரம்பிய மரப் புட்டிலை உடன் கொண்டு செல்வர்; நண்பர்களைக் கண்டு அளவளாவுகையில்

அதனை மரக்கிண்ணங்களிற் பெய்து வைத்துக்கொண்டு பேச்சுக்கு இடையிடையே பருகி மகிழ்வர்.

திபேத்தியர் வழங்கும் மொழி, திபேத்து—பர்மாத் தொகுதியைச் சேர்ந்தது. இது, கி.பி. ஏழாம் நூற்றாண்டில் தோம்மிசம்போதனால் தோற்றுவிக்கப்பட்டது என்பர். பௌத்தத் துறவிகளாகிய லாமாக்கள் இதனைப் போற்றி வளர்த்துவருகின்றனர். எனினும், திபேத்தியருள் கல்வி கற்றவர்கள் மிகவும் அரியராவர்.

திபேத்தியர்கள் அனைவரும் புத்தமதத்தைச் சார்ந்தவர்கள். அவர்களுள் துறவு பூண்டவர்கள் லாமாக்கள் எனப்படுவர். ஒவ்வொரு குடும்பத்திலும் ஒருவர் இருவர் லாமாவாக விடப்படுவர். மகளிர் துறவு பூண்டு லாமாக்களாவதும் உண்டு. லாமாக்கள் கோம்பா என்னும் மடங்களில் தங்கி வசிப்பர். அவர்கள் மடங்களில் புத்தர் பெருமானின் திருவுருவச் சிலைகளை வைத்து வழிபடுகின்றனர்.

## வினாக்கள்

1. திபேத்துப் பீடபூமியின் இயற்கை யமைப்பு, தட்ப வெப்ப நிலை ஆகியவற்றைப்பற்றி எழுதுக.

2. 'யாக்' என்பது என்ன? அது திபேத்தியருக்கு எவ்வகையிலெல்லாம் பயன் தருகிறது என்பதை எழுதுக.

3. திபேத்தியரின் வீடும் அதன் சுற்றுப்புறமும் எத்தகையன?

4. திபேத்து மக்களின் தொழில் யாது?

5. அவர்களுடைய தோற்றம் பழக்க வழக்கம் எத்தகையன?

6. அவர்கள் தங்களை எவ்வாறு அலங்கரித்துக் கொள்ளுகின்றனர்?

7. திபேத்தியர் உட்கொள்ளும் உணவு வகையினைப்பற்றி யுரைக்க.

8. டாமா, லாமா, ஜப்பு: குறிப்பு வரைக.

---

# 6. பெர்னார்ட் ஷாவின் நாடகப் புலமை*

டாக்டர் மு. வரதராசனார் அவர்கள்

ஷாவின் மூளை எதையும் நாடகக் காட்சியாகவே எண்ணி எண்ணிப் பழகிய மூளை. ஆகையால் எதையாவது நன்றாக விளக்க வேண்டும் என்று கருதினால், உடனே அதைச் சிறிய ஓரங்க நாடகமாக அமைத்துத் தெளிவாகக் காட்டுவது அவர் வழக்கம். 'நாடக அமைப்பில் எதையும் விளக்குவது எனக்கு எளிதாக இருக்கிறது; மிக நல்ல முறையாகவும் இருக்கிறது' என்று அவர் கூறி யுள்ளார்.

நாடகம் எழுதி முடித்த பின், அதில் கை வைத்துத் திருத்தவோ மாற்றவோ ஷா யாருக்கும் இடம் கொடுப்பதில்லை. ஆஸ்திரியாவில் ஒரு மொழிபெயர்ப்பாளருக்கு எழுதிய கடிதத்தில், 'என் நாடகங்களில் ஒரு வரியை விட்டு விடவோ ஒரு காற் புள்ளியை மாற்றவோ கூடாது. எனக்குத் தெரியும்; நாடக உலகில் வேலையாள் முதல் பொறுப்பாளர் வரையில் ஒவ்வொருவரும், எழுதிய ஆசிரியரைவிட, தங்களுக்கு மிகுதியாகத் தெரியும்' என்று எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். இப்படி மாற்றினால் நாடகம் பலராலும் விரும்பப்படும் என்றும், வெற்றி தரும் என்றும் அவர்கள் எண்ணுகிறார்கள். அவர்களுக்குச் சொல்லுங்கள். 'நான் தலை கொழுத்தவன், செருக்கு உடையவன், பிடிவாதக்காரன், அறிவாற்றலில் மேம்பட்டவன், காரணங்களுக்குச் செவி சாய்க்காதவன், என் நூல்களைப் பொறுத்த வரையில் என் வழியில் செல்லத் துணிவு கொண்டவன், என்றெல்லாம் அவர்களுக்குத் தெரிவியுங்கள்' என்று எழுதினார். இப்படி உறுதியானவர் போல் தோன்றினாலும், யாராவது

---

* இஃது ஆசிரியரவர்களின் 'அறிஞர் பெர்னார்ட்ஷா' என்ற நூலிலிருந்து கொள்ளப்பட்டது.

ஒரு திருத்தம் அல்லது மாற்றம் செய்வது நல்லது என்று தெரிவித்தால், அது நல்லது என்று அவருக்கும் தோன்றினால், உடனே தயங்காமல் திருத்தியும் மாற்றியும் அமைத்து விடுவார். சொன்ன அளவிற்கு மேலும் திருத்தங்கள் செய்துவிடுவார். ஆனால் அந்த மாறுதல்களை நூலாசிரியராகிய தாமே செய்ய வேண்டும் என்பதில் மட்டும் அவர் மிகமிக உறுதியானவர்.

ஷா எத்தனையோ குழுக்களில் உறுப்பினராக இருந்து உழைத்துவந்தார். இடையிடையே நாடகங்களை எழுதிவந்தார். ஒரு நாடகத்தை எழுதி முடித்தபின் உடனே அதை வெளியிடுவ தில்லை. அதை இயன்ற வரை நல்ல முறையில் அமைக்க முயன்று, நாடகம் காண வருவோர் எளிதில் உணர்ந்துகொள்ளத் தக்க வகையில் மேலும் எளிமைப்படுத்திய பிறகே அதைத் தம் கைவிட்டு வெளியேறச் செய்வார். 'மாதக் கணக்காக இவ்வளவு அரும்பாடுபட்டு நான் எழுதி முடித்த நாடகத்திற்குக் கைம்மாருக நான் மக்களிடம் பெறுவது என்ன? அவர்கள் மூன்று மணி நேரம் என் நாடகத்தைக் கண்டு மகிழ்ந்து நன்கு சிரித்து நாடக மண்டபத்தை விட்டு வெளியே சென்றதும், "அது ஒரு நாடகம் ஆகுமா" என்று ஒதுக்கிப் பேசிச் செல்வதே ஆகும்' என்று ஷா குறிப்பிட்டுள்ளார். ஆழ்ந்த அமைதியான உணர்வில் நாடகம் முடியுமாறு ஷா விடுவதில்லை. அதில் அவருக்கு விருப்பம் இல்லை. ஆழ்ந்த அமைதியான உணர்வு வரும் இடங்கள் என்று தெரிந்தால், உடனே அங்கே வேடிக்கையை நுழைத்து மாற்றிவிடுவதே அவர் வழக்கம். 'உண்மையான அறிவின் வேலை எல்லாம் நகைச் சுவையுடன் கூடியதே' என்பது அவர் கருத்து.

துன்பியல் நாடகங்களைச் சிறப்புற எழுதி ஷேக்ஸ்பியர் புகழ் பெற்றார். ஷா இன்பியல் நாடகங்களையே எழுதினர், 'கொடுமை இல்லாமலே தீமையை அழிப்பதற்கு நகைச் சுவையால்தான் முடியும்; இழி நடை இல்லாமல் நல்ல இலக்கணத்தை உறுதிப்படுத்தவும்

அதனுல்தான் முடியும்' என்பது ஷாவின் கொள்கை. ஆகையால் அவர் அத்தகைய நாடகங்கள் பல எழுதினர்.

நாடகங்கள் எழுதிப் பணம் திரட்டும் நிலையை ஷா பெற்றது இங்கிலாந்தில் அன்று, அமெரிக்காவில் தான். அமெரிக்கர்கள் அவருடைய பல நாடகங்களை யும் சலிப்பின்றிக் கண்டு போற்றத் தலைப்பட்ட பிறகே அவருடைய நாடகங்கள் பொருள் ஈட்டிக் கொடுத்தன. அவ்வாறு செல்வம் சேர்க்க முடிந்ததை உணர்ந்தபின், நாடகங்களைப்பற்றி மதிப்புரை எழுதிவந்த தொழிலை வெறுத்துக் கைவிட்டார். புது நாடகங்களுக்கு மதிப் புரை எழுதுவது எளிது என்பதும் ஷாவுக்கு நன்கு தெரியும். எனினும், கலைத்துறையில் ஆக்க வேலையில் ஈடுபட்ட அவருடைய மனம், புதிய நாடகங்களைப் படைத்து நல்கவே முனைந்தது.

நாடகமேடையில் மரணக் காட்சியைக் காட்டினுல் அல்லாமல், சிறந்த நாடக ஆசிரியராக ஷா விளங்க முடியாது என்று வில்லியம் ஆர்ச்சேர் என்பவர் குறை கூறினர். அந்தக் குறையைப் போக்குவதற்காக ஷா செய்த முயற்சியே 'டாக்டரின் திண்டாட்டம்' என்ற நாடகம். நாடகம் முழுவதும் டாக்டர்களும் மரணங் களும் காணலாம்; ஆயினும் அதுவும் துன்பியல் நாடகமாக அமையாமல் வேடிக்கை விருந்தளிப்ப தாகவே நின்றது.

நாடகங்களை வெற்றி பெற நடத்துவதில் ஷா பெரு முயற்சி எடுத்துவந்தார். அதற்காகவே நாடகங் களை எழுதுவதற்கு ஆன நேரத்தைவிட மிகுதியான காலத்தை ஒத்திகைகளை நடத்துவதிலும் பார்ப்பதிலும் செலவிட்டார். சில வேளைகளில் வரி வரியாகப் படித்துச் சொல்லி நடிகர்களை ஒப்புவிக்கச் செய்தார். மற்றெரு வழியும் மேற்கொண்டார். ஒரு நாடகத்தைத் தொடர்ந்து பல வாரங்கள் நடத்தி இறுதியில் கூட்டம் குறைந்து வருவாயும் இழந்து புகழும் இழப்பது அவருக்குப்

பிடிக்கவில்லை. சில வாரங்கள் மட்டுமே நடத்தி நிறைந்த கூட்டத்தைக் காண்பதிலும், இடம் இல்லை என்று திரும்பிச் செல்வோரைக் காண்பதிலும், ஷாவுக்கு மகிழ்ச்சி உண்டு. கூட்டம் நிறைய வேண்டும் என்பதற் காகவோ, விளம்பரம் செய்ய வேண்டும் என்பதற் காகவோ, நல்லெண்ணம் பெற வேண்டும் என்பதற் காகவோ சிலர்க்கு அன்பழைப்பு அனுப்பிப் பண மின்றி நாடகம் பார்க்கச் செய்யும் முறையை ஷா கடிந்தார். ஒரு முறை தம் நாடகம் ஒன்றிற்கு ஷா சென்றிருந்தபோது, மண்டபம் நிறைந்திருந்ததைக் கண்டார்; ஆனால் கணக்கு வந்தபோது மூன்றில் ஒரு பங்கிற்கே வருவாய்க் கணக்கு வந்ததை அறிந்தார். உடனே பொறுப்பாளருக்குப் பின்வருமாறு கடிதம் எழுதினார்:—'முழுக் கட்டணமும் செலுத்திய பிறகே என் நாடகத்தை ஒருவர் பார்க்க உள்ளே வர வேண்டும். இது தெளிவாக விளங்க வேண்டும். இப்படிச் செய்வ தால், மூன்றில் ஒரு பங்கு மக்களே நாடக மண்டபத் தில் இருந்து நாடகம் நடந்தாலும் கவலை இல்லை. பணம் கொடுத்து நாடகம் காண வரும் பெருமக்கள் ஒவ்வொருவரும் மூன்று இடங்களைப் பயன்படுத்தலாம் என்றும், அவற்றில் தங்கள் குடை, கோட், தடி, கால் முதலியவற்றை வைத்துக் கொள்ளலாம் என்றும் விளம் பரப் படுத்தலாம்' என்று எழுதினார்.

பலரையும் மகிழ்விக்கக் கூடிய வகையில் ஷாவால் எழுத முடிய வில்லை. அவருடைய மதிப்புரைகள் இசை, ஓவியம், இலக்கியம், நாடகம் எதைப்பற்றி எழுதப்படினும் பிறரது மனத்தைத் தாக்குவனவாக இருந்தன. 'தமக்குத் தொல்லைத் தாராத எதைப்பற்றியும் மக்கள் கவலைப்படமாட்டார்கள். ஆகவே, ஏதாவது ஒன்றை உணர்த்த வேண்டுமானால், அவர்களின் மனத் தைத் தாக்கும் வகையில் உணர்த்த வேண்டும்; இல்லை யானால் உணர்த்தாமல் இருப்பதே நல்லது' என்பது ஷாவின் கொள்கை. ஆகையால் அவர் எழுதிய

மதிப்புரைகளும் கருத்துரைகளும் விறுவிறுப்பாகவும் காரமாகவுமே இருந்தன. 'இந்த வாரத்தில் கலை நல்ல சவுக்கடி பட்டு வருந்தியது. இன்ன இடத்தில் நடைபெற்ற விழாவின் பொருட்காட்சியே அதற்குக் காரணம் என்று எழுதுவார். 'இந்த நாடகத்தைப் பார்த்து வெறுப்பில்லாமல் திரும்ப வேண்டுமானல், நாடகம் தொடங்கி நெடுநேரம் கழித்துச் செல்ல வேண்டும்; முடிவதற்கு மிக முன்னமே திரும்பி வந்துவிட வேண்டும்' என்று எழுதுவார். நடுநிலைமை, நீதி, நாகரிகம் என்ற பெயர்களைச் சொல்லிக்கொண்டு, உணர்ந்ததற்கு மாருக எழுதுவது கலைக்குச் செய்யும் குற்றமாகும் என்பது அவருடைய கருத்து. 'சில தியாகங்களைக் கட்டாயம் செய்ய வேண்டும் என்று மக்களை வற்புறுத்தக் கூடாது. அவற்றுள் ஒன்று இன்னொருடைய இசையரங்கிற்குச் சென்று கேட்க வேண்டும் என்பது' என்று ஒருமுறை ஓர் இசையரங்கைத் தாக்கி எழுதினர். சில வேளைகளில் மதிப்புரைகளில் ஷா தம்மைப்பற்றியும் சேர்த்து எழுதி நகைச் சுவை ஊட்டியது உண்டு. ஒரு முறை 'இன்புளுயென்சா' காய்ச்சலால் ஷா வருந்தியபோது, 'அண்மையில் இசை யுலகத்தில் நிகழ்ந்த முக்கிய நிகழ்ச்சி எது என்ருல், "இன்புளுயென்சா" காய்ச்சல் என்னைத் தாக்கியது அல்லது நான் அந்தக் காய்ச்சலைப் பற்றிக்கொண்டதாகும்' என்று எழுதினர்.

ஷாவின் நாடகப் புலமையை நெடுங்காலம் வரையில் ஆராய்ச்சியாளரும் உணர வில்லை. நடிகரும் உணரவில்லை. அக்காலத்திலும் அவர் சோர்ந்துவிடாமல் நாடகங்கள் எழுதிவந்தார். 'நான் ஏன் நாடகங்கள் எழுதுகிறேன் என்ருல், ஒரு காரணம் நான் அவற்றை எழுத விரும்புகிறேன்; மற்ருெரு காரணம் ஆட்களையும் காட்சிகளையும் நாடகங்களில் படைக்க முடிவதால், என் வாழ்க்கையின் நிலைகளை மறந்துவிட முடிகிறது. கதை சொல்லும் திறன் எனக்கு இயல்பாக இருக்கிறது. எந்த நிகழ்ச்சியும் முதலில் எனக்குக் காட்சிகளாகவும் நடிப்

பாகவும் உரையாடலாகவுமே வந்து தோன்றுகிறது' என்று அவர் தெரிவித்தார்.

அவர் முதலில் எழுதிய நாடகங்களை நாடகங்களே அல்ல என்று பலரும் மறுத்துக் குறை கூறினர்கள்; அவைகள் எல்லாம் அரசியல் துண்டு வெளியீடுகள் என்று பழித்தார்கள். ஷா அதற்குத் தளரவில்லை. தாம் எழுதுகின்றவை ஆராய்ச்சிகள் என்றும், உரையாடல்கள் என்றும் தாமே சொல்லிக்கொண்டார். நாடகங்களின் முடிவில் கொலைகளும் கொடுமைகளும் இருந்தால்தான் சிறப்பு என்ருல், அத்தகைய நாடகங்களை எழுதுவது தம் தொழில் அன்று என்று அறிவித்தார். 1885இல் எழுதிய சில நாடகங்களை ஷா மூலையில் ஒதுக்கி வைத்து மறந்து விட்டிருந்தார். ஏழு ஆண்டுகள் கழித்து 1892இல் அவைகள் நாடக மேடைக்கு வர முடிந்தது. அப்போதும் எதிர்ப்புகளும் பழிப்புரைகளுமே மிகுந்திருந்தன. பல ஆண்டுகள் கழிந்த பிறகே நாடக உலகில் அவர் செய்த புதுமைத் தொண்டு பாராட்டப்பட்டது. ஆங்கில நாடக மேடையில் பெரிய பெரிய சமூகச் சிக்கல்களை முதல் முதலாகக் காட்டி விளக்கி வைத்த பெருமை ஷாவையே சாரும்.

பல நாடகங்கள் எழுதி அரங்கேற்றிய ஷா தாமே நடித்து மிருக்கிருர். ஆனல் ஒரே ஒரு முறை தான் கார்ல் மார்க்ஸின் கடைசி மகள் ஒரு நாடகத்தில் நடித்தபோது அவருடைய வேண்டுகோளுக்கு இணங்கி ஷாவும் அதில் நடித்தார். அதற்குப் பிறகு அவர் பிறரை நடிக்கச் செய்ததன் வாயிலாகவே மிகுந்த அனுபவம் பெற்ருர்.

ஒரு நாடகத்தை எழுதி முடித்த பிறகு, அதை நெருங்கிய நண்பர்களிடையே படித்துக் காட்டுவது ஷாவின் வழக்கம். அதற்கு அடுத்தபடி, நாடகம் நடத்தும் பொறுப்பாளருக்கும் மற்றவர்களுக்கும் படித்துக் காட்டுவார். அவ்வாறு அவர் படித்துக் காட்டுவதைக் கேட்கவும் காணவும் இன்பமாக இருக்குமாம்.

ஒவ்வொரு பாத்திரமாகவும் ஷாவே மாறி மாறி நடித்துப் பேசுவதுபோல் இருக்குமாம். ஷாவின் குரல் வேறுபாடும் பேசும் முறையும் நாடகத்தின் கருத்தையும் அமைப்பையும் நன்ருக எடுத்துக் காட்டுமாம். நடிகர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு, ஷாவே நாள்தோறும் உடனிருந்து ஒத்திகை நடத்திப் பல நாடகங்களுக்குத் துணை செய்திருக்கிருர். எல்லாம் முடிந்த பிறகு, ஒரு குறிப்புப் புத்தகத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, எதிரே போய் உட்கார்ந்திருப்பார். நடிகர்களின்நடிப்பை நன்ருகக் கவனித்து, அவர்கள் தவறும் இடங்களை விடாமல் குறித்துக்கொள்வார். இடையே வாய் திறக்காமல் உட்கார்ந்திருந்து, முடிவில் நடிகர்களிடம் சென்று தவறிய இடங்களை எல்லாம் எடுத்துக் காட்டித் திருத்துவார். தக்க முறையில் தாமே நடித்துப் பேசிக்காட்டுவார். எல்லோரிடத்திலும் பொறுமையாகவும் அன்பாகவும் இன்சொல் பேசித் திருத்துவார். நடிக்கும் பெண்களின் உடை முதலியவற்றிலும் தக்க திருத்தங்கள் செய்வார்.

'இங்கிலாந்தில் உள்ள நாடக அரங்குகள் என்ன என்ன பற்றியோ விளக்கும் நாடகங்களுக்கு இடம் தருகின்றன. ஆனுல் மக்களின் வாழ்க்கைக்கு வேண்டிய பொது அறிவு, சமயம், விஞ்ஞானம், அரசியல், ஒழுக்க உணர்வு ஆகியவற்றிற்கு இடம் தருவதில்லை. அதனுல்தான் நான் நாடக அரங்குகளோடு போர் தொடுத்திருக்கின்றேன். அறிக்கைகளும் அறிவுரைகளும் கட்டுரைகளும் எழுதி அவற்ருேடு போர் செய்யவில்லை. நாடகங்கள் எழுதியே அந்தப் போரை நடத்துகின்றேன். இதனுல் லண்டன் நகர மக்கள் நாடகம் காணச் செல்லும்போது மனச்சான்றையும் மூளையையும் உடன்கொண்டு செல்லுமாறு செய்ய முடியும் என்று நம்புகிறேன். இப்போது வழிப்பாட்டுப் [பைபிள்] புத்தகத்தோடு மனச்சான்றையும் மூளையையும் வீட்டிலேயே வைத்து விட்டு நாடகம் காணச் செல்லும் போக்கை ஒழிக்கவே இந்த முயற்சியில் ஈடுபட்டிருக்கிறேன்' என்று 'வாரன் அம்மையாரின் தொழில்'

என்னும் நாடகத்தில் முகவுரையில் எழுதி யுள்ளார். வீட்டின் உள்ளேயே அடங்கி உலகம் அறியாமல் வாழும் பூச்சிகளுக்கு உண்மை வாழ்வு இல்லாவிட்டா லும், கற்பனை யுலகிலாவது அவர்கள் அந்த வாழ்க் கையை உணரட்டும் என்றே நாடகங்களை நடிக்கச் செய்த தோடு நிற்காமல் நூல் வடிவாகவும் வெளியிட்டாராம்.

இந்த நாடகங்களைவிட நீண்ட முகவுரைகள் எழுதி வெளியிடுவது அவருக்கு வழக்கமாகிவிட்டது. வெறுங் கட்டுரைகளை ஒருவரும் படிப்ப தில்லை. ஆகையால் தம் கொள்கைகளை உணர்த்தி அவர்களைத் திருத்த வேறு வழி இல்லாதது கண்டு, நாடகங்களின்வழியாகக் கவர்ச்சி ஊட்டி, பிறகு முகவுரைகளின் வாயிலாகக் கொள்கைகளை உணர்த்தும் முயற்சியில் ஈடுபட்டார்.

தம்முடைய கற்பனைகளில் உள்ளவை மிக மாறு ணவைகளாகவும் பொருந்தாதவைகளாகவும் இருக் கின்றன என்று குறை கூறுவோருக்கு ஷா மறுமொழி கூறியபோது, தாம் கண்மருத்துவர் ஒருவரிடத்தில் சென்றுவந்த நிகழ்ச்சியைக் குறிப்பிட்டு விளக்கினர். அந்தக் கண்மருத்துவர் ஷாவின் கண்களை ஆராய்ந்து பார்த்துவிட்டு அவருடைய கண்ணைப்பற்றித் தமக்கு ஒன்றும் அக்கரையே தோன்ற வில்லை என்று தள்ளி விட்டாராம். காரணம் கேட்டால், கண் அளவான நிலையில் உள்ளது என்று சொன்னராம். அப்படி யானல் தம் கண் மற்றவர்களின் கண்ணைப்போல் இருப்பதாக ஷா பொருள் கொண்டாராம். கண்மருத்து வர் அதை மறுத்து, ‘இல்லை இல்லை, மற்றவர்களின் கண் பெரும்பாலும் இப்படி இருப்ப தில்லை. உங்கள் கண் தனி வகை. மிக நல்ல கண் பார்வை இருக் கின்றது. அளவான நிலைமை என்ருல் பொருள்களை உள்ளபடியே பார்த்தறியும் ஆற்றல். அது நூற்றுக்குப் பத்துப் பேருக்குத்தான் உண்டு’ என்ருராம். இதைக் குறிப்பிட்டுவிட்டு, ஷா எழுதியபோது, ‘அப்போது தான் நான் கற்பனைகளை எழுதி வெற்றி பெருததற்குக்

காரணம் உணர்ந்தேன். என் உடம்பில் உள்ள கண்ணைப்போலவே, என் மனக் கண்ணும் (கற்பனைக் கண்ணும்) அளவான நிலையில் உள்ளது. பெரும்பாலானவர்களுக்கு மனக் கண்ணும் கெட்டிருக்கின்றது. அதனால்தான் நான் உலகத்தைப் பார்த்தறியும் முறை அவர்களுக்குப் பிடிக்கவில்லை' என்று [1898இல்] தம்முயற்சியைப்பற்றி எழுதினார்.

## வினாக்கள்

1. எதையேனும் விளக்குதற்கு பெர்னார்டுஷா கையாண்ட முறை யாது? அம்முறையினை அவர் கொண்டதேன்?

2. தாம் எழுதிய நாடகத்தில் திருத்தம் செய்வதைப்பற்றி ஷா கொண்டிருந்த கருத்து யாதென விளக்குக

3. ஷா நாடகம் எழுதும் முறையினைப் புலப்படுத்துக.

4. இன்பியல் நாடகத்தைப்பற்றி அவர் கொண்டிருந்த கருத்து யாது?

5. 'டாக்டரின் திண்டாட்டம்' என்ற நாடகம் எழுந்த தெவ்வாறு? முடிந்த தெவ்வாறு?

6. நாடகங்களை வெற்றி பெற நடத்துவதற்காக ஷா செய்த முயற்சிகள் யாவை?

7. நாடகம் பார்ப்பதற்கு அன்பழைப்பு வழங்குவதைப்பற்றி அவர் கருத்து என்ன?

8. பிறர் மனத்தைத் தாக்கும் நாடகங்களை ஷா எழுதியமைக்குக் காரணம் என்ன?

9. ஷாவின் மதிப்புரைகளின் தன்மையைச் சான்றுகளுடன் காட்டுக.

10. ஒத்திகையின்போது ஷா தரும் உதவி யாது?

11. 'நாடக அரங்குகளுடன் நான் போர் தொடுத்திருக்கிறேன்' என்று ஷா சொல்லக் காரணம் என்ன?

12. தாம் உலகத்தைப் பார்த்து அறியும் முறை பிறருக்குப் பிடியாமை பற்றி ஷா வெளியிட்ட விளக்கம் என்ன?

# 7. நீரின்றி அமையாது உலகு*

திரு. வேலன் அவர்கள், பி.ஏ.

நீர் என்பது யாது? இதற்கு விடை சொல்வது மிகவும் எளிது. ஆயினும் நீரின் தன்மைகளைப்பற்றி எல்லோருக்கும் நன்ருய்த் தெரியாது. மக்களுக்கு உணவை உண்டாக்குவதும் நீர்; உணவாக இருப்பதும் நீர். நீர்த்துளி இல்லையேல் ஒரு பசும்புல்லையுங் காண்பது அரிதாய்விடும்.

'விசும்பின் துளிவீழின் அல்லால்மற் ருங்கே
பசும்புல் தலைகாண் பரிது'

என்பது குறள். திருக்குறளில் கடவுள் வாழ்த்துக்கு அடுத்தபடியாக வான் சிறப்பைப் பாடியிருப்பதிலிருந்து மழையின் பெருமை நன்கு விளங்கும்.

மனித உடல் முக்கால் பங்கு நீரினுல் ஆகியது என்பது பலருக்குத் தெரியாது. செடிகொடிகளில் இதைக் காட்டிலும் மிகுதியான நீர் நிரப்பி யிருக்கிறது. உலகில் முதன் முதலில் உயிர்கள் நீரிலேதான் தோன்றி யிருக்க வேண்டுமென ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். ஆகவே உயிருக்கு அடிப்படையானது நீர் என்பது பெறப்படும். பாலைவனங்களிலுள்ள ஒட்டகப்போன்ற விலங்குகளும், கள்ளி முதலிய செடிகொடிகளுங்கூட நீர் கிடைத்தபோது நிறையச் சேர்த்து வைத்துக் கொண்டு, நீரில்லாத காலங்களில் அதனைப் பயன் படுத்திக்கொள்ளுகின்றன. எவ்வுயிரும் நீரின்றி வாழ முடியாது. வேண்டிய அளவு நீர் கிடைக்காவிடில் மக்களும் விலங்குகளும் செடி கொடிகளும் வற்றிக் காய்ந்துபோய் உயிரிழக்க நேரிடும். இதனுற்ருன் புலவர்கள் 'மழை அமிழ்தம் போன்றது' எனச் சிறப் பித்துக் கூறியுள்ளார்கள்.

---

* இக்கட்டுரை திருநெல்வேலித் தென் இந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தின் வெளியீடாகிய 'இயற்கையும் செயற்கையும்' என்ற நூலி லிருந்து கொள்ளப்பட்டது.

நீரின் தன்மைகளைப்பற்றிச் சிறிது ஆராய்வோம். பூமியில் நிலம் ஒரு பங்கு; ஆனால், நீர் மூன்று பங்கு இருக்கின்றது. உலகப் படத்தைப் பார்த்தால் பழுப்பு நிறங் குறைவாயும், நீல நிறம் மிகுதியாயும் இருக்கும். உலகின் பெரும்பகுதி கடலாய்த் தோன்றுகிறது. கடல் நீர் ஞாயிற்றின் வெப்பத்தினால் ஆவியாகி மேகங்களாய் மாறுகின்றது. நீராவியின்மேல் குளிர்ந்த காற்றுப் பட்டவுடன் மழையாகப் பொழிகின்றது. உலகிற் பெய்யும் மழையில் முக்காற்பங்கு கடலிலேயே பெய்கின்றது. கடலிலிருந்து ஆவியாகக் கிளம்பிய நீர் மீண்டும் கடலுக்கே வந்து சேர்கிறது. சில மேகங்கள் காற்றினால் தள்ளப்பட்டுக் குளிர் மிகுந்த இடங்களுக்குப் போனால், அங்குப் பனி மழையாகப் பெய்யும். பனிக் கட்டிகள் மலைபோன்று குவிந்து மெள்ள நகர்ந்து சென்று வெப்பமுள்ள இடத்தை அடைந்ததும் உருகிப் பழைய நிலையை அடைகின்றன. நிலத்திற் பெய்யும் மழை, பயிர்களைச் செழிக்கச் செய்து வாய்க்கால் வழியோடி ஆற்றைச் சேர்ந்து, முடிவில் கடலிலேயே விழுகின்றது. நீர் கடலினின்றும் ஓயாது வெளிக் கிளம்பி உலக மெல்லாம் சுற்றித் திரிந்து முடிவிற் கடலினையே நாடிச் செல்லும். கைம்மாறு கருதாமல் நமக்கு மழையை வழங்கும் மேகங்களுக்கு நாம் என்றுங் கடமைப்பட்டிருக்கிறோம்.

'கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்னாற்றுங் கொல்லோ உலகு!'

எனத் திருக்குறளில் வருதல் காண்க.

மழையின் வரலாற்றிலிருந்து நீர் ஆவியாகவும் கட்டியாகவும் மாறுந் தன்மையுடையது எனத் தெரிந்து கொண்டோம். இம்மாறுதல் எதனால் ஏற்படுகிறது? வெப்பத்தின் ஏற்றத் தாழ்வினாலும் காற்றின் அழுத்தத்தினாலும் நீரின் தன்மை மாறுகின்றது. தண்ணீரை ஓர் ஏனத்திற் காய்ச்சினால் அது கொதித்து ஆவியாக

மாறுகின்றது. அடிப்புறத்திலுள்ள நீர் முதலில் ஆவியாகிக் குமிழிகளாய்த் தோன்றிக் காற்றில் மறைகின்றது. இங்ஙனமே சிறிது சிறிதாய்த் தண்ணீர் முழுவதும் ஆவியாகும். நீரை நன்ருய்க் குளிரச் செய்தால் அது பனிக்கட்டியாக மாறும்.

நீர் எப்பொருள்களால் ஆகியது என்னுங் கேள்வி மீண்டும் எழுகின்றது. இரண்டு பங்கு நீர்வளியும்[1] ஒரு பங்கு உயிர்வளியும்[2] சேர்ந்து நீர் ஆகின்றது. மின் ஆற்றலின் உதவியால் இந்த இரண்டு வளிகளேயும் ஒன்றுபடுத்திஞல், வெடியோசையுடன் நீர் தோன்றுகிறது. இச்சோதனையைப் பள்ளிக்கூடங்களில் மாணவர்கள் செய்யும்போது பார்த்தால் மிகவும் வியப்பாக இருக்கும். கண்ணுக்குத் தெரியாத இரண்டு பொருள்கள் ஒன்று சேர்ந்து திடுமென நீர்ப் பொருளாக மாறுவது பெரிய விந்தையாகத் தோன்றும்.

நீர் எப்போதும் மேட்டிலிருந்து பள்ளத்திற்கே பாய்கின்றது. ஏனெனில் பூமி எல்லாப் பொருள்களேயும் தன் நடுவிற்கே இழுத்துக்கொள்கிறது. பள்ளமாய் உள்ள இடங்கள் பூமியின் மையத்திற்கு அருகில் உள்ளன. இதஞல் எளிதில் நகரக் கூடிய பொருள்களெல்லாம் மேட்டிலிருந்து பள்ளத்திற்குச் சரிந்து வருகின்றன. கெட்டிப் பொருள்களேவிட நீர்ப் பொருள்கள் தடையின்றி ஓடிவரும். கொஞ்சஞ் சாய்வு இருந்தாலும் அந்தப் பக்கமே நீர்ப் பொருள்கள் பாய்ந்து செல்கின்றன.

உலகில் மக்கள் தோன்றுவதற்கு முன்னமேயே நீர் தன் வேலேயைத் தொடங்கிவிட்டது. நிலங்களேச் செம்மைப்படுத்தியதும், செழிப்பிக்கச் செய்ததும் நீர். ஊர் இருந்த இடங்களில் கடல் உண்டாக்கியதும், கடல் இருந்த இடங்களில் ஊர் உண்டாக்கியதும் நீர். குமரி முனேக்குத் தெற்கே இருந்த தமிழ் நாட்டினே அழித்த

[1] Hydrogen [2] Oxygen

தும், இப்போதுள்ள தமிழ் நாட்டினை வாழ்விப்பதும் அதுவே யாகும்.

'கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை'

என்பது குறள். நமக்கு நீர் பல வகையிலும் பயன்படுகிறது. நாள்தோறும் உணவு சமைப்பதற்கும், குளிப்பதற்கும், கழுவுவதற்கும், பருகுவதற்கும் நீர் வேண்டும். இவையு மன்றிப் புகைவண்டி கப்பல் முதலியவற்றை ஓட்டுவதற்கு நீராவி உதவுகின்றது. நீர்வீழ்ச்சிகள் உருளைகளைச் சுழற்றிப் பொறிகளை இயக்கவும் மின் ஆற்றலை உண்டாக்கவும் பயன்படுகின்றன. கடலின் அலைகளையும் இவ்வேலைக்குப் பயன்படுத்தும் பொருட்டுப் பல ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன.

'நீரின்றி அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வானின்றி அமையாது ஒழுக்கு'

என்னுங் குறள் நீரின் சிறப்பினை நன்கு விளக்குகின்றது.

## வினாக்கள்

1. மழையின் பெருமையினை வள்ளுவர் உலகுக்கு எவ்வாறு காட்டினர்?
2. 'எவ்வுயிரும் நீரின்றி வாழ முடியாது' என்பதனைப் புலப்படுத்துக.
3. கடலிற் பிரிந்த நீர் கடலுக்கே திரும்பு மாற்றினைத் தெரிவிக்க.
4. நீர் எவ்வெப் பொருள்களால் ஆயது என்பதனைத் தெரிவிக்க.
5. நீரானது பள்ளம் நோக்கி ஓடுவதேன்?
6. 'கெடுப்பதூஉம்' என்று தொடங்கும் குறட் பொருளினை விரித்துரைக்க.
7. நீரின் ஆற்றலைப் புலப்படுத்துக.

## பயிற்சி

'தெண்ணீர்ச் செல்வம்' என்பதுபற்றி ஒரு கட்டுரை வரைக.

# 8. பார்க்காத பார்வை*

கி. வா. ஜகந்நாதன் அவர்கள்

'கண்ணிற் சிறந்த உறுப்பில்லை' என்று பழம் புலவர் ஒருவர் சொன்னதற்கு வியாக்கியானமே வேண்டிய தில்லை. உலகம் முழுவதும் கண் உடையவர்களாலே பெருவளம் பெறுகிறது. நமக்கு அருமையான மனிதர்களைக் கண் என்றும், கண்மணி என்றும் பாராட்டிப் பேசுகிறோம். உயிர் மிகவும் அருமையானது. அதற்கு அடுத்தபடியாக அரிய பொருளாக நிற்பது கண்.

அவ்வளவு உயர்வாகக் கருதுவதற்குரிய கண்ணைக் கூட மட்டமாக்கிவிடும் ஒன்று மனிதனிடம் இருக்கிறது. இந்தக் கண்ணை அகக் கண் என்று கூறுவது வழக்கம். புறக் கண்ணாலே மாத்திரம் பார்க்கும் பார்வை விலங்குகளுக்கும் இருக்கிறது. மனிதன் உயர்திணை ஆயிற்றே, அவன் அகக் கண்ணைக் கொண்டு பார்க்கத் தெரிந்தவனாதலால் அவனுக்கு அந்தப் பெருமை வந்தது. முகத்திலே உள்ள கண்கள் உருவம் உள்ள பொருளைத்தான் பார்க்கும். நிறமும் வடிவும் எப்படி உள்ளன என்று தெரிந்துகொள்ளும். அதற்கு மேலே பார்வை செல்லாது. புறவாயிலிலே நின்றுவிடும் பார்வை முகக் கண்ணால் பார்க்கும் பார்வை. புறத்தைக் கடந்து அகத்துள்ளே சென்று பார்க்கும் பார்வை ஒன்று உண்டு; அதையே அகக் கண் என்றும் அறிவு என்றும் சொல்வார்கள்.

'எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.'

'எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் [அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு'

* இக்கட்டுரை, ஆசிரியர் அவர்களின் 'கலைமகள்' வெளியீடாகிய 'வாழும் தமிழ்' என்னும் நூலிலிருந்து கொள்ளப்பட்டது.

என்று திருவள்ளுவர் சொல்லியிருக்கிறார். புலன்களால் உலகில் உள்ள பொருள்களின் தன்மையை உணர்கிறோம். புலனுக்குத் தட்டுப்படும் அந்தத் தன்மையை மாத்திரம் கொண்டு அதன் இயல்பை மெய் யென்று நினைத்துவிடக் கூடாது.

பாம்பு படம் எடுக்கிறது. அந்தப் படம் கண்ணாடியைப்போல் பளபள வென்று அழகாக இருக்கிறது. கண்ணினாலே பார்க்கின்ற பார்வைக்கு அழகாகத் தோன்றுவதனால் அந்தப் படம் நல்ல தென்று சொல்லலாமா? புறக் கண்ணாலே கண்ட அளவிலே நின்றுவிட்டால் அழகான கண்ணாடியைச் சட்டென்று கையிலே எடுப்பதுபோல், அந்தப் பாம்புப் படத்தையும் பற்றத்தான் தோன்றும். குழந்தை அப்படித்தானே செய்யும்? ஆனால் நாம், 'ஐயோ பாம்பு!' என்று அலறுகிறோம். ஏன்? புறக் கண்ணாலே பார்க்கும் பார்வைக்குப் பிறகும் மற்றொரு பார்வை நமக்குப் பயன்படுகிறது. அந்த அழகிய படத்தில் உயிரைக் கொல்லும் விஷமும் இருக்கிறது என்பதை அந்தப் பார்வை சொல்லுகிறது. 'நாகப் பாம்பு அழகிய படம் உடையதாக இருந்தாலும் கொல்லும் விஷத்தையுடைய பிராணி' என்று நம் அகக் கண்ணாகிய அறிவு விளக்குகிறது. ஆகையால் கண்ணாலே கண்ட பொருள் பளபளப்பாகத் தோன்றினாலும், அஃது உயிரைப் போக்குந் தன்மை யுடையது என்ற உண்மையை உணரச் செய்வது அறிவு. 'எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு,' என்ற வள்ளுவர் வாக்குக்கு இப்போது ஒருவாறு பொருள் தெரிந்து விட்டது. கண்ணாலே கண்டதோடு நில்லாமல் கருத்தாலும் காணத் தெரிந்தால் அவன் அறிவாளி என்று சொல்லலாம். இந்த அறிவு மிக மிக நுணுகிச் சென்றால் அவனைச் சிறந்த அறிவாளி என்று சொல்ல வேண்டும். இந்தப் பார்வை புறக்கண்ணால் பாராத பார்வை. இதனால் பார்ப்பது மிகவும் இன்பத்தைத்

தருவ தென்று திருமூலர் சொல்லுகிருர். உண்மையை உணர்ந்தவனுக்கு உண்மை யின்பம் பிறக்கும்.

'முகத்தில் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்!
அகத்தில் கண்கொொண்டு பார்ப்பதே ஆனந்தம்.'

சீதாபிராட்டியைத் தேடிக்கொண்டு அநுமன் இலங்கைக்குப் போஞன். அந்த ஊரெல்லாம் தேடப் புகுந்தான். இரவு நேரத்தில் புகை புகா வாயிலெல்லாம் புகுந்து தேடிஞன். சீதா தேவியைக் கண்டான் இல்லை. இராவணனுடைய அந்தப்புரத்திலே நுழைந்தான். அங்கே ராவணனிடம் காதல் கொண்டு வாடிய பல மடந்தையரைக் கண்டான். பிறகு மயன் மகளும் ராவணன் மனைவியுமாகிய மண்டோதரி உறங்கிக் கொண்டிருந்த மாடத்துக்குச் சென்ருன்.

அங்கே மண்டோதரியைக் கண்டான். அவளுடைய பேரழகையும் அமைதியையும் கண்டபோது அவனுக்குச் சந்தேகம் வந்துவிட்டது. இவள்தான் சீதையோ என்று சற்று நேரம் திகைத்துப் போஞன். மணி விளக்கங்க ளெல்லாம் மழுங்கும்படியாகத் தன் மேனி ஒளி தழைப்புற்று விளங்கத் துயில் புரிகின்ற மண்டோதரியை அநுமன் கண்டு இவள் சானகியோ என்று ஐயுற்று உயிரிலே அக்கினி பற்றிஞற்போல் வருத்தத்தை அடைந்தான் என்று கம்பர் சொல்கிருர்.

இன்ன தன்மையின் எரிமணி விளக்கங்கள்
எழில்கெடப் பொலிகின்ற
தன்ன தின்னெளி தழைப்புறத் துயில்வுறு
தையலைத் தகைவில்லான்
அன்னளாகிய சானகி இவளென
அயிர்த்தகத் தெழுவெந்தீத்
துன்னும் ஆருயிர் உடலொடு சுடுவதோர்
துயருழந் திவைசொன்ஞன்.

அநுமன் அதற்கு முன்னலே சீதையைப் பார்த்ததில்லை. இராமனிடம் விடை பெற்றுக்கொண்டபோது

அவன் கூறிய அங்க அடையாளங்களைக் கேட்டுக் கொண்டுவந்தான். அத்தனை மகளிர் கூட்டத்திலும் மண்டோதரி அழகியாகவும் உயர்வுடையவளாகவும் தோன்றினாள். கண்ணினால் பார்த்த அளவிலே அந்தப் பார்வை சீதையோ என்ற ஐயத்தை உண்டாக்கிவிட்டது. அதனால் அளவற்ற துக்கத்தையும் அடைந்தான். 'நான் இந்த உலகத்திலே பிறந்த பிறவி வீணாய்விட்டது!' என்று மனமுடைந்து அழுங்கினான். 'இவள் சீதையாக இருந்தால் ராமன் புகழ் தொலைந்தது; அவன் பெருமை தொலைந்தது; நானும் தொலைந்தேன். இந்த இலங்கையும் தொலைந்தது, ராட்சசர்களும் அடியோடு தொலைந்தார்கள்,' என்று நைந்து சாம்பினான்.

அநுமன் முகக் கண் மாத்திரம் கொண்டு பார்க்கிறவனாக இருந்தால் இந்தத் துயரக் கடலிலே அமிழ்ந்திருப்பான். ஆனால் அவன் அகக்கண்ணாலே பார்க்கும் பார்வையைப் பெற்றவன். நோக்காமல் நோக்குபவன். கண்ணை நம்பி ஆராய்வதோடு நில்லாமல் கருத்தையும் கலந்து ஆராய்பவன். இதைக் கம்பர் சொல்கிறார்,

'கண்டு கண்ணொடு கருத்தொடு கடாவினன்.'

கண்ணொடு கடாவியபோது அவன் ஐயத்திலும் துயரத்திலும் ஆழ்ந்தான். மேலே கருத்தொடு கடாவினான்; அப்போதுதான் உண்மை புலனாயிற்று.

'சீதை மனிதத் திருமேனி படைத்தவள்; இவள் வேறு இயல்பு கொண்டவள்; யட்ச சாதியோ ராட்சச சாதியோ தெரியவில்லை. தவிர ராமபிரான்மேல் உள்ளம் சென்ற காதலையுடைய பெண்டிருக்கு, மன்மதனாக இருந்தாலும் அவ்வுள்ளம் பிறன்பால் செல்லுமோ?' என்று பார்க்காத பார்வை உதயமாயிற்று. மேலே இன்னும் சில காரணங்களை ஆராய்ந்து உண்மையை உணர்ந்துகொண்டான்.

அவன் பார்த்த பார்வையைக் காட்டிலும் பாராத பார்வையே உண்மையைத் தெளிவுறுத்தியது.

இப்படி ஒரு பார்வை உள்ளது என்பதை இலக்கியப் புலவர்கள் உணர்ந்து பல இடங்களிலே சொல்லியிருக்கிறார்கள். அந்தப் பார்வை கண்ணாலே பார்ப்பதன்று என்பதையும் குறிப்பாகத் தெரிவித்திருக்கிறார்கள். இலக்கணப் புலவராகிய தொல்காப்பியரும் இந்தப் பார்வையைப்பற்றிச் சொல்கிறார். 'நோக்கல் நோக்கம்' என்று அவர் இதனைக் குறிக்கிறார். 'நோக்கு அல்லாத நோக்கம்' என அதை விரிக்க வேண்டும்; 'பார்வை அல்லாத பார்வை' என்பது பொருள். 'நோக்கம் பொருண்மை நோக்கிய நோக்கமும், நோக்கல் நோக்கமும் என இரண்டு வகைப்படும். நோக்கிய நோக்கம் கண்ணால் நோக்குதல்; நோக்கல் நோக்கம் மனத்தால் ஒன்றனை நோக்குதல்' என்று சேனாவரையர் விளக்குகிறார்.

பார்த்தல் என்ற மாத்திரத்தில் கண்ணாலே பார்ப்பதுதான் ஞாபகத்துக்கு வரும். நோக்குதல் அல்லாத நோக்கம் ஒன்று உண்டு என்பதை இந்தத் தொடர் நினைவுறுத்துகிறது. இலக்கியங்களில் நோக்குதல் என்ற சொல் வரும் இடங்களி லெல்லாம் கண்ணாலே பார்த்தல் என்று பொருள் கொண்டு, அங்கே கண் எங்கே என்று தேடக் கூடாது. கருத்தினாலே கருதுவதையும் நோக்கு என்று சொல்வ துண்டு. அந்த நோக்கு, நோக்கு அல்லாத நோக்கு; பார்க்காத பார்வை.

'வான்நோக்கி வாழும் உயிர்எல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி'

என்ற குறளை, இந்தப் பார்க்காத பார்வைக்கு உதாரணமாகக் காட்டியிருக்கிறார்கள் உரைகாரர்கள்.

'உயிர்க ளெல்லாம் கண்களால் வானத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டு வாழும்' என்று அர்த்தம் செய்யலாமா? 'வானினால் உண்டாகும் மழையாகிய

பயனைக் கருதி, அது கிடைக்கும் என்று நம்பி உயிர்கள் உலகத்தில் வாழும்' என்று பொருள் கொள்வதுவே முறை. இங்கே 'நோக்கம்' என்ற சொல் இருந்தாலும் அது கண்ணாலே பார்க்கும் பார்வையைக் குறிப்பது அன்று; நோக்கல் நோக்கமாகிய, பார்க்காத பார்வையையே குறிக்கும்.

### வினாக்கள்

1. புறக்கண் எனப்படுவதும் அகக்கண் எனப்படுவதும் எவை?

2. இவ்விரு கண்ணுணர்ச்சியைப் பாம்புப்படக் காட்சியைக்கொண்டு விளக்குக.

3. அதுமன் தன் கண்ணொடு கடாவியதனால் கொண்ட துன்பத்தினையும் கருத்தொடு கடாவியதனால் அடைந்த நல்லுணர்ச்சியையும் பற்றி எழுதுக.

4. 'நோக்கல் நோக்கம்'—குறிப்பு வரைக.

5. 'வான் நோக்கி' என்றுவரும் குறளில் 'நோக்கல் நோக்கு' பயின்று வருவதைக் காட்டுக.

### பயிற்சி

'பகுத்தறிவு என்பதுபற்றி ஒரு கட்டுரை வரைக.

# 9. கலிங்கத்துப் பரணி

வித்துவான் தேவராஜுலு நாயுடு அவர்கள்

தமிழி லுள்ள தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று பரணி. பரணி என்பது ஆயிரம் யானைகளைப் போரில் வென்ற ஆண் மகனைச் சிறப்புறப் பாடுவது என்பதனை,

'ஆனை ஆயிரம் அமரிடை வென்ற
மான வனுக்கு வகுப்பது பரணி'

என்றார் இலக்கண விளக்கமுடையார். கடவுள் வாழ்த்து, கடை திறப்பு, காடு பாடுதல் முதலாகக் களம் வேட்டல் ஈறாக உள்ள உறுப்புக்களைப் பெற்றுத் தலைவனது சிறப்பு, வெற்றி முதலியவைகளைக் கூறுவது இந்நூல். மேலும், 'காடு கெழு செல்விக்குப் பரணிநாட் கூழுந் துணங்கை

யும் கொடுத்து வழிபடுவதோர் வழக்குப்பற்றி' என உச்சிமேற் புலவர் கொள் நச்சினர்க்கினியர் வரைந் திருத்தலாலும் பரணியினைப்பற்றி அறியலாம். பரணி நட்சத்திரத்திற் குரிய தெய்வங்கள் காளியும் இயமனும். அவர்கள் சிறப்பு இங்கு மிகுதியும் அறிவிக்கப்படுதலால் பரணி என்ருயிற்று என்பர் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள். பரணியின் இலக்கணத்தை வெண்பாப் பாட்டியல், பன்னிரு பாட்டியல் சிதம்பரப் பாட்டியல் என்ற நூல்களில் பரக்கக் காணலாம். இத்தகைய இலக்கணம் அமைந்த இலக்கியங்கள் இரண்டு. ஒன்று ஒட்டக்கூத்தரால் பாடப்பட்ட தக்கயாகப் பரணி. மற் ருென்று கலிங்கத்துப் பரணி.

இனி, ஒட்டக்கூத்தரே, 'தென்தமிழ்த் தெய்வப் பரணி' என்று புகழ்ந்த கலிங்கத்துப் பரணி என்னும் நூல் பண்டைய மக்களின் அறிவின் பெருமை, வீரம், எண்வகை மெய்ப்பாடுகள் இன்ன பிறவும் கொண்டு மக்கள் மனத்தைக் கொள்ளை கொள்ளும் தன்மையது.

இந்நூல், முதற் குலோத்துங்கனையும், அவன்றன் தானைத் தலைவன் கருணுகரன் கலிங்க நாட்டை வெற்றி கொண்டதையும் சிறப்புறப் பாராட்டுகிறது. இந்நூலா சிரியர் சயங்கோண்டார் என்னும் புலவராவர். கலிங் கத்துப் பரணியைப் பாடுதற்குக் கருணுகரன் எய்திய வெற்றியே காரணம் எனல் மிகையாகாது. இனி, குலோத்துங்கன் வரலாற்றினையும் கலிங்கப் போரின் காரணத்தையும் ஆய்வோம்.

கங்கை கொண்ட சோழன் மகளாகிய அம்மங்கை தேவிக்கும், சாளுக்கிய வேந்தனுகிய இராச இராசனுக்கும் திருக்குமாரனுக முதற் குலோத்துங்கன் பிறந்தான். இவன் இளமையிலேயே திக்கு விசயம் செய்து, சக்கரக் கோட்டம் ஆண்ட தாராவர்ஷனை வென்ருன். இதுவே இவனது கன்னிப் போராகும். பின்னர் இம் மன்னன் கி.பி. 1080இல் முடி புனைந்தான். அவன் ஆட்சிக் காலத்தில் சோழநாடு,

'உறுபசியு மோவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு'

என்றபடி பசி, பிணி, பகை முதலிய இன்னல்களின்றிச் செழிப்புற்றிருந்தது. இங்ஙனம் வாழும் நாளில் 'மூத்திபெறும் நகரேழில் முக்கியமாம் எழிற்கச்சி' என்று சிறப்புறும் காஞ்சிமாநகருக்கு வந்து, தன் மனைவியராகிய தியாகவல்லி ஏழிசைவல்லி என்பவர்களுடன் அபயன் அரியணையில் வீற்றிருந்தான். இச்செய்தியை,

* 'பாரெ லாமுடை யானப யன்கொடைப்
பங்க யக்கர மொப்பெனப் பண்டொர்நாள்
காரெ லாமெழுந் தேழரை நாழிகைக்
காஞ்ச னம்பொழி காஞ்சி தன்கணே.
† தரும டங்கமு கந்துத னம்பொழி
தன்பு யம்பிரி யாச்சயப் பாவையுந்
திரும டந்தையும் போல்பெரும் புண்ணியஞ்
செய்த தேவியர் சேவித் திருக்கவே'

என்னும் இவ்வடிகள் தெரிவிக்கின்றன. அப்போது பல சிற்றரசர்கள் போந்து கப்பம் செலுத்தினர். ஆனால் கலிங்க வேந்தனாகிய அனந்தபன்மன் திறை செலுத்தவில்லை என்று திருமந்திரவோலை தெரிவித்தனன். குலோத்துங்கன் சினந்து, கருணாகரத் தொண்டைமானுக்குக் கலிங்க மலையரணை யிடித்து, அரசனையும் பிடித்து வருமாறு ஆணையிட்டான். கருணாகரன் 'இரை வேட்ட பெரும்புலிபோல்' இகன்மேல் சென்று, படைகளுடன் கலிங்கம் புக்கு, பல பகுதிகளில் எரியூட்டி, குடிமக்களின் பொருள்களைச் சூறையாடினன். தீயிட்டெரித்தலை உழபுல வஞ்சி என்றும், ஊரைச் சூரையிடுதலை மழபுல வஞ்சி என்றும் கூறுப.

---

* அபயனின் கரத்தை யொப்ப ஒரு காலத்தில் மேகங்கள் யாவும் காஞ்சியின் மீது பொன்னைப் பொழிந்தன. காஞ்சனம் — பொன்.

† தரு மடங்க — கற்பகத் தருவும் தலை கவிழும்படி. தேவியர் — மனைவிமார்.

இதைக் கேட்ட கலிங்க மன்னன் 'நான் அபய னுக்கன்றி, அவன் சேனைக்கும் எளியனே? நமது கலிங்க நாடு வலிய மலையரண், காட்டரண், கடலரண் ஆகிய அரண்களை உடையதென்பதை அச்சேனை அறி யாதுபோலும்; நன்று பார்ப்போம்' எனப் பெருஞ் சீற் றத்துடன் நவின்றனன். உடனே கலிங்க மன்னனது அமைச்சனுன எங்கராயன், அனந்த பன்மனிடம் 'அரசே! குலோதுங்கன் பாண்டியர் ஐவரையும் வென்றதோடு காந்தளூர்ச் சாலை, விழிஞம், அளத்தி முதலிய ஊர்களையும் வென்றுளான். அவன் படைத் தலைவனுன கருணுகரன் திருமாலின் சக்கரம் போன்ற வன். திருமாலுடைய சக்கரம் பகைவர்களைத் தவருது வெல்வது போன்ற ஆற்றலுடையான். நீங்கள் குலோத்துங்கனை எதிர்க்கும்போது என்னை நினைப்பீர் கள்' என்ருன்.

பின்னர் இரு திறத்துச் சேனைகளும் போர் தொடங் கின. ஆங்கு அளவிறந்த குறுநில மன்னர்கள் இறந்த னர். தேர்கள் உருளை வேறு, அச்சுவேறு, கொடிஞ்சி வேருய்ச் சிதறுண்டன. ஆயிரக் கணக்கான களிறு களும் பரிகளும் வெட்டுண்டன. களிருெடு களிறெ திர்த்தது மலையொடு மலை மோதியதுபோல் இருந்தது. குதிரைகளொடு குதிரைகள் முட்டின. வீரர்கள் மார் பிற் பட்ட அம்புகளைப் பிடுங்கி எதிரிகளின் மீது விட்டனர். [இதற்குப் புறத்துறையில் நூழிலாட்டு என்று பெயர். இத்துறையை வள்ளுவர்,

* 'கைவேல் களிற்ருெடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்'

என அமைத்தார்.] சில வீரர்கள், கழைக்கூத்தாடிகளின் கயிற்ருல் பிணிக்கப்பட்டு நிற்கும் மூங்கில்கள் போல்;

---

* தன் கையிலிருந்த வேலைக் களிற்றின்மீது போக்கி, அதனுல் தன் மீது வரும் அக்களிற்றை எறிவதற்கு வேல் வேண்டும் ஒருவன், தன் மெய்யில் தைத்துக் கிடக்கும் அம்பினைக் கண்டு பறித்து நகுவன்.

தம்முடல் முழுதும் வேல்கள் தைக்க, கீழே விழாமல் ஆண்மையோடு நின்ருர்கள். இரு திறத்துப் படை வீரர்களும் வாட்போரில் ஒரே சமயத்தில் மடிந்து வீழ்ந்தனர்.

பெண்க ளெல்லாம் கணவன்மாருடைய வாள், தோள், மார்பு முதலிய காணுத அவயவங்களை எங்கே என்று காளியிடம் வேண்டி நின்றனர். ஒரு வீரனது மனைவியின் புலம்பலை,

'பொருதடக்கை வாளெங்கே மணிமார் பெங்கே
    போர்முகத்தி லெவர்வரினும் புறங்கொ டாத
பருவயிரத் தோளெங்கே யெங்கே யென்று
    பயிரவியைக் கேட்பாளைக் காண்மின்
                                        காண்மின்'

என்னும் அடிகள் அறிவிக்கும். இதனுல் பண்டைக் காலப் பெண்டிர் வீரத்தையும், அஞ்சாமையையும் அறி யலாமன்றே!

பூமி சிறுத்ததோ என்று கூறும் பெருமையில் கருணுகரன் சேனை எங்கும் பரவியிருந்தது. அந்த இரத்த வெள்ளத்தில் குடர்கள் எங்கும் மிதக்க லாயின. உடல்கள் அனைத்தையும் கழுகு, நாய், நரி, காகம் முதலி யன எங்கும் உலவி உண்டு களித்திருந்தன. இந்த நிலை யில், அந்தோ! அனந்தபன்மன் தான் முன்பு மக்கள் முன்னிலையில் சொன்ன மாற்றம் கெட, கருணுகரன் முன்பு விழித்து நில்லாமல் ஓடி ஒளிந்துகொண்டான். அக்கலிங்க வேந்தன் குகை, கீழரை, அடவி ஆகிய எந்த இடங்களில் ஒளித்தான் என்பதை எவரும் கண்டறிய முடிய வில்லை. இக்கருத்தை,

'புரசை மதமலை யாயி ரங்கொடு
    பொருவ மெனவரு மேழ்க லிங்கர்தம்
அரச னுரைசெய்த ஆண்மை யுங்கெட
    அமரி லெதிர்விழி யாதொ துங்கியே.

அறியு முழைகளி லோப துங்கிய
    தரிய பிலனிடை யோம றைந்தது
செறியு மடவியி லோக ரந்தது
    தெரிய வரியதெ ணுவ டவங்கவே'

என்னும் அடிகள் தெரிவிக்கின்றன. மேலும், அப் போர்க்களம் பதினெட்டு ஆண்டுகள் நடந்த தேவாசுரப் போரும், பதினெட்டு மாதங்கள் நிகழ்ந்த மாபாரதப் போரும், சிறப்புடன் நடந்தன என்று பலரால் சொல் லப்படும் அந்தப் புகழும் கெடும்படி விளங்கியது. இதனை,

'தேவாசுர ராமாயண மாபாரத முளவென்
    ரேவாவுரை யோயும்படி யுளதப்பொரு களமே'

என்பது வலியுறுத்தும்.

எஞ்சி நின்ற கலிங்க வீரர்கள் தோற் ரேடிய பின் யானை, ஒட்டகம், தேர், நிதித் திரள், மகளிர் கூட்டம் முதலிய கலிங்க செல்வ மனைத்தையும் கைப்பற்றிக் கொண்டு, கருணாகரன் கலிங்க வெற்றியைக் குலோத் துங்கனிடம் ஒப்புவித்தான்.

குலோத்துங்கன் கருணாகரனுக்கும், படைவீரர்கட் கும் மட்டற்ற மகிழ்ச்சியுடன் பரிசுகளை வழங்கினன். 'குன்றி விட்ட விளக்குப்போல' குலோத்துங்கன் புகழ் முன்னையினும் பன்மடங்கு கருணாகரனல் சிறந்து விளங்கியது.

கருணாகரன் வண்டை தொண்டை என்னும் ஊர் களை ஆட்சி புரிந்த சிற்றரச னுவான். இவன் புகழைக் 'கலிங்க மெறிந்த கருணாகரன்' என்றும், 'உலகு புகழ்க் கருணாகரன்' என்றும் கலிங்கத்துப் பரணி பாராட்டு கிறது. விக்கிரம சோழன் உலாவில் புகழப்படுபவனும் இவனே யாவான். எனவே, குலோத்துங்கன் மகனுன விக்கிரம சோழன் காலத்திலும் இவன் இருந்தான் என்று தெரிகிறது. தோண்டை மண்டலச் சதகம், சில

யெழுபது என்னும் நூல்களில் இவன் புகழை நன்கு அறியலாம்.

வினாக்கள்

1. 'பரணி' என்பது என்ன?

2. 'பரணி' என்னும் பெயர்க் காரணம்பற்றி நச்சினார்க்கினியரும் உ. வே. சாமிநாத ஐயரவர்களும் கூறுவது என்ன?

3. சயங்கொண்டார் இந்நூலைப் பாடியமைக்குக் காரணம் என்ன?

4. முதற் குலோத்துங்கன் காஞ்சியின்கண் திருவோலக்க மிருந்த சிறப்பினைப் புலப்படுத்துக.

5. 'இரை வேட்ட பெரும் புலி' எனக் குறிக்கப்பட்டவன் யாவன்?

6. கருணாகரன் படையெடுத்த செய்தி கேட்டுக் கனன்ற அனந்தபன்மனுக்கு எங்கராயன் உரைத்தன யாவை?

7. கலிங்கத்துப் போர்க்களக் காட்சியினை இங்குக் கூறுமாற்றான் வரைக.

8. போர்க்களத்தின்கண் பெண்களின் நிலையினைத் தெரியச்சொல்லுக.

9. கலிங்கர் வேந்தன் உற்ற நிலை யாது?

10. கருணாகரனின் சிறப்பினைத் தெரிவிக்க.

11. குறிப்பு வரைக: உழபுல வஞ்சி, மழபுல வஞ்சி, தூழிலாட்டு, வெருவரு நிலை.

# 10. சிலப்பதிகாரம்: வஞ்சினமாலை நாடகம்*

காந்தைக் கவியரசு அரங்க வேங்கடாசலம் பிள்ளை அவர்கள்

[கண்ணகி உடைத்த சிலம்பின் பரல் தெரிக்கவும், தன் செங்கோல் வளைந்தது கண்டு பதைத்து வீழ்ந்து உயிர் விட்டனன் பாண்டியன் நெடுஞ் செழியன். அவன் மனையாள் கோப்பெருந்தேவி கணவற்கு உற்றது நோக்கிக் கலங்கிச் சாய்ந்தாள். கண்ணகி அவளைப் பார்த்துப் பேசுகின்றனள்.]

(இடம்:—அரண்மனை

காலம்:—பகல்

உரியோர்:—கண்ணகி, கோப்பெருந்தேவி, தோழி)

* இவ்வுரையாடல் 'திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரின்' வெளியீடாகிய 'சிலப்பதிகார நாடகம்' என்ற நூலிலிருந்து கொள்ளப்பட்டது.

கண்ணகி:—பெருந்தேவியே! நானோ கணவனை யிழந்த தீவினையேன். யாதும் தெரியாத நிலையில் உள்ளவள். அம்மணி! முற்பகல் பிறருக்குக் கேடு செய் தான் ஒருவன் தான் செய்த கேட்டின் பயனைப் பிற்பகலே அடைவான் என்பர். தேவியே! அடியேன் பிறந்த புகார் நகரத்தின் கற்புடைப் பெண்டிர் பெருமையினை உரைக்கின்றேன், கேட்பாயாக. எங்கள் நாட்டு வணிக குலத்தாராகிய ஓர் இளைஞனும் கன்னியும், ஒரு தலத்து ஆண்டவன் கோயிலுள், பெரியார் ஒருவர் கூறியபடி, ஒரு பகலில், வன்னிமரம், மடைப் பள்ளிகள் உள்ள ஓர் இடத்தே மணம் செய்துகொண்டவர்கள் இந்நகரத் திற்கு வந்திருந்தார்கள். அவர்களைக் கண்டு சிலர் பழித் தார்கள். அந்த மணத்தினைத் தாங்கள் உண்மையென ஒப்புதற்கு, அம்மரம், மடைப்பள்ளிகளை இங்கு வர வழைத்துக் காட்டுக என்றனர். அக்கற்புக்கரசி, ஆண்ட வன் அருள் பெற்று, இங்குள்ள கோயிலிற் காட்டினள். இது யாவரும் அறிந்த தொன்றன்றோ? இக்கற்புக்கரசி எமது புகார் நகரத்தே பிறந்த நங்கை!

தேவியின் தோழி:—ஓ! தெய்வத் திருவருள் பெற்ற கற்பரசி!

கண்ணகி:—பெருந்தேவியே! காவிரியில் ஒரு பெண் தான் விளையாடற்கு அமைத்த ஒரு மணற் பாவை யினை ஏனைத் தோழியர் இப்பாவையே நின் கணவன் எனக் கூறுநிற்க, அது கேட்டு நாணி நின்றாள்! ஏனை மகளிரொடும் வீடு செல்லாளாய், காவிரித் திரை நீர் இதனை அழித்துவிடுமே என்று அஞ்சிக் காத்திருந் தாள்! அத்தகைய கற்பின் கொழுந்தும் எம் நகரத்தினள் ஆவள்!

தேவியின் தோழி:—ஓ! உள்ளத்து உயர்வு விளங் கும் கற்பரசி!

கண்ணகி:—எங்கள் பேரரசன் கரிகாற் சோழன் மகள் ஆதிமந்தி யென்னும் அரசிளங் குமரி தன் காதலன் வஞ்சி மன்னன் 'ஆட்டன் அத்தி' என்பானைக்

கூடிக் காவிரி யாடுங்கால், காவிரிப் புனல் கணவனைக் கவர்ந்து சென்றிட்டது. அவள் அக்காவிரி வழியே விடாது சென்று, கடற் கரையில் நின்று, இரங்கித் தன் கணவனைக் கூவி அழைத்திட, கடற்றெய்வம் அக்காத லனைக் கொணர்ந்து காட்டிற்று! அந்தக் கற்பிற் கரசியும் எமது நகரத்தினள் ஆவள்!

**தேவியின் தோழி**:—கற்பின் பெருமையைக் காட்டும் பொற்பரசி.

**கண்ணகி**:—அம்மணி! இன்னும் கேளாய்! தன் கணவன் கலன் ஏறிக் கடல் கடந்து சென்றுனுக, அவன் வரும்வரை, அவனையே எதிர்நோக்கி நிற்க எண்ணிய ஒரு கற்புக்கரசி, தனக்கு வரும் இடையூறுகளை அகற்றிக் கொள்ள எண்ணிக், கல்லுருவம் வேண்டிப் பெற்றுக் காத்திருந்து, க்ணவன் வரக் கண்ட நாளில், அக்கல்லுரு வம் நீங்கப்பெற்றுக், கணவனை யடைந்த கற்பின் செல்வி யொருத்தியும், எங்கள் நகரத்தினள் ஆவள்!

**தேவியின் தோழி**:—என்ன கற்பு! துன்ப இன்பங் கள்!

**கண்ணகி**:—தன் மாற்றுள் குழந்தையும் தன் குழந் தையும் ஓரிடத்தே விளையாடுங்காலை, அருகிலிருந்த ஒரு கிணற்றில் மாற்றுள் குழந்தை விழுந்திட, அதுபற்றி உலகத்தார் ஐயுற்றுக் கூறும் பழிக்கஞ்சித், தன் குழந்தை யையும் அதனுள் வீழ்த்திய தூய உள்ளத்தினளாகிய கற்புக் கரசி ஒருத்தி, திருவருளால் அவ்விரு குழந்தை களையும் உயிருடன் எடுத்துக்கொண்டனள்! இவள் பிறந்ததும் எமது புகாரே!

**தேவியின் தோழி**:—பழிக்கு அஞ்சி ஒழுகி அழி யாப் புகழ் உற்ற தெய்வக் கற்பினள்!

**கண்ணகி**:—தேவியே, அயலான் ஒருவன் தன்னை உற்று நோக்கும் தீய பார்வையினை அறிந்து, அத்தீய எண்ணம் அழிந்துபோகத் தன் முகத்தினைக் குரங்கின் முகமாக மாற்றிக்கொண்டு நின்று, தன் கணவன் மீண்ட

காலை, அக்குரங்கு முகத்தினை மாற்றி இயற்கை உருவம் கொண்ட தெய்வக் கற்பினள் ஒருத்தியும் எம் நகரத்தினள் ஆவள்!

தேவியின் தோழி:—அந்தோ! கற்பினை நிலைநாட்டும் கடமையின் பாடு! அம்மா! அதனால் பெரும் தெய்வ மேம்பாடுகள்!

கண்ணகி:—தேவியே! இன்னு மொன்று! இளம் பெண் இருவர் விளையாடும்போது, ஒருத்தி பிற்காலத்தே வருவது அறியாளாய், எனக்கு ஒரு மகளும் உனக்கு ஒரு மகனும் பிறப்பின், அவனே என் மகள் கொழுநன் ஆவன் என்று உரைத்திட்டாள். அவ்வாறே அவர் களுக்குப் பின்னாளில் மகளும் மகனும் பிறந்தனர். ஆனால், அந்தோ! அம்மகன் உடற் குறையால் பிறர் கூடையில் சுமந்து செல்லும் தீவினையாளன் ஆயினன்! இந்நிலையில் அம் மகளின் தாய் தன் கணவனுக்குப் பண்டு நிகழ்ந்திருக்கும் தங்கள் வாய்மொழிகளைக் கூறி இரங்குங்கால், அப்போது அதனைப் புறத்தே கேட் டிருந்த அம்மகள், மண அணிச் சிறப்புடன் தோன்றித், தான் தன் தாயின் வாய்மொழியினைப் போற்ற உடன் பட்டமை கூறி அவனையே மணந்து அவனைத் தலையில் சுமந்து செல்லும் பேரருள் பெருங்கற்புடையாளாகிக் கற்புலகம் போற்றும் சிறப்பினை யெய்தி நின்றாள். அவள் பிறந்ததும் எமது புகார் நகரமே யாகும்.

தேவியரே! இத்தகைய கற்புக்கரசியர் தோன்றிய அந்தப் பெரும்பதியாகிய புகார் நகரில் தோன்றிய நானும் ஒரு கற்புடைய மகளே யாயின், அரசுடன் இம்மதுரை மாநகரினை அழித்திடுவேன் காண்பாயாக! தேவியே!

ஓ! இஃதென்னை! தேவியும் இறந்தனர் போலும்! (வெளிச் செல்லல்; நகரில் மும்முறை வலம் வரல்).

பயிற்சி

புகார் நகரத்துக் கற்புடை நங்கையர் வரலாற்றினை வரைக. 'சிலப் பதிகாரம்' என்பதுபற்றியும் ஒரு கட்டுரை வரைக.

# 11. பூங்குன்றனார் பொன் மொழிகள்*

டாக்டர் மா. இராசமாணிக்கனார், M.A., M.O.L., PH.D

## சங்க காலப் புலவர்

சங்க காலத்தில், இன்று நமது சமுதாயத்திலுள்ள முதலியார், பிள்ளை, செட்டியார், ஐயர், ஐயங்கார் என்ற சாதிப் பெயர்களோ சாதிகளோ இருந்தமைக்குச் சான்று இல்லை. இயற் பெயர் 'சாத்தன்' என்று இருந்தால், அச் சாத்தன் மரியாதைக்குரியவனாக மாறும்பொழுது 'ஆர்' விகுதி கொடுக்கப்படும். அவன் 'சாத்தனார்' என வழங்கப் படுவான்; கபிலன், கபிலர் என்று வழங்கப்படுவான். அவன் இன்ன ஊரினன் என்பதைக் குறிக்க ஊர்ப் பெயர் பெயருக்கு முன் குறிக்கப்படும்; 'சீத்தலைச் சாத்தனார்', 'உறையூர் மோசியார்' என்றாற்போல வரும். ஒரே ஊரில் ஒரே பெயர் கொண்ட புலவர் பலர் இருப்பின், அவர் செய்துவந்த தொழிலால் வேறுபாடு குறிக்கப்படும்; 'கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்' என்றாற்போல வரும். பிறந்த ஊர் வேறாகவும் தங்கித் தொழில் நடத்தும் ஊர் வேறாகவும் இருந்தால் இவ்விரண்டு ஊர்களையும் அவன் செய்யும் தொழிலையும் அவனது இயற் பெயரையும் சேர்த்து வழங்குதல் பண்டை மரபு, சீத்தலை என்னும் ஊரிலே பிறந்த சாத்தனார் மதுரையில் கூலவாணிகராக இருந்தார் என்பதை உணர்த்த 'மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்' என்று குறிக்கப்பட்டார்.

மயிலையார், நாகையார் என்றாற்போலப் பிறந்த ஊரால் பெயர் பெற்றோர் பலர். பூங்குன்றம் என்பது பாண்டி நாட்டு ஊர்களுள் ஒன்று. இன்றைய இராம நாதபுரம் மாவட்டத்தில் உள்ள மகிபாலன்பட்டியே

* இக்கட்டுரை 'ஔவை நூலக' வெளியீடு, 'இலக்கிய அமுதம்' என்ற நூலிலிருந்து கொள்ளப்பட்டது.

சங்க காலத்தில் பூங்குன்றம் எனப் பெயர் பெற்றிருந்தது என்பது கல்வெட்டால் தெரிகின்ற உண்மை யாகும். கோள் நிலைகளைக் கணக்குப் பார்த்து மக்களுக்கு நேரும் நலன் தீமைகளைக் கணித்துக் கூறுபவன் இக்காலத்தில் சோதிடன் எனப்படுகிறான்; அக்காலத்தில் 'கணியன்' எனப்பட்டான். பூங்குன்றம் என்ற ஊரில் வாழ்ந்த கணியன் ஒருவன், கணியன் பூங்குன்றன் என்று பெயர் பெற்றான். அக்கணியன் தன் தொழிலோடு நில்லாது பைந்தமிழைப் பாங்குறக் கற்றுப் பெரும் புலவனாகவும் விளங்கினான்.

சங்க காலப் பெரும் புலவர்களான நக்கீரர், கபிலர், பரணர் இவர்தம் வரிசையில் வைத்து எண்ணத் தக்க பெரும் புலவனாக அப்பெருமான் விளக்கமுற்றிருந் தான். அப்பெரியோன் அருளிய பாட லொன்று புறநானூற்றில் (192) உள்ளது. பழந்தமிழர் கொண் டிருந்த சீரிய கருத்துக்களை அப்பாவில் வைத்துப் புலவன் பாடியுள்ளான்.

## புலவர் பொன்னுரை

1. 'எமக்கு எந்த ஊரும் எமது ஊரே; எல் லாரும் எம்முடைய சுற்றத்தார். (2) ஒருவனுக்குக் கேடோ ஆக்கமோ வருவது அவனாலேயே தவிரப் பிறரால் அன்று. (3) சாதல் என்பது புதியதன்று; கருவில் தோன்றிய நாளே தொடங்கியுள்ளது. ஆத லால் வாழ்தலை இனியது என்று மகிழ்ச்சி அடைய வில்லை. ஒரு வெறுப்பு வந்தபோது இது கொடியது என்று எண்ணவுமில்லை. (4) பேரியாற்று நீரின்வழியே செல்லும் மிதவை போல நமது அரிய உயிர் ஊழின் வழிப்படும் என்பது அறிஞர் நூலால் தெளிந்திருக்கி றோம். ஆகவே நாம் நன்மையால் மிக்கவரை மதிப் பதும் இல்லை; அவ்வாறே நன்மையால் சிறியோரைப் பழித்தலும் இல்லை.'

விளக்கம்

இக்கூற்றின் கருத்து யாது? பண்டைக் காலத் தமிழர் பல நாடுகளுக்குச் சென்று வாணிகம் செய்தவர்; உள்நாட்டு வாணிகத்திலும் வெளி நாட்டு வாணிகத்தி லும் சிறந்த பழக்கம் உடையவர். அவர்கள் வாணிகத் தின் பொருட்டுக் கடல் கடந்து பல நாடுகளுக்கும் சென் றனர். அங்கங்குத் தங்கி அவ்வந் நாட்டு மக்களோடு பழகித் தங்கள் வாணிகத்தைப் பெருக்கினர். அயல் நாடு செல்வோர் அந்நாட்டு மக்களோடு அகங்கலந்து பழகி ஞல்தான் வாணிகம் சிறந்த முறையில் நடைபெறும். அந்நாட்டு மொழியையும் ஓரளவு அறிந்து அம் மக்க ளோடு பேசி அம் மக்கள் உள்ளத்தைத் தம்பால் ஈர்க்க வேண்டும். இத்துறைகளில் எல்லாம் பண்பட்ட தமிழ் வணிகர் தம் நாட்டைப் போலவே, தாம் தாங்கி வாணி கம் நடாத்திய பிற நாடுகளையும் மதித்தனர்; அம் மதிப்பு மிகுதியால்தான் பல நூற்ருண்டுகள் பல நாடுகளோடு வாணிகத் தொடர்பு வலுப்பெற்று வந்தது. தமிழகத்துச் செல்வநிலைக்கு இவ்வயல்நாட்டு வாணிகம் ஒரு சிறந்த காரணமாகும். இந்த உண்மையைத் தமிழ் மக்கள் நன்கு அறிந்திருந்தனர்; அயல் நாட்டு வணிகரைத் தம் நாட் டில் வாழ்வித்தனர்; வசதிகள் அளித்தனர்; நன்கு கலந்து பழகினர். சீனர் அராபியர் யவனர் முதலிய பல நாட்டா ரும் சங்க காலத் தமிழகத்தில் தங்கி வளமுற வாழ்ந்த னர் என்பதைச் சங்க நூல்களால் அறிகின்ருேம். அயல் நாட்டார் குறிப்புக்களும் இவ்வுண்மையை வலி யுறுத்தும் சான்ருக நிற்கின்றன. இந்த உண்மையை உளம் கொண்ட கணியன் பூங்குன்றனர் என்ற புலவர், ‘யாதும் ஊரே, யாவரும் கேளிர்’ என்று சுருங்கக் கூறினர்.

2. ‘மனிதன் தன் நற் செயல்களால் தன்னை உயர்த்திக் கொள்கிருன். தன் தீச் செயல்களால் தன்னைத் தாழ்த்திக் கொள்கிருன்’ என்று ஜேம்ஸ் ஆலன் என்னும் மேனுட்டு அறிஞன் புகன்றுள்ளான். இப்

பேருண்மையையே ஏறத்தாழ 1800 ஆண்டுகளுக்கு முன் கணியன் பூங்குன்றனுர் கூறியுள்ளார்—'தீதும் நன்றும் பிறர்தர வாரா.'

மனித வாழ்க்கையைப் பக்குவப்படுத்தும் இவ் வுயரிய உண்மையை அறிந்தவர் எத்துணையர்? மனிதன் தன் சொல்லாலும் செயலாலும் பொதுமக்கள் உள்ளங் களைக் கவர்கிருன்; அவ்வாறே தன் தீய சொல்லாலும் செயலாலும் பொதுமக்கள் வெறுப்புக்கு ஆளாகிருன்; கோள் சொல்லுவது, பிறர் வெறுக்கும் செயல்களைச் செய்தல் முதலிய இரு செயல்களால் பலராலும் வெறுக் கப்படுகிருன். இங்ஙனம் பலர் வெறுப்புக்கும் காரணம் அவனே தவிரப் பிறர் அல்லர். 'நான் அவனுல் கெட்டு விட்டேன், இவரால் இக்கேடு நேர்ந்தது' என்று தன் கேட்டிற்குப் பிறரைக் குறை கூறும் மக்கள் இந்த உண் மையை உணர்வ தில்லை.

இந்த உண்மையை ஒவ்வொரு மனிதனும் உணர்ந்து விட்டால், அவனது வாழ்வு செம்மைப்படும். கணக்கற்ற அற நூல்களைப் படிப்பதாலோ சமய நூல் களைப் படிப்பதாலோ ஒருவன் பெறும் பயனைவிட இப் பயன் மிகப் பெரியது; உயர்ந்தது. மனிதனது இன்ப வாழ்வுக்கு உயிர் நாடியான இப்பேருண்மையை மிகச் சுருக்கமாக உரைத்தருளிய புலவர் பெருமானுக்கு நமது நன்றி உரியதாகுக.

3. உலகில், மலர்ந்த பூ வாடுதல் இயல்பு; தோன் றிய ஒன்று மறைவதும் இயல்பு; அதுபோல் பிறந்தவர் இறத்தலும் இயல்பு. 'பிறந்த நாம் இறவாமல் இருக்கப் போகிருேம்; இவ்வுலக இன்பங்களை எல்லாம் நுகரப் போகிருேம்' என்று எண்ணுதல் அறிவற்ருர் இயல்பு. அறிவு படைத்தவர், பிறந்தவர் இறத்தலால் எப்பொரு ளும் நிலையுடையதன்று என்னும் உண்மையை உணர்வர்; அதனுல் பற்றற்ற நிலையில் வாழ்வர். அறிவுடைய செல்வர் ஊர் நடுவில் உள்ள பழுத்த மரம்போல மக்கட்குப் பயன்படுவர்; வாழ்வைப் பெரி

தாக எண்ணி, வறுமையால் வாடும் எளியவர்பால் இரக்கம் கொள்ளாதிரார். இச் சிறந்த மனிதப் பண்பை ஊட்டி வளர்க்கத் தக்கது கணியன் பூங்குன்றனாரின் பொன்மொழி. அது

'சாதலும் புதுவதன்றே; வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்றும் இலமே'

முடிவுரை

இப்பொன்னுரைகளையும் இவற்றின் பரந்த பொருளையும் உள்ளத்தில் ஆழப் பதித்தல் நன்று. மனிதன் தன்னைப் போலவே பிறரை நேசிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்; அந்நிலையில் அவன் எந்த நாட்டையும் தன்னுடென்று மதிப்பான். மனிதன் எந்த நாட்டவனாயினும் எங்கும் சென்று வாழலாம் என்னும் மன அமைதி பெற்றிருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் அவன் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று மனம் மகிழப் பாடுவான். தான் உயர்வதும் தாழ்வதும் தன்னாலேதான் என்பதை உணரும் அறிவு மனிதனை வாழ்விக்கும். தோன்றுவது அழியும் என்ற உண்மை மனிதனுக்குச் சுயநலத்தை மிகுதியாக உண்டாக்காது. இவ்வுயரிய பண்புகள் மனிதனிடம் கருக்கொள்ளுமாயின், மனித வாழ்வு மாண்புடைய வாழ்வாகும். கணியன் பூங்குன்றனாரின் அரிய பாடலைக் கீழே காண்க:

'யாதும் ஊரே யாவரும் கேளிர்;
தீதும் நன்றும் பிறர்தர வாரா;
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே; வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்
இன்னா தென்றலும் இலமே; மின்னொடு
வானம் தண்துளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்

முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியில் தெளிந்தனம் ஆகலின், மாட்சியிற்
பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.'

வினாக்கள்

1. 'மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்' என்ற பெயர் வழக்கினால் பெறப்படுகின்ற உண்மைகள் யாவை?

2. 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்ற தொடரில் உள்ள வாணிப நுட்பத்தினைப் புலப்படுத்துக.

3. கணியன் பூங்குன்றனாரின் கருத்துரைகளைத் தொகுத்துரைக்க.

# 12. அரசரும் புலவரும்*

'சோமலே'

எல்லா நாடுகளிலும் புலவர்களுக்குப் பேரும் புகழும் பெருகுவதற்குக் காரணமாயிருந்தவர்கள் புரவலர்களே. அவர்கள் இல்லையென்றால் புலவர்களும், புலவர்களது பெருந்தொண்டும் நாட்டிற்குப் பயன்பட முடியாது. பண்டித மணியவர்களைப் போற்றிய புரவலர்கள் பல திறப்படுவர். அவர்களுள் முதற் புரவலர் சன்மார்க்க சபைக்குரிய வ. பழ. சா. பழநியப்பச் செட்டியார் அவர்களே.

மகிபாலன்பட்டியில் ஒரு மூலையில் தென் மொழிக் கடலிலும் வடமொழிக் கடலிலும் ஆழ்ந்தாழ்ந்து பெறலரிய முத்துக்களைக் கண்டெடுத்துத் தாமே மகிழ்ந்துகொண்டிருந்த பண்டித மணியவர்களை வெளிக்கிழுத்துத் தாம் பெறும் இன்பத்தைத் தமிழ் மக்கள் எல்லோரும் பெறவும், தமிழ் நாட்டில் அன்று பெரும் புலவராயிருந்த பெருமக்களின் தொடர்பு பண்டிதமணி அவர்களுக்கு ஏற்படவும் காரணமா

---

* இக்கட்டுரை சென்னை, 'இன்ப நிலையத்தார்' வெளியீடாகிய 'பண்டிதமணி' என்ற நூலிலிருந்து கொள்ளப்பட்டது.

யிருந்தது பழநியப்பச் செட்டியார் தொடங்கிய சன் மார்க்க சபையே.

1929ஆம் ஆண்டில் அரசர் அண்ணுமலைச் செட்டி யார் அவர்கள் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்களைக் கண்டு தமது பல்கலைக் கழகத்தில் முதல் தமிழ்ப் பேராசிரியராக இருக்கும்படி வேண்டினர். அப் பொழுது ஐயரவர்கள் 'தங்கள் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராக இருக்கும் தகுதியுடையவர்கள் இருவர். அவர்களில் ஒருவர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டி யார். மற்ருெருவர் ரா. ராகவையங்கார் அவர்கள். இரு வரும் மொழிப் பெரும் புலமை படைத்து விளங்கும் தமிழ்ப் பேராசிரியர்கள் என்று சொன்ஞர். அந்நாளி லிருந்து எப்படியாவது பண்டித மணியவர்களைத் தம் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரிய ராக அமர்த்திவிட வேண்டு மென்று ராஜா அவர்கள் எண்ணிஞர்கள்.

'எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியர்
திண்ணியராகப் பெறின்'

என்ற குறளுக்கு இலக்கியமாகத் தம் விடா முயற்சியால் பல துறைகளில் வெற்றி கண்டவர் அரசர் அண்ணு மலைச் செட்டியார் அவர்களே.

ஆகையால் அப்பெரியார், பண்டித மணிக்கு வேண்டியவர்கள் யார் என்று ஆராய்ந்து, கானுடு காத் தான் சித. வீரப்பச் செட்டியாரைக் கண்டுபிடித்தனர். பின்னர் ஒரு நாள் அச்செட்டியாருடன் அரசர் பண்டித மணியின் வீட்டிற்குச் சென்று தம் கருத்தைத் தெரிவித் தனர். அப்பொழுது பண்டித மணி, நான் தங்கள் பல்கலைக் கழகத்தில் ஆசிரியனுக இருக்கும் தகுதியுடை யவன் அல்லன், வேறு பெரும் புலவரைப் பார்க்கலாம் என்று மறுத்து விட்டனர். அன்று பண்டித மணி அவர்கள் அரசரிடம் நடந்து கொண்ட வகையும் அண்ணுமலைச் செட்டியாரின் உள்ளத்தைக் கொள்ளை

கொண்டது. இவர்தாம் நம் பல்கலைக் கழகத்தில் ஆசிரியராக இருக்கும் தகுதியுடையவர் என்று அன்றே அரசர் எண்ணிவிட்டார். அன்றுதான் பண்டிதமணி யாகிய புலவர் பெருமானுக்கும் அரசர் அண்ணாமலைச் செட்டியாருக்கும் உலகிலுள்ள எல்லாப் பொருள் களிலும் சிறந்து விளங்கும் நட்பு அரும்பத் தொடங் கிற்று. 'ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை இரு நிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே' என்ற முது மொழியின்படி அன்று வேரூன்றிய அந்நட்பு, பின்னர் பெரு மரமாகிப் பூத்துக் காய்த்துக் கனிந்து தமிழ் நாட்டிற்குப் பெரும் பயன் அளித்ததைப் பின்னர்க் காணலாம். அரசர் பின்னர் அடிக்கடி பண்டிதமணியின் வீட்டிற்கு வரத் தலைப்பட்டனர்.

1931ஆம் ஆண்டில் பண்டிதமணி அவர்கள் புதிதாகக் கட்டிய கட்டிடத்திற்குப் 'புதுமனை புகுவிழா' நடைபெற்றது. அந்நிகழ்ச்சிக்கு அரசர் அண்ணாமலைச் செட்டியாரும் வந்திருந்தார். ஆனால் அரசர் அவர்கள் பெருஞ் செல்வர்கள் வீட்டிற்கும் மிக நெருங்கிய உற வினர்கள் வீட்டிற்கும் வருவார்களே யன்றி, மற்றையோர் வீடுகளுக்கு வருதலும், வந்து பல மணிநேரம் மிக நெருங்கிப் பேசிக் கொண்டு இருத்தலும் அருமை. அத்தகைய அரசர் அவர்கள் பண்டித மணியின் வீட்டிற்கு அடிக்கடி வருதலையும், வந்து பல மணி நேரம் மிக நெருங்கிப் பேசிக் கொண்டிருத்தலையும் கண்ட ஏனைய செட்டியார்கள் பண்டித மணியிடம் பெரு மதிப்புக் கொண்டு அவரது தொடர்பை நாடினர்.

மேனாட்டுப் பெருங் கழகங்கள் பெரும் புலவர் களைத் தேடிப் பிடித்து, அவர்களுக்குப் பெருஞ் சிறப் பினைச் செய்து அவர்கள் புலமை நாட்டுக்குப் பயன் படும்படி செய்கின்றன. எடுத்துக்காட்டாக ஒன்றனைப் படித்து மகிழ்வோம். ரஷ்யாவின் ஒரு பகுதியான உஸ்பெசிஸ்தானில் உழவுத் தொழிலையே மேற்கொண்டி ருந்த ஒருவன் ரஷ்ய மொழியைத் தானாகவே கற்று

இசைக் கவியாக விளங்கினன். டாஷ்கெண்டு சர்வ கலாசாலை அவன் கவிதைகளைப் போற்றி, அப்புலவனுக்கு உயர்ந்த பட்டம் அளித்து ஸ்டாலின் வெகுமதியும் தந்தது. அவ்வண்ணமே அரசர் அண்ணுமலைச் செட்டியார் அவர்களும் பண்டித மணியவர்களைத் தேடிப் பிடித்து, அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் அமர்த்தி மகா மகோபாத்தியாய பட்டத்தை அவர் பெருதற்குரிய ஏற்பாடுகளைச் செய்து அவரது பெரும் புலமை தமிழ் நாட்டிற்குப் பயன் படும்படி செய்தனர்.

ராஜா அவர்களுடைய ஜாதகத்திற்கும் பண்டித மணியினுடைய ஜாதகத்திற்கும் பல ஒற்றுமைகள் இருந்தன. இதைப் பற்றிப் பண்டிதமணி அடிக்கடி குறிப்பிடுவதுண்டு. பொருள் மட்டும் ராஜா அவர்கள் ஜாதகத்தில் இருப்பது போலத் தம்முடைய ஜாதகத்தில் சிறப்பான நிலையில் இல்லை யென்று சொல்லுவார்கள்.

பண்டித மணியின் வியத்தகு புலமை வளத்தை பல தடவைகளில் அண்ணுமலை அரசர் பாராட்டியுள்ளார். ஏனைய தமிழ்ப் புலவர்களைச் சந்திக்கும்போ தெல்லாம் பண்டிதமணி இளமையில் யாரிடம் பாடம் கேட்டாரென்று அடிக்கடி அரசர் வினவுவார். அதற்குத் தக்க விடை கூற இயலாது புலவர்களும் பண்டித மணிக்கு இயற்கையில் அமைந்த கவிச்சுவையும், கல்வி ஆர்வமும், தன் முயற்சியுமே அவருடைய நிகரற்ற புகழுக்குக் காரணம் என்று கூறுவர். இவற்றைக் கேட்டு அரசர் முன்னிலும் மகிழ்ந்து முறுவலிப்பர்.

பண்டித மணி அவர்களுடைய படத்தை மேலைச் சிவபுரி சன்மார்க்க சபையில் ராஜா சர் அண்ணுமலைச் செட்டியார் அவர்கள் திறந்து வைத்தார்கள். பண்டித மணி அவர்களுடைய 60 ஆம் ஆண்டு நிறைவு விழாவில் ராஜா அவர்களே தலைமை தாங்கினர்கள். அதைப் பற்றிக் குறிப்பிடும் வகையில் பண்டித மணி அவர்கள் சுவைபடக் கூறியது இங்கே குறிப்பிடத் தக்கது.

'இரண்டு வாரங்கள் முன்னர் நிகழ்ந்த கனம் ராஜா அவர்களின் மணி விழாவில் அவர்கள் அழகிய மாளிகையில் உலகத்துப் பெருமக்களெல்லோரும் அடங்கி இருந்தனர். அவ்வெல்லோரையும் தம் பெருமையுள் அடக்கித் திகழும் அரசர் பெருந்தகையார் இன்று எனது இச்சிறு குடிலில் அடங்குவார்களாயின் இதன் பெருமையைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ? என்பாலுள்ள பேரன்பால் இத்துணை நேரம் பன்மீன் நடுவண் பான் மதிபோல் இங்கே வீற்றிருந்து என்னைப் பாராட்டி மகிழ்வித்த ராஜா அவர்களுக்கு யான் என்றுங் கடமைப்பட்டவன்.'

எவ்வளவு பெரிய ஆற்றல் உடையவராக இருந்தாலும் அந்த ஆற்றலை அவர் வெளிப்படுத்துவதற்கான ஒரு வாய்ப்பு ஏற்படாவிட்டால் அந்த ஆற்றல் அனைத்தும் வீணாகும். அதனால் நாடும் மக்களும் பயன் பெற இயலாது. பண்டித மணி அவர்களுடைய புலமையும் திறமையும் தமிழ் நாட்டிலுள்ள இளைஞர்களுக்குப் பயன் படுவதற்கான ஒரு வாய்ப்பைத் தந்த பெருமை ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களுக்கே உண்டு. இதை எண்ணும்போது, கிரேஸ் எலிஜி என்னும் ஆங்கிலக் கவிதை நினைவிற்கு வருகிறது. இப்பாடலைக் கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை அவர்கள் பின்வருமாறு இனிய தமிழில் தந்திருக்கிறார்கள்.

'தக்க திறனிருந்தும்—நல்ல
  தருணம் வாய்த்தில தேல்
மிக்க புகழெய்தி—மக்கள்
  மேன்மை யடையா ரம்மா.

சூழ்நிலை வாய்த்திலதேல்—சூரனும்
  சோம்பி மடிவா னம்மா
பாழ்நிலத் திட்டவிதை—வளர்ந்து
  பயன் மரமாமோ.'

ராஜா சர் அண்ணுமலைச் செட்டியார் அவர்களைத் தவிர வேறு சிலரும் பண்டிதமணி அவர்களை ஆதரித்துச் சிறப்பித்துள்ளனர். சன்மார்க்க சபையை நிறுவிய குடும்பத்தாரைப் பற்றிய முன்னரே குறிப்பிட்டிருக்கிரேம். பண்டித மணி அவர்களுடைய நூல்களை வெளியிட்டு உதவியவர்கள் மிகப் பலர். அவர்கள் அனைவருடைய பெயரையும் இங்கே குறிப்பிடுவது இயலாது. இருவரைப் பற்றி மட்டும் கூறலாம். ஒருவர் தமிழ் வள்ளலாக விளங்கிய நற்சாந்துப் பட்டி பெ. ராம. ராம. சிதம்பரம் செட்டியார் அவர்கள். மற்ருெருவர் சிறந்த தமிழ்த் தொண்டுகளை இன்றளவும் செய்து வருபவர்களும், தமிழ் அன்பர்கள், தமிழ்ப் புலவர்களுடைய உள்ளங்களிலே நிலையான நல்லிடத்தைப் பெற்றிருப்பவர்களுமாகிய கருமுத்து தியாகராசச் செட்டியார் அவர்கள். தியாகராசச் செட்டியார் அவர்கள் இளமைக் காலம் முதல் பண்டித மணி அவர்களுடன் நெருங்கிப் பழகியவர். அவர் பண்டித மணி அவர்களுக்குச் செய்த உதவிகள் பல. பண்டித மணியின் அறிவுரைகளைக் கேட்டுத்தான் தாம் மேற்கொள்ளும் தமிழ்த் தொடர்புடைய செயல்களை நிறைவேற்றுவது அவருடைய இயல்பு.

தியாகராசச் செட்டியார் அவர்கள் பண்டித மணியின் இறுதி நாள்வரை அவருடைய இனிய நண்பராக இருந்தார். பண்டித மணியை அடிக்கடி மதுரைக்கு அழைத்து உரையாடுவார்; அறிவுரைகள் வேண்டுவார்; பாடம் கேட்பார்; இடையிடையே மகிபாலன் பட்டிக்கும் வந்து அவரைச் சந்தித்து மகிழ்வார்.

## விஞக்கள்

1. பழநியப்பச் செட்டியாரைப்பற்றி இங்கு அறியக்கிடப்பன யாவை?

2. அண்ணுமலைச் செட்டியாரவர்களுக்கும் பண்டித மணிக்கும் தொடர்பு ஏற்பட்ட வரலாற்றைக் கூறுக.

3. டாஷ்கண்டு சர்வகலாசாலை அரசர் அண்ணுமலை செட்டியாரவர்களுக்கு ஒப்பனையாவது யாங்ஙனம்?

4. தமது அறுபதாம் ஆண்டு விழாவில், அரசர் அண்ணாமலையாரின் வருகையைப் பற்றிப் பண்டித மணியவர்கள் யாது கூறினார்கள்?

5. 'கிரேஸ் எலிஜி' இங்குக் கூறப்படும் இடத்தினை விளக்கியுரைக்க.

6. தியாகராசச் செட்டியாரைப் பற்றி இங்குக் கூறப்படுவதென்ன?

---

# 13. தமிழர் போர்முறை*

வித்துவான் ஜி. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், M.A., B.L.

தமிழில் 'போர்' என்னும் பெயர்ச்சொல் காரண இடுகுறிப் பெயராக வழங்கப்படுகிறது. பிற மொழிகளிற் போரைக் குறிக்கும் பெயர்களுக்குச் சிறப்பாக வேறு ஒரு பொருளும் அமைந்திருப்பதாகத் தெரியவில்லை. தமிழில் 'போர்' என்னும் சொல் 'பொரு' என்னும் வேர்ச்சொல் அடியாகப் பிறந்த பெயர்ச்சொல். 'பொரு' அல்லது 'பொருவுதல்' என்பதற்கு, ஒப்ப, ஒத்திருத்தல் என்று பொருள். அதனால் 'பொருநன்' என்பதற்கு, 'தனக்குப் பிறர் உவமமாவதன்றித் தான் பிறர்க்கு உவமிக்கப்படுவான்', என்று நச்சினார்க்கினியர் உரை எழுதியிருக்கிறார். ஆகவே, 'போர்' என்னும் சொல் ஒத்திருத்தல் என்னும் பொருளைத் தன் அகத்தடக்கி நிற்கிறது. இதிலிருந்து தமிழர்களுடைய போர் முறையைப் பற்றிய ஓர் அரிய செய்தி வெளியாகலாம். தமிழ்மக்கள் ஒத்த திறலுடையாரையும், ஒத்த படையுடையாரையும் எதிர்த்துப் பொருவதே போராகும் என்ற கொள்கையை உடையர். மெலியாரிடை வலியார் வலி என்னுகுவதென்று கடிந்தொதுக்கினார்கள். ஒரு வீரன் போர்க்களத்திற் படை தாங்கிப் போர்த்தினவெடுத்து நின்றான். ஒரு யானை தன்னைச் செலுத்துவோனை இழந்து தனியே நின்றது. யானையைக் கண்டவுடன் வீரனுக்கு அதனோடு போர்புரிய எண்ணம் உண்டாயிற்று. சற்றுத் தீர ஆராயலுற்றான். யானை தன்னந்

---

* இக்கட்டுரை ஆசிரியரவர்களின் இசைவுடன் 'தமிழ் உள்ளம்' என்ற நூலிலிருந்து கொள்ளப்பட்டது.

தனியே உதவி புரிவோரின்றி நின்றது. அதனை ஏறி நடத்தும் மேலாளும் இறந்துபட்டான். தானாகப் போர் புரியும் நினைவின்றிப் பிறனுடைய கட்டுக்கு அடங்கி நிற்பதாகத் தோன்றிற்று. இவ்விதக் காரணங்களால் அவ்வியானையைக் கொல்வது இளிவு என்று அவ்வீரன் கருதினான். இதைத் தவிர, இன்னுமொரு காரணம் அவன் கற்பித்துக் கூறியது விந்தையே. யானைக்குத் துதிக்கை ஒன்றுதானுண்டு. அதனால் அது ஒரு கையை யுடையது. மனிதனுக்கோ இரண்டு கைகள் உள்ளன. ஒரு கையையுடைய விலங்கோடு இரு கைகளையுடைய மனிதன் போர் தொடுக்கலாமா? அதனால், அவ்வீரன் யானையை எறியாது பிழைத்துப் போக விடுகிறான்:—

'தானால் விலங்கால் தனித்தாற் பிறன்வரைத்தால்
யானை யெறிதல் இளிவரவால்—யானை
ஒருகை யுடைய தெறிவலோ யானும்
இருகை சுமந்துவாழ் வேன்.'

இதனால் பொருதற்குரியாரிட மல்லாமல் ஒவ்வாதவ ரோடு பொருவது அறமன்று என்று தமிழர் கண்டிருந் தனர் எனலாம்.

போர்க் களத்தில் வீரர் தம் முகத்தினும் மார்பினும் கொள்ளும் புண்களை 'விழுப் புண்' என்று ஆன்றோர் வழங்குவர். அவ்விதம் விழுப் புண் படாத நாளைப் பிறவாத நாளாகக் கொண்டு தமிழ் வீரர்கள் பேதுறுவர். அரசன் தன் வீரர்களுக்குப் பகைவர்களைக் குறித்துக் காட்டிப் போருக்கு ஏவாமல், காலம் வாய்க்க வில்லை யென்று மடிந்திருப்பானாகில், வீரர்கள் தம்மிற் பொரு தாயினும் சாகலாமென்று ஆர்ப்பரித்துத் தம்முடைய பூரித்த தோள்களைத் தட்டி உடற் கரிப்பர்.

தோயன்மாறன் என்னும் சிற்றரசன் ஈர்ந்தூரை ஆண்டுவந்தான். போரில் அஞ்சாது முனைந்து சென்று பொருபவனாகையால் அவன் மேனியிற் பல இடத்தும் வாளால் அறுக்கப்பட்டுப் புண் ஆறித்

தழும்புகள் நிறைந்து மருந்து வாங்கிக் கொள்ளப்பட்ட மரம் போலக் காணப்படும் அவ்வடுக்களே உடம்பிற்கு அழகு கொடுத்து நின்றன. அவ்வழகும் குற்றமற்ற ஆண்மை நிறைந்த அழகு.

*'இறையுறு விழுமந் தாங்கி யமரகத்
திரும்பு சுவைக்கொண்ட விழுப்புணோய் தீர்ந்து
மருந்துகொள் மரத்தின் வாள்வடு மயங்கி
வடுவின்றி வடிந்த யாக்கையன்.'

(புறநானூறு—180)

இதனால், விழுப்புண் படாத உடம்பைக் குற்றமுடைய தாய், அழகொழிந்த உடம்பென்றே தமிழர் கருதினர் என்பது நன்கு பெறப்படும்.

திருக்கிள்ளி என்பவன் ஒரு சிற்றரசன். போரிற் புறங்கொடாப் பெருந்தகையாளன். அவன் உடம்பு முழுவதும் போரிற் புண்பட்டு ஆறிய தழும்புகள் நிறைந்து அருவருக்கத் தக்க தோற்றமுடையன். ஆனால் தமிழ் மக்கள் அவனைப் பன்மடங்கு புகழ்ந்து போற்றினர். மாடலன் மதுரைக் குமரனார் என்னும் புலவர், ஆசியச் சுவை ததும்ப அவன் புகழைத் தோற்றுவிப்பது மிக்க இன்பம் விளைப்பதாகும். அவர் அவ் வீரனைப் பார்த்து, 'நீ பகைவரை எதிர்த்து அஞ்சாது முன் நிற்பதனால் உடல் எங்கும் படையறுத்த புண்கள் தாங்கிக் கோர உருவத்தனாய் இருக்கிறாய். உனது காட்சி எங்கள் கண்ணுக்கு இனிமை அளிப்பதில்லை. ஆனால் உனது புகழைக் கேட்க எங்கள் காதுக்கு இனிமையாய் இருக்கிறது. உன்னுடைய பகைவர் உன் எதிர் நிற்றற்கு அஞ்சிப் போரில் முதுகு காட்டி ஓடிப் பிழைக்கின்றனர். அதனால் அவர்களது மாசற்ற

*'தன் அரசுக்கு வந்துற்ற போரான் அமைந்த இடும்பைகளைத் தான் பொறுத்து அந்தப் போரின்கண் படைக் கலங்கள் சுவைக்கொண்ட சிறந்த புண்ணாகிய நோய் தீர்ந்து, மருந்து வாங்கிக் கொள்ளப்பட்ட மரம்போல் வாளுற்ற வடு ஒன்றோடொன்று விரவி, ஆண்மைக் குறைபாடின்மையின், வசையின்றி அழகுபெற்ற உடம்புடையன்.'

மேனி வழுவழு வென்று வடுவொன்று மில்லாது கண்ணுக்குப் பார்க்க அழகாயிருக்கின்றது. எங்கள் காதாலேதான் அவர்கள் வசையைக் கேட்க முடிவ தில்லை. ஆனால், உன் பகைவரை எல்லாரும் பழிக்கின்ற னர், உன்னைப் புகழ்கின்றனர். நீ கேள்விக் கினியை; அவர் காட்சிக் கினியர். ஆகையால் நீயும் ஒன்றில் இனியவனாயிருக்கிறாய், அவர்களும் ஒன்றில் இனிய வர்களாயிருக்கிறார்கள். இவ்வித ஒற்றுமை உங்களிடை இருக்கவும், உங்களிடை ஒவ்வாததுதான் எது? பின், எதற்காக மக்கள் உன்னை மட்டும் உயர்த்தி, மற்றும் உன் பகைவரை இழிக்கிறார்கள்?' என்று பழிப்பது போன்று புகழ்ந்து பாடியுள்ளார்.

'நீயே, அமரகாணின் அமர்கடந்தவர்
படைவிலக்கி யெதிர் நிற்றலின்
வாஅள் வாழ்ந்த வடுவாழ் யாக்கையொடு
கேள்விக் கினியை, கட்கின் னாயே;
அவரே, நிற்காணிற் புறங்கொடுத்தலின்
ஊறறியா மெய்யாக்கையொடு
கண்ணுக்கினியர், செவிக்கின்னாரே;
அதனால், நீயுமொன் றினியை அவருமொன் றினியர்;
ஒவ்வா யாவுள? மற்றே வெல்போர்க்
கழல்புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி
நின்னை வியக்குமிவ் வுலகம்! அஃது
என்னோ பெரும? உரைத்திசி னெமக்கே.'

(புறநானூறு —167)

இதனால் போர்வீரருக்குப் புண்ணே பூண்கலம் என் பதும், நம் முன்னோர் விழுப்புண்களை வீறுடன் தம் மேனியிற் புனைந்து வான்புக ழெய்தினர் என்பதும், அதை நம் நாட்டினர் போற்றிப் புகழ்ந்தனர் என்பதும் நன்கு விளங்கும்.

நமது எண் சாண் உடம்பிற்கும் மிகவும் சிறப்பாக விளங்கும் உறுப்பு கண்ணே யாகும். அதில் ஒரு

தூசியோ, துரும்போ, துளியோ அல்லது காற்றில் அலைந்து வீசிவரும் மயிர் நுனியோ பட்டுவிட்டால் அக்கண் என்ன பாடுபடுகிறது! உடல் முழுதும் துடி துடித்துத் துன்புற்று நடுங்குவோம். அவ்வளவு நுண்ணியதாய் இருக்கும் அக்கண்ணை நோக்கி ஒரு வேலாயுதம் பாய்ந்து வந்தாலும் தன் கண்ணிமைகளைச் சற்றே அசைப்பதும் ஒரு வீரனுக்குக் குற்றமாகு மென்று நம் முன்னோர் கொண்டிருந்தனர்.

'விழித்தகண் வேல்கொண் டெறிய
விழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு'

என்பது பொய்யாமொழி யன்றோ!

வீரர்கள் களத்திற் போர் புரியும்பொழுது தமது நலத்தையும் கவனியாது தமது தோழர்களுக்கு வரும் இடுக்கணைத் தடுக்கவே முயன்று நிற்பர். ஒரு வீரன் போரில் நெருக்கமான இடமொன்றில் பொருது நின்றான். போர் முனையில் நின்ற அவனது தோழனைப் பகைவர் சூழ்ந்துகொண்டு பெரும் போர் புரிந்தனர். அவனுக்குத் தான் உடனே சென்று உதவி புரியாவிடில் தோழன் இறந்துவிடுவான் என்பதை வீரன் தெரிந்தான். தான் நின்றதோ போரில் நெருக்கடியான இடம். பகைவர் கூட்டமாய்ச் சூழ்ந்து நெருங்கிப் பொருதனர். அப்பொழுது ஒரு வேலும் தன் வயிற்றினுட் பாய்ந்து குடரும் சரிந்து காலிற்படும்படித் தொங்கிக் கிடந்தது. அவன் அடியெடுத்து நடக்கும்பொழுது சரிந்த குடர் காலிற் பின்னிக்கொண்டு அவன் போக்கிற் கிடையூறு விளைத்தது. இரும்புச் சங்கிலி காலில் மாட்டிய யானை எவ்வாறு நடக்குமோ அதுபோல் நடந்து சென்றான். தன்னை எதிர்த்து மண்டிய பகைவர் பக்கம் நோக்கித் தன் கூரிய வேலை ஓச்சி, 'ஓம்புமின்! ஓம்புமின்!' என்று கூவிக்கொண்டே, தன் உயிரை ஓம்பாது, பகைவர் அஞ்சி ஒதுங்கும்படி கூட்டத்தைப் பிளந்துகொண்டு, கன்றை நினைத்துக் கதறிவரும் பசுவினைப்போல், விரை

வில் தன் தோழனுக்கு உதவியாய்ப் போர் முனைக்குச் சென்றான். எவ்வளவு அழகாக அவ்வீரனின் செயல் இக்கவியில் கூறப்பட்டிருக்கிறது!

'..................................செற்றிய
திணிநிலை[1] யலறக் கூவை போழ்ந்துதன்
வடிமா ணெஃகம் கடிமுகத் தேந்தி
ஓம்புமின் ஓம்புமின் இவணென ஓம்பாது
தொடர்கொள் யானையிற் குடர்கால் தட்பக்
கன்றமர் கறவை மான
முன்சமத் தெதிர்ந்ததன் தோழற்கு வருமே.'

(புறநானூறு—275)

இவ்வித வீரம் செறிந்த தமிழ் மறவர்கள் போரில் முதுகு காட்டி ஓடினோரையும், மயிர் குலைந்தோரையும், ஒத்த படை எடாதோரையும், பெண் பெயர் புனைந்தோரையும், பேடியரையும் எதிர்த்துச் சண்டை செய்யார். ஒரு நாட்டைத் தாக்கிப் போர் தொடுக்குமுன், அந்நாட்டில் வாழ்பவருக்கு, முன் எச்சரிக்கை கொடுத்து, போர்க்குரியரல்லாத அந்தணரையும், மாதரையும், குழந்தைகளையும், பிணியுடையோரையும், தங்களுக்கு ஈமக்கடன் கழிப்பதற்குப் பொன்போற் புதல்வர்ப் பெறாதோரையும் அந்நாட்டை விட்டு ஒதுங்கச் செய்வர். இவ்வித விளம்பரத்தை யறிந்து தாமாகத் தப்பிப் பிழைக்க இயலாத பசுத்திரளைக் களவாடிச் சென்று உயிர் காப்பர். இச்செய்தி, 'ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்' என்னும் புறநானூற்று 9ஆவது பாடலால் நாம் அறியலாம். இதனால் தமிழர்க்கு மறத்தினிடையிலும் அறமே திகழ்ந்த தென்பது நன்கு விளங்கும். இத்தகைய அறப் பண்பும் மறப் பண்பும் வாய்ந்து இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் திகழ்ந்த தமிழ் மிலேச்சர்களோடு, இரவில் அறியாது இன்றுயில் கொள்ளும் பெண்டு பிள்ளைகளின் மேல், விசும்பி னிவர்ந்து குண்டுமாரி பொழியும்

---

[1] திணிநிலை = நெருங்கி யிருந்த சேனையின் நிலை.

இருபதாம் நூற்றுண்டினராகிய நாகரிக மக்களை ஒப்பிட்டு, அறிவாளிகள் உண்மையை யோர்ந்து தெளிவார்களாக.

### வினுக்கள்

1. 'போர்' என்னுஞ் சொல்லினை ஆய்க.

2. போர்த் தினவுடன் யானையைக் கண்ட வீரன் அதனுடன் போர் புரியா தொழிந்த தேன்?

3. 'மருந்துகொள் மரம்' – குறிப்பு எழுதுக.

4. 'நீ கேள்விக் கினியை, அவர் காட்சிக்கினியர்' – இடஞ் சுட்டி விளக்குக.

5. கண்ணிமைகளை அசைப்பதுவும் குற்றமாவது எப்போது?

6. போர்முகத்தில் வீரனெருவன் தன் தோழற்கு உதவச் சென்ற காட்சியினை வரைக.

7. தமிழ் வீரரிடை மறத்தினிடையும் அறமே திகழ்ந்தது என்பதனைப் புலப்படுத்துக.

### பயிற்சி

'தற்காலப் போர் முறையும் முற்காலப் போர் முறையும்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை வரைக.

# 14. வாரணம் பொருத மார்பன்*

டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள்

வாசவன் முதலிய வானவரையும், காலகேயர் முதலிய தானவரையும் வென்று இலங்கை வேந்தன், மூவுலகமும் வணங்கும் முடிமன்னனுக அமைந்தான். எண்திசைப் பாலரையும், தென்றிசைக் கோமானையும், வென்று வீரகேசரியாக விளங்கினுன். இன்னும், உலகினைத் தாங்கும் உரம் வாய்ந்த வேழங்களை எதிர்த்து அவற்றின் வலிய கொம்புகளை உதிர்த்தான். வரையிறத்த வலிமை சான்ற இலங்கை வேந்தனும் வேழமும் வெம்போர் புரிந்த விதத்தினை, வியந்துரைக்கப்போந்த கம்பர்,

* இக்கட்டுரை பேராசியர் அவர்களின் 'வீராமாநகர்' என்னும் நூலிலிருந்து கொள்ளப்பட்டது.

†'தோடுழுதண் தார்வண்டும் திசையானை
மதந்துதைந்த வண்டும் சுற்றி
மாடுழுத நறுங்கலவை வயக்களிற்றின்
சிந்துரத்தைமாறு கொள்ள
கோடுழுத மார்பானை கொலையுழுத
வடிவேலின் கொற்ற மஞ்சித்
தாள்தொழுத பகைவேந்தர் முடியுழுத
தழும்பிருந்த சரணத் தானை'

என்று நிறைந்த மொழிகளாற் புகழ்ந்துரைத்தனர். வேந்தனும் வேழமும் வெம்போர் புரிந்தபொழுது இலங்கை மன்னன் மார்பில் இலங்கிய மாலை மலர்களில் மது வுண்டு களித்த வண்டுகள் வேழத்தின் மதமுண்டு இறுமாந்த வண்டுகளோடு இகல் விளைத்தன. இன்னும் வேழத்தின் மத்தகம் வேந்தன் மார்பில் தாக்கியபொழுது அம்மார்பில் இலங்கிய கலவைச் சாந்தம் களிற்றின் நெற்றியிலும் மத்தகத்திலிட்ட சிந்தூரத்திலகம் மன்னன் மார்பிலும் மாறிப் பதிந்தன. மன்னன் மார்பைப் பிளக்கக் கருதிய வேழத்தின் வலிய கொம்புகள், அரக்கர் கோன் உரத்த மார்பை ஊடுருவிச் செல்ல வலியற்று ஒடிந்து பொடியாக உதிர்ந்தன. வேழத்தின் கொம்பு பதிந்த வடுக்களில் பொன்னும் மணியும் இழைத்து இலங்கேசன் போற்றினன் என்று அவன் வரலாறு கூறுகின்றது.

இங்ஙனம் திசையானைக் கொம்பிறுத்த இலங்கேசன் புயவலியானும் மாண்புற்று விளங்கினன். விண்ணிலே வேகமாகச் சென்ற தன் விமானத்தைத் தடுத்த வெள்ளி மலையைக் கண்ட வேந்தன் வெகுண்டு, அஃது ஈசன் உறையும் எழிலார் குன்றம் என்றும் எண்ணாது, அம்மலையைத் தன் புய வலியாற் பெயர்த்தசைத்தான். அப்பொழுது அம்மலையில் வாழ்ந்த முனிவரும் சித்த

† தண் தார் தோடு உழு வண்டும் – குளிர்ச்சியான மாலையிலுள்ள மலரிதழ்களில் கிண்டி மொய்க்கும் வண்டுகளும். மாடு உழுத – (தன் மார்பாகிய) இடத்தே பூசிய. கொலை உழுத – கொலை செய்யும்படி பாய்ந்து கிளறுகின்ற.

ரும் அசலம் தன் இயல்பழிந்து அசைதலைக் கண்டு அஞ்சினர்கள். இறைவன் பாகத்திலமர்ந்த மங்கையும் நடுங்கித் தலைவனைப் பற்றிக்கொண்டாள். இங்ஙனமாக மலையில் வாழும் மாதவத்தோரெல்லாம் மயங்கக் கண்ட மாதொருபாகன், தன் மாணடிக் கொழுந்தாலூன்றி மலையை மீண்டும் நிலைநிறுத்தினன். ஆயினும் வெள்ளி மாமலையைப் பெயர்த் தசைத்த வீரன் பெருமை மூவுல கினும் பரவிற்று. இராவணன் சபையி லமர்ந்த இசை வல்லார் வேழத்தின் மருப்பொசித்து வெள்ளி மாமலை யெடுத்த வீரன் பெருமையை இசைக் கருவிகளில் அமைத்துப் பாடினர்கள்.

செயற்கரிய செய்த இலங்கேசன் பெருமையை நினைத்தும் பேசியும் அவன் உற்றார் உறவினரனை வரும் இறுமாப்புற்றனர். ஓவியத்தி லெழுத வொண்ணா உருவமைந்த இராமனைக் கண்டு காமுற்று, இயற்கையுருக் கரந்து இன்னுருவம் புனைந்து, அஞ்சொல் இள மஞ்ஞையென அன்னமென வந்த அரக்கியாய சூர்ப்ப நகையை நோக்கி "மாதே! நீ யார்" என்று இராமன் வினவியபொழுது,

'.......................... திக்கின்
மாவெலாம் தொலைத்து
வெள்ளிமாமலை யெடுத்து உலகம் மூன்றும்
காவலான் பின்னை, காமவல்லியாம் கன்னி'

என்று அம்மங்கை தன்னை அறிவிக்கும் திறம் அறிந்து மகிழத் தக்கதாகும். இன்னும் இளைய வீரன் வாளால் மூக்கிழந்து மானமழிந்த மங்கை, துயர் பொறுக்கலாற் ருது அலறும்பொழுது 'அரனிருந்த மலையெடுத்த அண்ணவோ! அண்ணவோ!' என்றும்,

'திசையானை விசைகலங்கச்
செருச்செய்து மருப்பொசித்த
இசையாலே நிறைந்தபுயத்
திராவணவோ, இராவணவோ'

என்றும் தமையனது பெருமையைப் பன்னித் தன் குறையை முறையிடும் தன்மை அறியத் தக்கதாகும்.

இலங்கை மாநகரில் முதல்நாள் நிகழ்ந்த நெடும் போரில் அநுமனும் அரக்கர்கோனும் அரும்போர் விளைத்தார்கள். அடல் ஏறுபோன்ற அரக்கர் கோமானை நோக்கிய அநுமன், 'ஐயனே! வில்லாயுத முதலாய வெம்படைக ளெல்லாம் பயின்றாய்; இருபது புயங்க ளோடியைந்தாய்; ஆயினும் உன் வாளாண்மையும் தோளாண்மையும் என் கையின் ஒரு குத்தால் துடைத்து ஒழிப்பேன்; பின்னும் நீ இறவாதிருப்பின் உன் இருபது கரங்களாலும் என்னைக் குத்துவாய்' என்று வீரமொழி பகர்ந்தான். இலங்கை வேந்தனும் குத்துப் போருக்கிசையவே, வலிமையின் வரம்பு கண்ட மாருதி தன் வயிரக் கரத்தால் அரக்கனது அகன்ற மார்பில் குத்தினான். அநுமன் குத்துக்கு ஆற்றாத அரக்கர் கோன் சண்டமாருதத்தில் அகப்பட்ட மரம்போற் சலித் தான். அது கண்ட வானவர் வியந்து அநுமன்மீது மலர் மாரி சொரிந்து ஆர்த்தார்கள். தானவர் தம் தலைவன் நிலை கண்டு தளர்ந்து வேர்த்தார்கள். ஆயி னும் சிறிது பொழுதில் இலங்கை மன்னன் சிந்தை தெளிந்து அநுமனை அமர்ந்து நோக்கி 'ஐயனே, வலிமை என்பதும் இவ்வுலகில் உளது. அது உன் பாலே அமைந்துளது. அடலமைந்த உனது ஆண் மையை நோக்க ஏனைய வீர ரெல்லாம் அலிகளே யாவர். மலரோனது சாப வலியாலும் சலியாத என்னை உன் கைவலியால் மெலிய வைத்தாய். நீயே என்னை வென் றாய்' என்று தனது எளிமையைக் கரவாது எடுத் துரைத்தான். ஆகவே, மும்மத வேழத்திற்கும் இளை யாத வேந்தன் மார்பு, அனுமன் கரத்திற்கு எளிதா யிற்று. வாரணத்தின் கொம்புகளுக் கிளையாத மார்பு வானவீரன் கரத்திற் கிளைத்துச் சலித்தது.

பின்னர் அமர்க் களத்தில் இலங்கை மன்னனும் இலக்குவனும் எதிர்ப்பட்டார்கள். வில்லெடுக்க உரி

யார் இருவரும் காலனும் கலங்குமாறு நெடும்பொழுது கடும்போர் விளைத்தார்கள். இளைய வீரனை வில்லினால் வெல்ல இயலாதென்றறிந்த இலங்கையர் கோன், மலரோன் அளித்த மந்திர வேலை வேகமாகச் சுழற்றி விடுத்தான். அவ்வேல் மாறாக வந்த அம்புகளை நீறாக்கி வெம்மையோடும் வேகத்தோடும் இளைய வீரன் மார்பிற் பாய்ந்தது. வேலின் வெம்மைக் காற்றாது இளைய வீரன் மயங்கிச் சாய்ந்தான். இளையான் இளைத்தானே யல்லால் இறந்தா னல்லன் என்றறிந்த இராவணன் அவனை இலங்கைக்கு எடுத்துச் செல்ல எண்ணி இருபது கரங்களாலும் அள்ளலுற்றான். ஆயினும் வெள்ளிமாமலை யெடுத்த வீரத் தோள்கள் பொன்மலைபோல் விளங்கிய இளைய வீரனை எடுக்க மிடுக்கிலாது மெலிவுற்றன. இவ்வாறு அரக்கர் கோன் எடுக்க முயன்றதை அறிந்த அநுமன் விரைந்து போந்து இலக்குவனை எடுத்தணைத்து மகவு கொண்டு மரம்புகும் மந்திபோல் இராமன்பால் விரைந்தோடினன். இறைவனது அரும் பெரும் குன்றையும் அசைக்க வல்ல அரக்கர் கோமான், இளையோன் ஆக்கையை எடுக்க இயலாது நின்ற எளிமையையும், அவ்வுடலை எளிதாக எடுத்துச் சென்ற அநுமன் பெருமையையும்,

'எடுக்க லுற்றவன் மேனியை
  ஏந்துதற் கேற்ற
மிடுக்கி லாமையின் இராவணன்
  வெய்துயிர்ப் புற்றான்
இடுக்கி னின்ற அம்மாருதி
  புகுந்தெடுத் தேந்தித்
தடுக்கி லாததோர் விசையினன்
  எழுந்தயல் சார்ந்தான்'

என்னும் இன்கவியால் கவிஞர் நன்கெடுத் திசைத்தனர். ஆகவே, வரையினை யெடுத்த வலிய தோளாண்மை முதல் நாள் நிகழ்ந்த அரும்போரில் எளிமை யெய்திப் பெருமை குன்றி நின்றது.

இங்ஙனம் வாரணம் பொருத மார்பும், வரையினை எடுத்த தோளும், மாற்றார் வீரத்திற் காற்றா தொழிந்த மானத்தால் கவிழ்ந்த தலையோடும் குவிந்த முகத்தோடும் இராவணன் இலங்கைமா நகரை நோக்கிச் சென்றான். எத்திசையும் நோக்காது எவருடனும் பேசாது மண் மகளையே நோக்கிச் சென்ற மன்னன் எளிமை,

'வாரணம் பொருத மார்பும்
  வரையினை எடுத்த தோளும்
நாரத முனிவற் கேற்ப
  நயம்பட உரைத்த நாவும்
தாரணி மௌலி பத்தும்
  சங்கரன் கொடுத்த வாளும்
வீரமும் களத்தே போட்டு
  வெறுங்கையோ டிலங்கை புக்கான்'

என்னும் கவியால் இனிது விளங்குவதாகும். அன்று நிகழ்ந்த அரும்போரில் வேழத்தை வென்ற வீரமார்பம் வானவீரன் கைவலிமைக் காற்றாது தளரவும் வரையினை எடுத்த வயிரத் தோள்கள் இளைய வீரன் உடம்பை எடுக்க வலியற்று வருந்தவும் கண்ட காவலன் கவன்று தன்னையே வெறுத்துச் சென்ற நிலையை இணையற்ற மொழிகளால் எழுதிக் காட்டும் கம்பர் கவிநலம் கண்டு மகிழ்தற்குரிய தாகும்.

வினாக்கள்

1. இலங்கை வேந்தனும் வேழமும் போர் புரிந்தபோது நிகழ்ந்த தென்னை?

2. வெள்ளிமா மலையை இராவணன் பெயர்த் தசைத்த வரலாறு யாது?

3. தமையனின் ஆற்றலில் பெருமை கொண்டவள் சூர்ப்பநகை என்பதனைப் புலப்படுத்துக.

4. மதவேழத்துக்கும் இளையாத இலங்கை மன்னன் மார்பு அனுமன் கரத்திற்கு எளிதாயின வரலாற்றை வரைக.

5. மகவு கொண்டு மரம்புகு மந்திபோல் ஓடியவன் யாவன்? வரலாறு வரைக.

6. 'வெறுங்கையோடு இலங்கை புக்கான்'—இடம் சுட்டுக.

# 15. வாட்போர்*

வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் அவர்கள்

[இளவரசி இன்பவல்லியை மதிவாணன் மணங்கொள்ள ஒழுங்குகள் நடைபெற்றுவிட்டன. ஆனால் இன்பவல்லியின் இதயம் உணராத மாயவன் என்னும் கொடியன் அவளை மணப்பான் கருதினன். அவன் தலைமையில் கயவர் நால்வர் அரண்மனையுட் காந்து புக்கு இரவு நேரத்தில் இன்பவல்லி தூங்கிக்கொண்டிருக்கும்போது அவளை எடுத்துச் செல்லுகின்றனர்.]

நம் மாதரசி இன்பவல்லியை யெடுத்துச் சென்ற கயவர் நால்வரும் அவர்தந் தலைவனிட்ட ஆணை தவறாது வெளியே சென்று அரண்மனை வாயில் கடந்து கீழைத் திசையின்கணுள்ள புதுவர் புகுவாயிலாற் புரிசையையுங் கடந்து போயினர். அங்ஙனம் போய் சிறிது தூரங் கடந்த பின்னர்ப் போருடை தரித்தான் ஒருவன் புரவி மீதேறிப் போந்து அவரைச் செல்லுமாறேயினன். அவருங் கடுகி நடந்தனர். முன்னர் ஒருவன் தீப்பந்தம் பிடித்து வழிகாட்டிச் செல்லாநின்றான். அவ்விரைவில் அவர் சென்ற வழியிலுள்ள மரங்களிடை நிகழ்ந்த சிற்றொலியும், அடுத்த புதர்களிற் சரசரப் பொலியும், காற்றினாலசையுஞ் சருகுகளினொலியும் அடிக்கடியிவர்கள் பேசும் பேச்லொலியுமாகிய இவற்றைத் தவிர்த்து வேறோரோசையையுங் கேட்டற் கிடமில்லை.

அங்ஙனஞ் செல்வுழி வன் காலொன்று முழங்கியெழுந்தது. அவ்வளவில் துயிற் பெருந்தேவியின் திருமடிக் கிடந்து கண்வளர்ந்திருந்த இன்பவல்லி துயிலொழிந் தெழுந்தனள்; எழுந்து தனது படுக்கை அசைந்து சேறல் கண்ணுற்று வெருண்டு ஒன்றுமுணர்கிலளாய்த் திகைத்துச் சிறிது நேரம் வாளாவிருந்தனள். பின்னர் அறிவுகூடி யுறுதிபூண்டு நாற்புறமுஞ் சுற்றிப் பார்த்துத் தன்னிலைமை யிற்றெனத் தெருண்டு தன் பினர்ப் போதருங் குதிரை வீரனை நோக்கி, 'யாரை வீர!

---

*இப்பகுதி 'மதிவாணன்' என்னும் நவீனத்திலிருந்து எடுக்கப்பட்டது. சாஸ்திரியார் அவர்கள் மைந்தர் திரு. இ. எம். கோபாலகிருஷ்ணக்கோன் அவர்களால் வெளியிடப்பட்டது. (மதுரை).

இஃதென்னே! எவ்வயிற் செல்லாநின்றனர் இக்கயவர்? இத்தீயர் என்னேச் சுமந்து சேறல் யாவர தாணே கொண் டோ? ஏனே இருளினேகுதல்? கரவுகொல் களவுகொல்? —ஐய, வீர! நீயுமேன் பேசுகின்றலே? என்னே யின்னண மெடுத்துச் சேறல் நிற்கு முடன்பாடுகொல்லோ? வாய் வாளாமை மேற்கொண்டதேன்? ஓ! என்னே நின் வீரம்! என்னே நின் ஆற்றல்!—தாதாய்! மாவீர வள்ளால்! நின் வயிற் பிறந்த வெற்கு இதுகொலோ போக்கு! ஐயகோ!' என்று கூவத் தலேப்பட்டனள்.

இஃதறிந்த அக்குதிரை வீரன் ஓடிப்போந்து இன்பவல்லியை அணுந்து நோக்கி 'அம்மா! அஞ்சலே, நினது மணவினே கருதியே இச்செயல்' என்றனன்.

இச்சொற்கள் தன் செவிப்படுதலும் இன்பவல்லி 'நன்றே இச்செயல், மிகவும் புதிதுகாண்! இதுகாறும் எவரும் புரிந்திடாச் செயல்!' என்று நகையாடி, 'யாரை நீ?' என்று வினயினள்.

அது கேட்ட மாயவன் 'இச்செயல் நன்ருமாறு பின்னர்க் காண்பை; ஆதலின் இதனே எள்ளற்பாலே யல்லே; என்னே யின்ன னென்று கடிதினிலுணர்வை' என்று விடுத்தனன்.

விடுத்தலும் இச்செயலினேக் குறித்துக் கருதுவான் புக்க இன்ப வல்லி கவலேயங் கடலுண் மூழ்கி அசை வற்றிருந்தனள். மாயவன் வஞ்சங்களுளொன்று முணராத அம்மடவரல் என் செய வல்லள்! சுவற் காவாளரும் துனேவிற் செல்லாநின்றனர். 'அந்தோ நம் முதவி கொண்டே நம்மினத்தினர்க்குத் தீங்கு புரிகின் ருன்காண்; இனி யிப்பதகற்கு உதவுவே மல்லேம்' என்று கருதி நளிர் கங்குலாகிய நங்கையு மேகினள். இத்தீச் செயலுணர்ந்த உலக மாதேவியுங் கீழ்த் திசை யொண்முகஞ் சிவந்தனள். புள்ளெல்லாம் அரற்றின. மரங்களும் கண்ணீர் சொரிந்தழு தாங்கு பனித்துளி

சொரிந்து காற்றிளெலித்தன. திருப்பூவணமும் அணித்தாயிற்று.

அவ்வமயத்தில் இவுளிமேற் கொண்டானோ ரேந்தல் எதிரே போதரக் கண்ட மாயவன் கரவு நெறியொன்று பற்றிக் கடுகத் தலைப்பட்டனன். எதிரே போந்த வீரனும் ஏதோ சிந்தித்துத் தோட் சுமையாளரையேறட்டுப் பார்த்துப் 'பிணங்கொல்' என்றயிர்த்தனன். அது போழ்தின் இன்பவல்லியு மெழுந்தனள். உறவினர்க் காண்பான் முதனாட் பூவணம் போந்து வழிநாட் காலைப் புரவி யிவர்ந்து உலவுறும் மதிவாணனும் அது கண்டு உடனே காலந் தாழ்க்கலன் அத்தீயர்பாற் சென்று 'மேற்சேறலிர், நின்மின்' என்றனன்.

என்றது செவிப்பட்ட மாயவன் தன் குதிரையைத் தூண்டி விரைந்துபோந்து தனது வாளினையுறை கழித்துக் கைப்பிடித்துக்கொண்டு 'இவர்களைத் தகைத்து நிறுத்துவோன் நீகொலோ?' என்று சொல்லி மதிவாணன்மீது பாய்ந்தனன். அங்ஙனம் பாய்ந்த வளவில் அதனை யெதிர்பாராத மதிவாணன் சிறிது பின்னிடைந்து தனது வாள் கைக்கொண்டு முனைந்து நின்றனன். பரியிவர்ந்த வீரர்களிருவர்க்கும் வாட்போர் நிகழத் தொடங்கிற்று.

இருவர் வாட்களும் ஞாயிற்றி னிளங்கதிரிற் சுழற்றப்படுந்தோறும் மின்னி யொளி வீசின. இருவர் புரவிகளும் பின்னும் முன்னும் போவதும் வருவதுமாயிருந்தன; ஒருவரை யொருவர் தாக்கினர்; இருவருங் குறி தவறாது வாளை யோச்சி யெறிந்தனர்; இருவர் வாளெறியும் அவ்வவர் பகைவர் பரிசைகளிற் பட்டனவே யன்றிப் பகைஞர் மேனியிற் பட்டில. இன்னணம் நெடுநேரம் வாட்போர் நடந்தது. இடையில் மாயவன் புரவி காவதத் தூரத்திற்குமேல் நடந்த இளைப்பினாற் சிறிது தளர்ந்தது. அது கண்ட மாயவன் தனது பரியை விட்டிழிந்து மதிவாணன்மீது மீட்டும் பாய்ந்தனன். இதற்குள் மதிவாணனும் தான் புரவி

மீதிருந்தே போர் புரிதல் நேரிதன்றெனக் கருதிப் பரியினின்றிழிந்து நின்றனன். மீட்டுமொரு முறை இருபெரு வீரரும் வாட்போர் பிடித்தனர்.

இன்பவல்லிக்கோ மதிவாணன் குதிரையினின் றிழிந்து போர்புரிதல் அறிவுடைத் தன்றெனப தெண் ணம். என் செய்வாள்? சிறிதுபொழுது வாளாவிருந் தனள். இதற்கிடையில் மாயவன் வெகுளி மீக்கூர்ந்து மதிவாணனுடைய தலை விலா தாள் கைகளினெருங்கே இடையீடின்றிப் பன்முறை வாளெறி கண்டனன். அவ் வமயத்தில் அமைந்த சிந்தையனுகிய மதிவாணன் காலப் போக்கின்றித் தனது உடனலத்தாற் செவ்வி தோன்றத் தாவியும் விலகியும் எழும்பியுங் குதித்தும் கைந் நலங்காட்டித் தன்னைப் பாதுகாத்து நின்றனன்.

இவ்வாறு வெகுநேரமாகப்போர் நிகழ்தல் பொறுக் கலாற்ருத இன்பவல்லி யுற்ற மெய்ப்பாடுகட்கோர் அள வில்லை. தலையையும், கைகளையும் ஏதோ வலிப்புடை யாள்போல் அடிக்கடி சாய்த்தும் அசைத்தும் நின்ற னள்; ஏதோ பேசினள்; முகஞ் சுளித்தனள்; யாக்கை குன்றினள்; தன் விருப்பத்திற்கெதிராக வாட்போர் முடியுங்கொலென் றையுற்றனள். இன்னும் என்னெல் லாமோ பாடுகள் பட்டனள். இவ்வாறு துயருழந்து அலம்வரும் இன்பவல்லி மதிவாணன் மிக்க அபாய நிலையிலுள னென்று கருதிப் பேதுற்றுத் தன் ஆருயிர்க் குரிசிலது புரவி மீதிருந்ததோர் குற்றுடைவாள் கைக் கொடு போந்து மாயவன் தாள்களு ளொன்றை நோக்கி விசையுட னெறிந்தனள். உடனே மாயவனும் இடைக் கால் துணிந்து ஒவென்றலறித் தரைமிசை வீழ்ந்தனன்.

வீழ்ந்த மாயவன் 'என்னை இக்கோலங் கண்டவர் யார்கொலோ?' என்று சொல்லி யெழுந்து திருமினன், திகைத்தனன், மீட்டும் வீழ்ந்தனன். ஐயகோ! யான் 'எனக்கு இன்னுயிரினு மினியள்' எனக் கருதி மகிழ்ந் திருந்த இன்பவல்லியா எனக் கிடரிழைத்தாள்! நன்று! நன்று!!—அந்தோ! இன்பவல்லி! நீ என்னை நோக்கி

'மாயவ! யான் உன்னிடத் தன்பிலன் கண்டாய்' என்று கூறியிருப்பையேற் பேதையேன் இத்துணை இதன்கண் தலையிட்டிருக்க மாட்டேன்காண். என்னழி விற்கு நீயே பெருங்கருவி. நீ யிப்போழ்தத்தில் எனது தாளைத் துணித்ததோரழி வன்று; மற்று இதனுடன் என் நெஞ்சையுந் துணித்தனை; உள்ள முடைந்தேன்; அழி கின்றேன்—ஐய! மதிவாண! இவ்வாறு யான் காலொடிந்து வீழாதிருப்பினும் நின் வாளிற்கு இரையா யிருப்பேன் கண்டாய். நீ இன்பவல்லியுடன் கூடி மணந்து இன்புற்று வாழ்க. யான் சாகின்றேன். இறைவனே! கடவுளே! என் பெருமானே! கணக்கற்ற தீங்கிழைத்த கயவனேற்கு முய்வுண்டோ?' என்று கூறி மூர்ச்சை போயினன். உழை யிருந்தாரனைவரும் ஓவென்று கூவி யழுதனர். நேரமாகவாக மக்கள் கூடி னர். இடையிற் சுவற் காவாளரும் வழிகாட்டியும் யாண்டோ கரந்தோடிவிட்டனர்.

அதன்மேற் குதிரை யேற்றங் கைவந்த இன்ப வல்லி மதிவாணனது கலிமாவின் மேற்கொள்ளலும் மதிவாணன் மாயவன் புரவி மேற்கொண்டு இருவரு மாகப் பூவணம் போயினர். பின்னர் மாலைப் போழ் தத்து வேறு பரிகள் புனையப் பெற்றுப் போதரலும் அவற்றின் மீதேறி நம்பியும் நங்கையும், பலர் புடை சூழ்ந்து ஓடிவர, மதுரையம்பதிக்குட் புகுந்தனர்.

## வினாக்கள்

1. இன்பவல்லி எவ்வாறு கடத்திச் செல்லப்பட்டனள்?

2. மாயவனின் கொடுமைக்கும் இன்பவல்லியின் துயரத்துக்கும் ஆற்றாத இயற்கையின்கண் நிகழ்ந்த அவலச் செயல்கள் யாவை?

3. மதிவாணனுக்கும் மாயவனுக்கும் நடந்த வாட்போரினைப் பற்றிப் பதினைந்து வரிகள் எழுதுக.

4. போரின் முடிவும் விளைவும் என்ன?

5. இடஞ் சுட்டுக:

(அ) 'என் அழிவிற்கு நீயே பெருங்கருவி.'

(இ) 'இச் செயல் நன்றுமாறு பின்னர்க் காண்பை; ஆதலின் இதனை எள்ளற்பாலை யல்லை.'

6. இன்பவல்லி, மாயவன், மதிவாணன்: இவர்களுள் ஒவ்வொருவரைப்பற்றியும் எட்டு வரிகட்கு மேற்படாமல் குணவிசேடம் வரைக.

பயிற்சி

வாட்போரில் மதிவாணன் தோற்றனன் எனக்கொண்டு இக்கதையினை வளர்த்துச் செல்க.

# 16. கிறிஸ்துபெருமான் உவமைத்திறம்

பொன்னு. ஆ. சத்தியசாட்சி

## சொல்லேருழவர்

புலவரைச் சொல்லேருழவர் என்னும் பெயரால் போற்றுகின்றது தமிழகம். தம் தகைமை சான்ற சொற்களையே ஏராகக் கொண்டு மக்களின் மனங்களை உழுது அறப்பயிர் விளைவிக்கும் ஆற்றல் கருதி அவர் சொல்லேருழவ ராயினர். இவ்வகையில் கிறிஸ்து பெருமான் உழவருள் உழவராய் விளங்குகின்றார். 'மறம் வளர்க்கும் களருளத்தை வளம் மலி தண் பணையாக்கி அறம் வளர்க்கும்' அற்புத மொழிகள் நம்பெருமானின் நானுனியில் முனைந்து நின்றன. 'சொல்லுக சொல்லிற் பயனுடைய' என்ற சீரிய இலக்கணத்திற்கு இவரை மீறிய இலக்கியம் இல்லை எனலாம். இருட் குழம்பில் மருண்டிருக்கும் உலகிற்கு ஒளி வழங்கும் அருமைத் திருமணிகள் அவர்பாலிருந்து சொரிந்தன. தூய நறுமணத்தினை அள்ளி வீசிய எழின் மலர்கள் அவர்தம் திருவாய்க்கண் மலர்ந்தன. அவர்தம் மல்லிகைச் சொல்லில் மாமலை மறைந்து கிடந்தது; அழகுச் சொல்லில் அலைகடல் அடங்கிக் கிடந்தது. எளிமையும் இனிமையும், தூய்மையும் வாய்மையும், அருளும் தெருளும் கடவுட் குமரனின் கன்னிச் சொல்லில் பின்னிக் கிடந்தன.

## உவமை முறை

புலனுக்கு எட்டாப் பொருளாய கடவுட் பொருளினைப் புலனுக்கும் புந்திக்கும் எட்டும் வகை செய்வதற்கு, அறிவுக்கு எட்டாத அதீத தத்துவங்களை அறிஞர்க்கும் அல்லாதார்க்கும் எளிய முறையில் தெருட்டுதற்கு, வீட்டுலகச் சிறப்பினை வீதியில் திரிவார்க்கும் விளக்குதற்குக் கிறிஸ்து மூர்த்தி எடுத்தாண்ட முறை உவமை முறையே யாகும். அன்றன்று நம் கண்முன் நடக்கும் சாதாரண நிகழ்ச்சிகளையே உவமைகளாகச் சுட்டிக் காட்டி ஒப்பற்ற உண்மைகளை விளக்கி வைத்தார் நம் உவமை யரசர். மலரிலிருந்து கசிகின்ற தேனில் மகரந்தம் கலந்திருப்பதுபோல அவர்தம் சொற்களில் உவமைகள் கலந்திருந்தன. 'இயேசு சனங்களோடே உவமைகளாகப் பேசினார், உவமைகளினாலே யன்றி, அவர்களோடே பேசவில்லை' என்று சாற்றுகின்றது சத்தியத் திருமறை.

## உவமையும் உருவகமும்

உவமைகள் என்பன ஒப்பிட்டுக் காட்டப்படும் ஒப்பனைகளே ஆம். விளங்காத உண்மைகளை விளக்கிக் காட்ட ஒப்பனைகள் உறுதுணைகளா யமைகின்றன. அவைகள் பேச்சுக்கும் எழுத்துக்கும் அணி செய்து திகழ்கின்றன. அணங்குக்கு அணிகலன்களைப்போன்றன சொல்லுக்கு உவமைகள் என்க. அணிகளுட் சிறந்தது உவமையணியே யாகும். கிறிஸ்துபிரான் உவமைகளின் அழகு அவற்றின் எளிமையிலேதான் கிடக்கின்றது. இனி, உருவகமும் உவமையின் பிறிதொரு உருவே ஆம். உவமை உவமேயம் ஆயனவற்றுள் வேற்றுமை தோன்றாமல் ஒன்றன் தன்மையினைப் பிறிதொன்றற்கு ஏற்றி அமைப்பதே உருவகம் என்க.

'உவமையும் பொருளும் வேற்றுமை யொழித்(து)
ஒன்றென மாட்டினஃ(து) உருவகம் ஆகும்,'

என்கின்றது தண்டியலங்காரம். இதனை மனத்துட் கொண்டு ஏசுபிரானுர் எடுத்தாண்ட உவமைகளுள் ஒன்றிரண்டனை நோக்குவாம்.

வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகள்

அக்காலத்தே யூதர்களுள் சமயக் காப்பாளர்களாக இருந்த பரிசேயர் வேதபாரகர் என்ற கூட்டத்தார்களின் ஒழுக்கம் நம் தூயவர்க்குத் துயர் விளைத்தது. ஊருக்கு உபதேசம் செய்துவிட்டு உள்ளத்தில் கள்ள வொழுக்க முடையவர்களாய் வாழ்ந்தார்கள் அவர்கள். அவர்களை இடித்துரைக்க எண்ணிய இறைமகனுர், 'அந்தோ! வெள்ளை யடிக்கப்பட்ட கல்லறைகளுக்கு ஒப்பாயிருக் கிறீர்கள். அவைகள் புறம்பே அலங்காரமாய்க் காணப் படும். உள்ளேயோ மரித்தவர்களின் எலும்புகளினுலும் சகல அசுத்தத்தினுலும் நிறைந்திருக்கும். அப்படியே நீங்களும், மனுஷருக்கு நீதிமான்களென்று புறம்பே காணப்படுகிறீர்கள். உள்ளத்திலோ மாயத்தினுலும் அக்கிரமத்தினுலும் நிறைந்திருக்கிறீர்கள்' என்று பொருந்தச் சொல்லிப் புதுமுறை தந்தார்.

தூலமும் துரும்பும்

பிறிதொரு சமயம் 'ஏதிலார் குற்றம்போற் தம் குற்றம்' காண்கிலாதார் கருத்தினைத்தெருட்டும் பொருட்டு நம் சொல்லின் செல்வர் ஒரு பொன்னுரை புகன்றனர். 'உன் கண்ணில் பெருந்தூலம் இருக்கையில் உன் சகோதரனை நோக்கி, நான் உன் கண்ணிலிருக்கும் துரும்பை எடுத்துப் போடட்டும் என்று சொல்லுவது எப்படி?' என்று வினவினுர். வித்தகரின் உவமை மத்தகரின் பண்பாட்டைப் படம் பிடித்துக் காட்டி விட்டது. பிறன் குற்றம் துரும்பின் அளவினது! அத்துரும்பை நீக்கத் துணிவான் குற்றம் தூலத்தின் அளவினது! நயந்துரைத்ததோ டல்லாமல் திருந்தா தாரை இங்ஙனம் இடித்துரைத்து நகைக்கு இரையாக் கிப் பிறர்க்கு எச்சரிக்கை நிறுத்தியிருக்கிறுர் நம் சொல்லரசர்.

'எதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு'

என்கின்றது திருக்குறள்.

## கோழியும் குஞ்சுகளும்

இறைவன் தாயன்பு நிறைந்தவன் என்ற உண்மைக்குக் கிறிஸ்துபிரான் அருமை சான்ற ஒப்பனை ஒன்று காட்டினர். பறவைகளுள் கோழி தன் குஞ்சுகளைக் காக்கும் பான்மையினைக் கண்டிலாதார் யார்? தன் குஞ்சுகளைக் கொஞ்சிக் கூப்பிட்டு அவற்றிற்கு இரையைக் காட்டும் பேடையின் அன்பு, நெஞ்சையெலாம் வாரிக் கொள்ளும். கலுழனின் நிழல் தெரிந்தால் போதும்! தன் செல்லக் குழந்தைகளைக் கதறிக் கூப்பிட்டுத் தன் செட்டைகளின் கீழ் காவல் அளித்துக் காக்கும். வேறு பறவையாலோ பிறவற்றாலோ குஞ்சுகளுக்குக் கேடு நெருங்குகிறது என்று கண்டால் அரவுபோல் சீறி அமருக்குச் செல்லும். உண்டியும் உறையுளும் காவலும் அருளி மாற்றானை மடக்கி மக்களைக் காக்கும் கடவுட் செயலும் இத்தகையதே என்பதை எளிய முறையில் எடுத்துக் காட்டினர் இயேசுமூர்த்தி. அன்று அவர் எருசலே நகரை நோக்கிச் சொன்ன பொன்னுரையை இன்று உலகம் தனக்கே பொருத்திப் பார்ப்பதாக. 'எருசலமே, எருசலமே.........கோழி தன் குஞ்சுகளைக் கூட்டிச் சேர்த்துக் கொள்ளும் வண்ணமாக நான் எத்தனைத்தரமோ உன் பிள்ளைகளைக் கூட்டிச் சேர்த்துக் கொள்ள மனங்கொண்டிருந்தேன், உங்களுக்கோ மன மில்லாமற் போயிற்று' என்றார் அவர்.

நிற்க. கிறிஸ்தரசின் உவமைகள் பெரும்பாலும் கதை வடிவாகவே அமைந்தன.

## காணமற்போன ஆடு

நூறு ஆடுகளை உடையவனாக இருந்தனன் ஒரு மேய்ப்பன். ஒரு நாள் ஓர் ஆடு காணமற்போயிற்று. ஓராடுதானே என ஓய்ந்தானிலன். உயிரனைய ஆட்டிற்கு

உற்றது யாதோ எனத் துடித்தனன். காடுகளெங்கும் கடுகி நடந்தான். மலைகள் மருங்கில் தேடி யலைந்தான். ஆட்டினைக் கண்டான்; அணைத்து வந்தான். அயலகத் தார்க்கும் அறிந்தவர்க்கும் நடந்ததைச் சொல்லி நனி மகிழ் கொண்டான். இதுதான் அவர் சொன்ன கதை. கதையா இது! மிகச் சாதாரண நிகழ்ச்சி. ஆயினும் மாபெரும் உண்மையை மனிதர்க்குச் சொல்லும் பெரிய சிறு கதை இது! காணாத ஆட்டைத் தேடித் தேடிக் காடும் மலையும் கடந்து சென்றனன் இடையன். அவனைப்போலவே அன்புச் செயலில் ஈடுபட்டான் ஆண்டவன். நல்லன விலக்கி அல்லன செய்து, அதனால் தன்னை விட்டுப் பிரிந்த மனுக்குலத்தையே நாடி வந்தனன் நாயகன். தன்னுடல் பேணாது, முள்ளும் கல்லும் வருத்துவதுந் தோன்றாது தன் ஆட்டைக் கண்டு பிடித்துக் கட்டி யணைத்து மனையகம் போந்து மகிழ்ச்சி கொண்டனன் இடைக்குல மகன். 'நானே நல்ல மேய்ப்பன்' என்றார் கிறிஸ்து. இந்த மேய்ப்பன் செய்தது என்ன? 'கையயர்ந்து, வாய் புலர்ந்து, கண் ணிருண்டு, காதடைத்து வெய்ய சிலுவை சுமந்தலசி மெய் வருந்தித் துய்ய திருவடிகள் சோர்ந்து நடை தள் ளாடிக்' கொலைமலைக்கு நடந்து சென்று, தன்னரிய திருமேனி பன்னரிய பாடுபட, இருப்பு மூளை உடலைக் கிழித்து உருவ வதைப் புண்டு, உயிரையும் கொடுத்து நந்தமைத் தூக்கி அணைத்து வீடு செலுத்தும் பீடு கொடுத்துக் காத்த கருணை வள்ளலின் செயலினை என் னென்பது! ஓடிய நம்மைத் தேடிய பெம்மானின் அன்பே அன்பு!

### கெட்டு மீண்ட மைந்தன்

உலகில் சொல்லப்பட்ட கதைகளுள் உருக்கமான கதை என இதனைச் சொல்லுவர். செல்வன் ஒரு வனுக்கு மைந்தர் இருவர் இருந்தனர். அவ்விருவருள் இளையவனைப்பற்றிய செய்தியினைமட்டும் இங்கு விரி வாகக் காண்போம். அவ்விளவல் தீயன செய்து தகவில

ளுகித் தந்தைபால் சென்று, 'எனக்குச் சேர வேண்டிய செல்வத்தைப் பிரித்துத் தா' என இரைந்து கேட்டான். பிள்ளை மனம் கல்லெனினும் பெற்ற மனம் பரிவுதானே காட்டும்! நயமாகவும் பயமாகவும் சொன்ன நல்லுரைக ளெல்லாம் கமரிற் கவிழ்த்த பாலாயின. சொத்துப் பிரித் தாயிற்று. தந்தையின் கண்முன் இருக்க விரும்பாத சிறுவன் வளநிதிக் குவியலோடு சேய்மைக்கண் அமைந்த ஒரு தேசம் புகுந்து வாசம் செய்வானுயினன். அந்தோ! பொருந்தாச் சிறுவன் திருந்தா வாழ்வுச்கு இலக்காயினன். சிற்றினம் அஞ்சும் பெருமைதானின் றிச் சிறுமையைச் சுற்றமாக்கி, 'வட்டினும் சூதினும் வான்பொருள் வழங்கி,' பிறன் மனை விழைந்து பேதுற்று மயங்கி,

> 'இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
> திருநீக்கப் பட்டார் தொடர்பு'

என்ற பொய்யாமொழிக்கு இலக்கிய மாயினன். செல்வம் சிறகடித்துச் சென்றுவிட்டது. நாட்டில் நுழைந்த பஞ்சம் இவனை வஞ்சம் தீர்த்துக்கொண்டது. மானம் இவனை விட்டுச் சென்றது; ஈனம் அணைத்துக்கொண் டது. 'அற்ற குளத்தின் அறு நீர்ப்பறவைபோல்' உற்றவரெல்லாம் ஓடி மறைந்தனர். உலைந்த சிறுவன் ஓட்டாண்டியாகி நாட்டில் திரிந்தான். இறுதியில் பன்றிகள் மேய்த்துப் பசிப் பிணி போக்க வாய்ப்புக் கிடைத்தது. அந்தோ கஞ்சிக்குப் பன்றி மேய்க்கும் பானமைய ளுயினன் கட்டழகன்! அப்பன்றிகள் விட்ட மிச்சிலையும் இச்சிக்கும் கீழ்மகனுயினன்!

மலை முகட்டில் தென்றலை நுகர்ந்தவன் நிலை திரிந்து கீழ்மைக்குங் கீழாய சேற்றில் இறங்கி, நாற்றமடித்த போதுதான் 'புத்தி தெளிந்தனன்.' தந்தையை எண்ணி ளுன். தந்தைபால் செல்லத் துணிவு கொண்டான். இனித் தந்தைக்கு மைந்தனுக அல்ல, அவர் பணியாள ருள் ஒருவனுகவேனும் அமைவேன் என்று சொல்லி எழுந்து நடந்தான்.

இப்பால், புத்திரசோகத்தால் நையலுற்ற தகப்பன், மைந்தன் சென்ற வழிமேல் விழி வைத்து, 'திரும்பானே என் செல்வன்' என்று ஏங்கிக் கிடந்தவன், ஒரு நாள் சேய்மைக்கண் தன் செல்வனின் சாயல் தெரிவதைக் கூர்ந்து நோக்கினான். மாடியிலிருந்து இறங்கியோடி, 'என் செல்வத் தோன்றால்! என் அன்புடைத் தோன்றால்!' எனக் கதறி யணைத்து உச்சி மோந்து உள்ளங் குளிர்ந்து கண்ணீர் வார முத்தங்களிட்டான். 'தந்தையே, தெய்வத்துக்கு விரோதமாகவும் உமக்கு முன்பாகவும் பாவஞ் செய்தேன். இனி உமது மகன் என்ற சொல்லுக்கு உரியவனல்லன். நான் உம்முடைய வேலைக்காரருள் ஒருவன்,' என்று அழுது சொல்லத் தலைப்படான் மீண்டவன். திரும்பிய மகனை விரும்பிய தந்தை அவனைப் பன்னீராட்டிப் பட்டுடை உடுத்து, பொன்னும் மணியும் பொருந்தப் புனைந்து, 'இறந்த புதல்வன் மீண்டும் உயிர்பெற்றான்; காணாது போனவன் காணப்பட்டான்; நாட்டாரே வருக', வென ஒருமுகமாகத் திருமுகம் அனுப்பிப் பெருவிருந்து செய்தான்.

இவ்வற்புத உவமைக் கதையை எளிய சொல்லால் சுருங்கச் சொன்னார் இயேசுபிரானார். உலைந்த சிறுவனின் உண்மை நிலையினைக் காட்ட இங்கே சிறிது விரித்துக் கூறப்பட்டது.

அச்சிறுவனையே இவ்வுலகினராகக் கொள்ளுங்கள்; தந்தையைக் கடவுளாகக் கொள்ளுங்கள். இப்போது பொருத்திப் பாருங்கள்! ஆண்டவனை விடுத்து, அறநெறி விலகி மறநெறி பயின்று, கொலையும் பொய்யும் களவும் கள்ளும் சூதும் பிறவும் சுற்றமாய்க் கொண்டு மனுக் குலம் விழுந்தது. பன்றியின் மிச்சிலை நச்சுகின்ற இழிதகைமைக்கு ஒப்ப உலகம் இன்று பாவத்தை இச்சிக்கின்றது. 'புத்தி தெளிந்து' தந்தைபால் தன் முகத்தைத் திருப்புகின்றவன் எவனோ அவனை இறைவர் கட்டி யணைத்துக் கறையறக் கழுவித் தூய்மை

யும் அன்பும் அருளும் பிறவுமாகிய கடவுட் குணங்களால் அலங்கரிக்கிறார்.

இத்தகைய உவமைகளும் உவமைக் கதைகளும் உருவகங்களும் பல இயேசு பிரானால் சொல்லப்பட்டன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு முத்து; முத்துக் குவியல். 'சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம்', 'உழுவார் உலகத் தார்க்கு ஆணி' என்று வயலேருழவர்க்குச் சொல்லப் பட்ட சீரிய மொழிகளை நம் சொல்லேருழவர்க்கும் பொருத்திப் பார்க்கலாமே!

## வினாக்கள்

1. சொல்லேருழவர் என்னும் பெயர் கிறிஸ்துவுக்குப் பொருந்துமா றெங்ஙனம்?

2. கிறிஸ்துவானவர் உவமை முறையினைக் கையாண்டமைக்குக் காரண மென்னை?

3. 'உருவகம்' என்பது என்ன?

4. யூத சமயத் தலைவர்களின் மாயத்தை இயேசுபெருமான் எவ்வாறு இகழ்ந்தார்?

5. 'உன் கண்ணில் பெருந்தூலம் இருக்கையில் உன் சகோதரனை நோக்கி, நான் உன் கண்ணில் இருக்கும் துரும்பை எடுத்துப் போடட்டும் என்று சொல்லுவது எப்படி'—இக்கருத்தினைத் தெளிவாக்குக.

6. கோழியும் குஞ்சுகளும் எதற்கு உவமை காட்டப்பட்டன?

7. 'நானே நல்ல மேய்ப்பன்' எனக் கிறிஸ்து சொன்னதன் கருத்தினைப் புலப்படுத்துக.

8. 'கெட்டுமீண்ட மைந்த'னின் கதையைப் பதினைந்து வரிகளில் எழுதி முடிக்க.

## பயிற்சி

'அன்பு' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை வரைக.

# 17. ஆசிரியர் இரஸ்கின் கற்பித்த ஓர் அறிவுரை

ஜான் இரஸ்கின் — *தமிழாக்கம்: வி. பி. சுப்பிரமணிய முதலியார்*

நமது தமிழ் மொழியில் பாட்டுக்களடங்கிய நூல்கள் மிகுந்தும் உரைநடை நூல்கள் மிகக் குறைந்துமிருக்கின்றன. பண்டை நாளில் சிறந்த உரை நடையெழுதியவர்கள் நச்சினார்க்கினியர், பரிமேலழகர் முதலிய பேர் பெற்ற உரையாசிரியர்களே யாவர். அவர்களுக்கு நெடுங்காலத்துக்குப் பின் திருவாவடுதுறை ஆதீனத்துப் புலவர் பெருமானுன சிவஞான யோகிகள் பல சிறந்த உரைநடை நூல்களெழுதினர். இக்காலத்தில் ஆங்கிலேய மொழியை நம்மவர்கள் பயின்றதனுல் உரைநடை நூல்களின் பயனைச் சிறப்பாகத் தெரிந்து பல உரைநடை நூல்க ளெழுதிவருகின்றனர். ஆனுல், பண்டைக் கால உரைநடை நூல்களோடு ஒரு சிறிது ஒப்பிடத் தக்க இக்காலத்து உரைநடை நூல்கள் மிகச்சிலவே யாகும். ஆங்கிலத்திலோ—இவ்வாறன்றி, முற்காலத்து நூல்களிலும் எவ்வகையிலும் மிகச் சிறந்த உரைநடை நூல்கள் இக்காலத்தில் அளவிலாது பெருகி வருகின்றன. ஆகவே, சில காலத்துக்கு முன் அடிசன்[1] மேக்காலே[2] என்பார் சிலருடைய பேர்களை எடுத்துச் சொல்லி உரைநடை நூலாசிரியர்களுட் சிறந்தவர்களின் அட்டவணையை எளிதாக முடித்து விடுவதுபோல, இப்போதைய ஆங்கில உரைநடை நூலாசிரியர்களுட் சிறந்தவர்கள் இன்னின்னுரென்று கணக்கெடுப்ப தருமை. இப்படிச் சிறந்த உரைநடை நூற்புலவர் மிகுந்த இக்காலத்தில் அவருள் தலைமையானவருள் முதன்மையாளரெனப் பேர் பெற்றவர் ஜான் இரஸ்கின்[3] என்னுந் துரைமகனுர் ஆவர்.

---

இவ்வுரையாடல் திருநெல்வேலி, 'The Educational Society' என்ற அமைப்பின் செயலாளரிடமிருந்து இசைவு பெற்று வெளியிடப் படுகிறது.

[1] Addison. [2] Macaulay. [3] John Ruskin.

அவர் இயற்றியிருக்கிற நூல்கள் ஆங்கிலத்திற் சிறந்த புலமை நிரம்பியவர்களே அரிதாக வுணருந்தன்மை யுடையவைகளாகவும் மிகச் சிறந்த பொருளழகு வாய்ந் தனவாகவு மிருக்கின்றன. அவருடைய நூல்களுள் அணு அறநூல்[1] என்பது ஒன்று. இஃது அவருடைய மற்ற நூல்கள் போலன்றி யாவரும் எளிதாக அறிந்து கொள்ளும்படி வினாவிடையாக எழுதப்பட் டது. இதில் அவர் ஒரு பெண் கல்விச் சாலையிலே[2] தமக்கும் அக் கல்விச் சாலைப் பெண்களுக்கும் நிகழ்ந்த உரையாடலைப் புத்தக வடிவில் எழுதுவதற் கின்றியமையாத சிற்சில வேறுபாடுகளுடன் எழுதியிருக்கின்றார். அதில் பின்வரு வது முதன்மையானதென்று நூலாசிரியரே கூறியிருக் கின்றார். அதில் அவர் குறித்தவர்களெல்லாம் 'நாம் எல்லோரும் பாவிகள், நாம் எப்பொழுதுங் கெட்ட நெஞ்சம் உடையோம்' என்று கொண்டிருக்கும் கொள்கை தப்பென்று மெய்ப்பித்து அக்கொள்கையை விட்டுவிடுவதனு லுண்டாகின்ற பழக்க அறிவிற் கை கூடிய நன்மைகள் இப்படிப்பட்டவைகளென விளக்கு கின்றார்.

சொற்பொழிவாளர்: (ஆசிரியர் இரஸ்கின்) உன் னுடைய மனம் களங்கமற்றதாகவும் உண்மையுள்ளதாக வும் இருந்ததென்று சொல்ல அஞ்சுகின்றாய் அல்லவா?

லூஸில்லா[3]: [ஒரு பெண்] ஆம் ஐயா.

சொற்பொழிவாளர்: நீ அப்படிச் சொல்வதற்குக் காரணம் உன் நெஞ்சு கெட்டது என்றும், அது இடை விடாமல் கெட்டதாகவே இருக்கிற தென்றும் உனக்குக் கற்பிக்கப்பட்டிருப்பதுதான். மக்கள் தங்கள் நெஞ்சம் கெட்டதென்று அடிக்கடி சொல்லிக் கொள்ளுகின்றார் கள். ஆயினும், அவர்கள் சொல்வதை அவர்களே நம்பவில்லையென்று எனக்கு எப்படியோ ஒரு வகையா கத் தோன்றுகின்றது. உண்மையாகவே உன்னெஞ்சு கெட்ட தென்று நீ நம்புகிறாயா?

---

[1]The Ethics of the Dust. [2]Girls' School [3]Lucilla

லூஸில்லா: ஐயா, நான் நம்பவில்லை; ஆனாலும் நம்ப வேண்டு மென்பது என் வேண்டுகோள்.

சொற்பொழிவாளர்: நீ முழுதுங் கெட்ட நெஞ்சுடையவ ளென்றே நம்புகிறாயா?

லூஸில்லா: [கெட்ட நெஞ்சு என்பதற்குப் பதிலாக, முழுதுங் கெட்ட நெஞ்சு என்று சொன்னதைக் கேட்டுச் சிறிது கலக்கமுற்றும் தன் பழமையான சமயப் பற்றைக் கைவிடாமல் மறுமொழி கூறியதாவது] ஆம், ஐயா.

சொற்பொழிவாளர்: [உரையாடலில் உன்னிப்பின்றிப் பராமுகமாயிருந்த வேறொரு பெண்ணைப் பார்த்து] பிளாரி,[1] நீ அலுத்துவிட்டாய். அலுத்த பின் நீ யிங்கிருக்க எனக்கு விருப்ப மில்லை. நாம் உரையாடும்போது நீ பூனைக் குட்டியோடு விளையாடக் கூடாதென்பது உனக்குத் தெரியுமே.

பிளாரி: நான் அலுக்க வில்லை. அதனோடு விளையாடவு மில்லை. அதனைத் தூங்கச் செய்கின்றேன். அது விரைவில் என் மடியில் தூங்கிவிடும்.

சொற்பொழிவாளர்: நில். நான் வரிசையான மயிர்க் கூட்டம் போலிருக்கிற சில மூலப் பொருள்களை[2] உங்களுக்குக் காட்டுகிறேனென்று சொல்லி யிருந்தேனல்லவா? அஃது இப்போது இந்தப் பூனையைப் பார்க்கவே நினைவுக்கு வருகின்றது. இந்தப் பூனை வால் மயிரிலொன்று கொடு.

பிளாரி: [தனக்கு அருமையான பூனையின் மயிரைக் கேட்டதை மனம் பொறுதவளாய்க் களங்கமற்ற முகக் குறியுடன் சொன்னதாவது] பூனையின் மயிரா வேண்டும்!

சொற்பொழிவாளர்: ஆம், ஒரு செம்மயிர் வேண்டும், லூஸில்லா, அந்தப் பூனை பிளாரியின் கைக்கீழ் படுத்திருக்கிறபோது அதன் வால் நுனியிலிருந்து ஒரு மயிரைப் பறித்துக் கொடு.

---

[1]Florrie. [2]Minerals.

லூஸில்லா: ஐயா! அஃது அதற்கு வருத்தஞ் செய்யுமே.

சொற்பொழிவாளர்: அதைப்பற்றி நீ கருத வேண்டா. அந்தப் பூனையைப் பிளாரி பிடித்துக் கொண்டிருக்கும்போது அஃது உன்னைப் புறண்ட மாட்டாது.

லூஸில்லா: அஃது என்னைப் புறண்டாவிட்டாலும் பிளாரியைப் புறண்டி அவளுக்குத் துன்பமுண்டு பண்ணுமே? தங்களுக்குச் செம்மயிர்தானே தேவை? என் தலைமயிர் உதவாதோ?

சொற்பொழிவாளர்: மெய்யாகவே பூனை மயிரைப் பறிப்பதைப் பார்க்கிலும் உன் தலைமயிரைப் பிடுங்க உனக்கு விருப்பந்தானா?

லூஸில்லா: என் தலைமயிர் உதவுமானால் ஐயமில்லாமல் விருப்பந்தான்.

சொற்பொழிவாளர்: நீ அப்படிச் சொல்வது ஒழுங்கன்று.

லூஸில்லா: ஒழுங்கற்றதா?

சொற்பொழிவாளர்: ஆம், நீ முன் சொல்லியபடி உன் மனம் கெட்டதாயிருந்தால் உன் மயிர் ஒன்றை இழப்பதைப் பார்க்கிலும் பூனை மயிர் முழுதும் வாங்கி விடுவா யன்றோ?

லூஸில்லா: ஓ! நான் அந்தக் கருத்தில் கெட்ட நெஞ்சென்று சொல்ல வில்லையே.

சொற்பொழிவாளர்: உன் நெஞ்சிலிருக்கிற உண்மையைச் சொல்லுகிறேன் கேள்; அந்தப் பூனை வாலின் கண் ஓர் ஏனத்தைக் கட்டி அதனை ஓடச் செய்து அதன் பின்னே ஓடி வேட்டையாட நீ விரும்புகிறாய்?

லூஸில்லா: ஐயா, அப்படி நான் ஒரு போதுஞ் செய்யேன்.

சொற்பொழிவாளர்: நீ சொல்வது உண்மையன்று. அஃது உண்மையா யிருத்தல் முடியாது.

லூஸில்லா : உண்மை யன்று!

சொற்பொழிவாளர் : உறுதியாக உண்மை யன்று. நீ முன் சொன்னபடி உண்மை யற்ற நெஞ்சிலிருந்து எப்படி உண்மை வெளிப்படக் கூடும்?

லூஸில்லா : ஐயா, நான் அவ்வாறெண்ணிப் பார்த்து என்னெஞ்சு பொய் நெஞ்சென்று சொல்லவில்லையே.

சொற்பொழிவாளர் : உன்னெஞ்சு கெட்டதாகவும் உண்மையற்றதாகவும் இருப்பதைப்பற்றி நீ கவலைப்படுகின்றாயா?

லூஸில்லா : ஆம். மெய்யாகவே கவலைப் படுகின்றேன்.

சொற்பொழிவாளர் : எங்கே கவலைப்படுகின்றாய்?

லூஸில்லா : எங்கேயா?

சொற்பொழிவாளர் : ஆம்; எங்கே கவலைப்படுகின்றாயென்று கேட்டேன். காலிலே கவலைப்படுகின்றாயா?

லூஸில்லா : [சிரித்துக்கொண்டு] இல்லை.

சொற்பொழிவாளர் : ஆனால், கையில் கவலைப்படுகின்றாயா?

லூஸில்லா : இல்லையையா, நெஞ்சிற் கவலையுறுகின்றேன்.

சொற்பொழிவாளர் : உன்னெஞ்சு ஒழுங்கற்றதாயிருப்பதாக உன்னெஞ்சு கவலைப்படுகின்றது. அப்படியானல் உனக்கு இரண்டு நெஞ்சுகள் இருக்கவேண்டும். அவற்றுள் ஒன்று குறும்பு மிக்கதாயிருக்கின்றது. அதற்காக மற்றொன்று வருத்தப்படுகின்றது. அல்லது உன்னெஞ்சு ஒன்றாயிருந்தால் ஒரு பக்கத்துக்காக மற்றொரு பக்கம் கவலையடைகின்றது.

லூஸில்லா : தாங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லை. தங்கள் கேள்விகளை வேறுயாரிடத்திலாவது கேளுங்கள்.

சொற்பொழிவாளர்: மறு மொழி கூறத் தக்க வேறு பெண்களிருந்தால் அவர்களிடத்திலேயே நான் கேட்டிருப்பேனே. உனக்காக உன் உணர்ச்சிகளை விளக்கிச் சொல்லட்டுமா?

ஹூஸில்லா: ஆ, அது மிகவும் நல்லது. அன்பு கூர்ந்து தாங்கள் அப்படியே செய்யுங்கள்.

சொற்பொழிவாளர்: நான் உணர்ச்சிகளை[1] விளக்குவதாகச் சொன்னேன்; உன் நம்பிக்கைகளை[2] விளக்குவதாகச் சொல்ல வில்லை யென்பதை நீ நினைவில் வைத்துக்கொள். 'நமக்கிருக்கிற தன்மை உள்ளீடல்லாத வெளிப் பகட்டான தன்மையே. அது பிணம் அடங்கிய கல்லறை போல வெளியே தூய்மையாகத் தோன்றி, உள்ளே தூய்மையற்று அழுக்கு நிறைந்திருக்கின்றது. அருமையானதும் நமக்குப் புலப்படாததுமான குற்றமுமிருக்கின்றது. அதனைக் கடவுளே அறிய வல்லவர்' என்று நீயும் உன்போலக் கற்பிக்கப்பட்டவர்களும் நினைக்கின்றீர்கள். (இதைக் கேட்ட பெண்களெல்லாஞ் சரியென்று தலை யசைக்க விரிவுரையாளர் திரும்பவும் பேசுவாராயினர்.)

சொற்பொழிவாளர்: இப்போது சொல்லியபடி உயிர்மட்டும் அன்று, உயிருக்கு[3] அழகின்மையும் அழுக்குண்மையும் உள்ள உட்பக்கமும், அழகும் தூய்மையும் உள்ள வெளிப் பக்கமு மிருப்பதுபோல உடலுக்கும் அத்தன்மையான இருதன்மையும் இருக்கின்றன. அழகிய முகத்துக்குங் கூந்தலுக்கும் உள்ளே யுள்ள மண்டையோடு அழகற்ற தென்று சொல்லவும் வேண்டுமோ?

'நலமாக விருக்கும்போதும் உடம்பின் உள்ளே யுள்ள உறுப்புக்களைப் பார்ப்பது இனிமையாயிராததினல், அவ்வுறுப்புக்கள் நோய்பட்டிருக்கும்போது எவர்தாம் அவைகளைப் பார்க்க விரும்புவார்கள்? அவைகள் நோயுற்ருல் நலப்படுத்த முயல்வது இயற்கை.

[1] Feelings. [2] Beliefs. [3] Soul.

அவ்வாறு முயன்று வேண்டும் பரிகாரஞ் செய்தபின் அவைகளைப்பற்றி நினைத்துக்கொண்டிராமல் மறக்கக் கூடுமானால் எவர் தாம் நினைக்க விரும்புவார்கள்? நினைக்க நினைக்க மனத் துன்பமே யன்றிக் கிடைக்கும் பயன் யாது? ஆயினும், நோய் வந்தால் அதை மறைக்கவாவது நம்பாதிருக்கவாவது வேண்டுமென்று நான் சொல்ல வில்லை. வந்த நோய்க்கு வேண்டும் பரிகாரம் செய்து விட்டுப் பின்பு அதைப்பற்றி நினைத்துப் பாராட்டா திருப்பது நலம்.'

'இப்போது உடல் நோய் சம்பந்தமாகக் கூறிய நன்மதியே உயிர் நோய்க்கும் உரியது ஆகும். உன் னுள்ளே தவறு இருந்தால் அஃது இன்னதென்று தெளிவாகத் தீர்மானிக்க வேண்டும். பின்பு, அறிந்த மட்டில் அதைச் சீர்திருத்தக் கூடிய சூழ்ச்சி ஏதாவதிருந் தால் அச்சூழ்ச்சியைப் பயன்படுத்த வேண்டும். உன் னைப்பற்றி நீ ஆழ்ந்து ஆராயும்போது நீ 'பாவி' என்று ஒருக்காலும் கூறிக்கொள்ளாதே. அது மிக எளிதாகவும் இகழ்ச்சியாகவும் முற்றும் பயனற்றதாகவுமிருக்கின்றது. உனக்கு அதில் படிப்படியாக விருப்பமிருந்து அதைப் பற்றிப் பெருமை பாராட்டுபவளும் ஆகலாம். ஆகை யால் (பாவி என்று பொதுவாகச் சொல்வதை விட்டு) உன்னைப் பொய் சொல்பவள், அச்சமுடைய நெஞ்சினள், சோம்பேறி என்று சொல்லும் அத்தீய இயல்புகள் உன் னிடத்தில் உண்மையாகக் காணப்பட்டால், அவ்வாறு நீ சொல்லிக்கொள். எந்தத் தீய இயல்பு உன்னிடத்தில் திட்டமாக இருப்பதாகக் கண்டுபிடித்து அதற்காக உன் மேல் முறையாகக் குற்றஞ் சுமத்திக்கொண்டாயோ, அத்தீய இயல்பு உன்னை விட்டகலும்படி தக்க முயற் சியை யுறுதியாகச் செய். இவ்வாறு ஒரு குற்றத்தை வரையறை செய்து அதை நீக்க நீ முழு மனத்தோடு சுருசுருப்பாக முயல்வாயானால், இன்னதென்று திட்ட மாகத் தெரியாத ஏதோ ஒரு குற்றமிருப்பதாக நினைத் துப் 'பாவி பாவி' என்று வருந்திப் புலம்புதலினின்றும்

நீங்கிவிடுவாய். குற்றங்களை வேரோடு பிடுங்கிக் களைந்து விடுவது எளிது. நல்லொழுக்க மிகுதியால் அவைகளை அடக்கிவிடுவது அவ்வளவு எளிதன்று. உன் குற்றங்களைப்பற்றி நினையாதே. பிறர் குற்றங்களைக் கனவிலும் எண்ணாதே. நீ சந்திக்கும் ஒவ்வொருவரிடத்தும் எத்தகைய சிறந்த குணமிருக்கிறதென்று தெரிந்து அக்குணத்தை நன்கு மதித்து அதைப்பற்றி எண்ணிப் பார்த்து மகிழ்ந்து, அதை நீயும் உடையவளாக முயல்வாயாக. அவ்வாறு செய்துவந்தால் நாளாவட்டத்தில் உன் குற்றங்கள் பழுத்த இலைகள் இயல்பாகவே உதிர்தல் போல உதிர்ந்தொழிந்துவிடும். நீ உன் சென்ற வாழ்நாட்களைப் பின்னோக்காகப் பார்க்குங்கால், அவைகள் பனைமரம்போலக் குற்றங்களாகிய கரடுமுரடுடையன வாயிருந்தாலும், அவைகள் இப்போது நல்லொழுக்கத்தில் விருத்தியாகி நற்குண நற்செய்கைகளாகிய பயனுடையனவாயிருந்தால், அவ்வாழ்நாட்கள் கரடுமுரடாயிருந்ததைப்பற்றி நீ கவலைப்பட வேண்டியதில்லை. உன்னிடத்தில் மகிழ்வடையக் கூடிய சிறப்புக்களில்லாவிட்டாலும் அவைகள் மற்றவர்களிடத்தில் இருப்பதைக் கண்டு களிப்படைவாயாக,'—

என்று இவ்வாறு இரஸ்கின் ஆசிரியர் தங்களை எப்போதும் 'பாவிகள், கெட்ட நெஞ்சுடையவர்கள்' என்று சொல்லிக்கொள்பவர்கள் தாங்கள் அவ்வாறிருப்பதாகத் தங்கள் குருக்கண்மார் கற்பித்ததை நம்புகின்றார்களே யன்றி உள்ளபடி உணர வில்லை யென்பதைத் திறமை மிக்க உரையாடல் முகமாக விளக்கிக் காட்டி, மக்கள் தங்களிடத்தில் இல்லாத குற்றங்கள் இருப்பதாக நினைத்து உண்மையாக இருக்கிற குற்றங்கள் இன்னின்னவை யென்று கண்டு, அவைகளை நீக்க முயலாது, அறிவீனமாகச் சோம்பியிருப்பது கூடாதென்று வற்புறுத்திக் கூறி, எவரும் தங்களிடத்துள்ள தீய குணங்கள் யாவற்றையும் வேரறக் களைந்து நற்குணங்களெல்லாந் தழைத்தோங்கி வளரச் செய்து நற்பயன்

பெறுவதற்கு ஏற்ற வழிகள் இவை யென்று மேற்கூறிய பழக்க அறிவிற் கைகூடிய நல்லறிவு கற்பித்திருக்கின்ருர்.

ஆங்கிலேய பேரறிஞருட் சிறந்த ஒருவர் தமது நீதி நூலிற் சிறந்ததாகத் தாமே சிறப்பாகக் கூறுயிருக் கிற இப்பகுதியை எவரும் நுனித்தறிந்துகொள்ள வேண்டுமென்பது சொல்லாமலே விளங்கும்.

## வினக்கள்

1. தமிழில் உரைநடை வளர்ச்சியைப் பற்றி ஒரு சிறு குறிப்பு எழுதுக.

2. 'அணு அறநூல்' என்பதனைப் பற்றிக் குறிப்பு வரைக.

3. ஆசிரியர் தம் உரையாடலுள் பூனையைக் கொண்டுவந்த தேன்?

4. உடல் நோயை உயிர் நோய்க்கு இரஸ்கின் ஒப்பனை செய்து பேசு வதை நும் சொந்த சொற்களில் எழுதுக.

5. பழுத்த இலைகள் இயல்பாகவே உதிர்தல் எதற்கு உவமை காட்டப் பட்டதென விளக்குக.

6. இவ்வுரையாடல் வாயிலாக ஆசிரியர் இரஸ்கின் சொல்ல வந்த கருத்து யாது?

## பயிற்சி

1. ஆசிரியர் இரஸ்கினை இப்போது நீ சந்திக்கின்ருய் என வைத்துக் கொள். அவரிடம் இவ்வுரையாடலை யொட்டி என்னென்ன வினவுவாய்?

2. 'அருமையானதும் தமக்குப் புலப்படாததுமான குற்றமுமிருக் கின்றது. அதனைக் கடவுளே அறிய வல்லவர்' என்று நீயும் உன்போலக் கற்பிக்கப்பட்டவர்களும் நினைக்கின்றீர்கள்.

'உன் குற்றங்களைப்பற்றி நினையாதே. பிறர் குற்றங்களைக் கனவிலும் நினையாதே.'—இவ்வாறு ஆசிரியர் கூறும் கருத்துக்களை நீ ஏற்கின்ருயா? விடுகின்ருயா?

3. நாகரிகம், புத்தகக் கல்வி, தொழிற் கல்வி – இவற்றுள் ஏதேனும் ஒன்றனைப் பற்றி ஓர் உரையாடல் எழுது.

# 18. தென்னிந்தியாவின் பழமைக்கான சான்றுகள்*

பன்மொழிப் புலவர் திரு. கா. அப்பாத்துரைப்பிள்ளை அவர்கள்,
எம்.ஏ., எல்.டி.

நிலநூல்களை[1] மேற்போக்காகப் பார்ப்பவர்களுக்குக் கூடச் செடி கொடி வகைகளிலும், உயிர்வகைகளிலும் செழித்து, மனித நாகரிகப் பழமை வகையிலும் மிகச் சிறந்து விளங்குவது நடுக்கோட்டுப் பகுதியே[2] என்பது விளங்கும். இதுவே உயிர் வகைகள் பெருகுதற்கேற்ற தட்பவெப்ப நிலைகளைச் சிறப்பு வகையிற் பெற்றுள்ளது. இப்பகுதிக்கு வடக்கிலும் தெற்கிலும் செல்லச் செல்ல உயிர் வளர்ச்சிக்குப் பல வகைச் செயற்கைத் துணைகள் வேண்டியிருப்பது தெரிய வரும். உயிர்த் திரளின் வகை மிகுதிக்கும், செழித்த வளர்ச்சிக்கும், அழகமைப்பிற்கும், எண்ணிக்கைப் பெருக்கிற்கும் நடுக்கோட்டுப் பகுதியே தலைசிறந்து நிற்கின்றது.

ஸ்விஸ்நாட்டு[3] அறிஞர் ஒருவர் நினைவூட்டுகிற படி, உலகில் மிக வடக்கில் உள்ள நாடுகளில் மரங்கள் ஐந்தடி உயரந்தானும் வளர்வது அரிது. துருவங்க ளண்டைப் பாசிகள்கூட மிக அருமையாகவே காணப் படுகின்றன. ஆனால் நம் தென் இத்தியா போன்ற நடுக் கோட்டுப் பகுதியிலோ நூறு, நூற்றிருபது அடி உயர முள்ள மூங்கில்கூடப் 'புல்' எனப்படுகிறது. 'புறக்கா ழனவே புல்லென மொழிப' என்னும் தொல்காப்பிய உரை காண்க. மற்றும் ஆல மரம் நமக்கு ஒரு மரமே; குளிர்ந்த வடநாட்டினர் அஃது ஒரு காடு எனக் கணிப்ப ராம்.

---

* இஃது ஆசிரியரவர்களின் 'குமரிக் கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு' என்ற நூலிலிருந்து கொள்ளப்பட்டது. உரியோர் இசைவு பெற்றது. 'திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக' வெளியீடு.

[1] Geography. [2] Equatorial Regions. [3] Switzerland.

எனவே, உயிர் வகைகளின் பிறப்பிடம் தென் பகுதியாயிருப்பதே பொருத்த முடையது. நடு ஆசியா, தென் உருசியா, வடதுருவம் இவை ஒரே காலத்து உறைவிடங்களா யிருந்திருத்தல் கூடுமே யன்றி, முத லிடங்களாக இருந்திருக்க முடியா.

மேலும், உலகின் தட்ப வெப்ப நிலைகளைப் பார்த் தாலும் மனிதர் தோற்றம் முதலில் ஏற்பட்டது தென் இந்தியாவிலேயோ அல்லது அதன் அருகிலேயோ தான் என்பது போதரும்.

நிலநூல் கூறுகின்றபடி இம்மண்ணுலகம் ஞாயி ரோடு ஞாயிருய் அதன் பாரிய ஒளிப்பிழம்பின் ஒரு பகுதியாய் இருந்தது. ஞாயிறு தன்னைத்தானே சுற்றும் விரைவினுல் அதனினின்றும் சிதறி வீழ்ந்த திவலை களே கோள்களும் துணைக்கோள்களும் ஆகும். நமது மண் உலகமாகிய கோளும் அத்தகைய ஒரு பிழம்புத் திவலையே யாம்.

முதலில் இதுவும் ஞாயிற்றைப்போன்ற ஆவிப் பிழம்பாகவே இருந்து படிப்படியாகக் கொதித்துருகி நிற்கும் குழம்பாகவும், அதன்பின் ஞாயிற்றைச் சுற்றும் விரைவினுலும், தன்னைத்தானே சுற்றும் விரைவினு லும் மேன்மேலுங் குளிர்ந்து திண்மையான மேல் தோட்டினை உடையதாகவும் மாறிவந்தது.

இங்ஙனம் மாறுவதில் நாம் உற்று நோக்கத் தக்க உண்மை ஒன்றுண்டு. ஒரு பம்பரம் சுழலும்பொழுது அதில் அசையாத பகுதிகள், நடு அச்சு பம்பரத்தைத் துளைக்கும் இடமான உச்சியும் அடிப்பகுதியுமே யாகும். பம்பரத்தின் நடுவட்டமே மிக விரைவாகச் சுழலும். இதுபோலவே உலகிலும் வட தென் துருவப் பகுதிகள் பெரும்பாலும் அசையாமல் தம்மைத் தாமே சுற்றும். நடுக் கோட்டுப் பகுதியே மிக விரைவாகச் சுழலும் இடமாம்.

இக்காரணத்தால் மேல்தோடு குளிரும்போது பிற பகுதிகளைவிட இந்நடுக் கோட்டுப் பகுதியே முன்

கூட்டிக் குளிர்ச்சி அடைந்திருக்க வேண்டும். கொதிக்கின்ற பிழம்பில் உயிர் வகைகள் இருக்க முடியாதல்லவா? எனவே, முதன்முதல் குளிர்ந்து நேரிய தட்பவெப்ப நிலைகளை உடைய இப்பகுதியிலேயே உயிர் வாழ்க்கை தொடங்கி இருத்தல் வேண்டும் என்றுஉய்த்துணர்வதில் தவறென்ன?

இனித் தென் இந்திய மண் இயல்புபற்றி ஞாலநூலர்[1] கூறுவதைப்பார்ப்போம். இவர்களது ஆராய்ச்சியின்படி, தென் இந்தியா இலங்கை இவை பெரும்பாலும் கருங்கற் பாங்காகவே இருக்கின்றன. இவற்றின் பாறைகள் நெருப்பு வண்ணப்பாறை[2] என்ற வகையைச் சேர்ந்தவை. இதுவே முதலில் கொதிக்கிற நெருப்புக் குழம்பாயிருந்து பின் இறுகிய பாறையாகும். எனவே இதில் எத்தகைய உயிர் வகையும் இருப்பதற்கு இடமில்லை.

இதிலிருந்து உயிர் இனங்கள் தோன்றுவதற்கு முன்னைய காலந்தொட்டே, தென் இந்தியா நிலப்பகுதியாக இருந்தது தெளிவாகின்றது.

இதற்கு நேர்மாறாக வட இந்தியா, இமாலயம், பிற ஆசியப் பகுதிகள் இவற்றின் மண் இயல்பையும் பாறை இயல்பையும் பார்த்தால், அவை மிகவும் பிற்பட்டவை என்பது தெளிவாக விளங்குகிறது.

வட இந்தியப் பகுதிகளின் நிலத்தில் எவ்வளவு ஆழந் தோண்டினும் கருங்கல் பாங்கான நிலம் காண்பதரிது. ஏனெனில், அப்பகுதி முழுமையும் உண்மையில் பல்லாயிர ஆண்டுகளாகச் சிந்து கங்கை ஆறுகள் அடித்துக் கொணர்ந்த வண்டல்களால் ஏற்பட்டதே யாகும் என்க. இதனிலும் சற்றுப் பழமையான இமாலயமோ எனில் உலக வரலாற்றின் மிகப் பிந்திய நாள்வரையிற் கடலுள் அமிழ்ந்தே இருந்தது. அதில் இன்றும் காணப்படும் கடற் சிப்பிகளும், நண்டு

[1] Geologists. [2] Igneous Rocks

முதலிய கடலுயிர்களின் எலும்புக் கூடுகளும், சுவடுகளும் இவ்வுண்மைக்குச் சான்று பகர்வனவாம்.

மேலும், இவ்விடங்களின் நில அடுக்குகளில் செடி கொடி வகை உயிர் வகைகளின் சுவடுகள் காணப்படுகின்றன. அவையும் மிகப் பழைய உயிர் வகைகளாக இல்லை. இவற்றிற்கு மாருகத் தென் இந்தியப் பாறைகளின் அடிப் பகுதிகளில் உயிர் வகைக்கே இடமில்லாத கருங்கல் அல்லது நெருப்பு வண்ணக் கல்லே காணப்படுகிற தென்று முன் கூறினேம். அதன் மேற்பகுதிகளில் மிகப் பழைய செடி கொடி வகைகள், உயிர்வகைகள் வளர்ச்சி முறைப்படி காணப்படுகின்றன.

மேலும், திருநெல்வேலிக் கோட்டத்தைச் சேர்ந்த ஆதிச்சநல்லூர் முதலிய இடங்களில் மிகப் பழமையான மனித எலும்புக் கூடுகளும், தலை ஓடுகளும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவற்றை நுணுகி ஆராய்ந்த அறிஞர் இவையே உலகின் மற்றெந்தப் பகுதிகளில் எடுக்கப்பட்ட எலும்புக் கூடுகளையும்விடப் பழமை வாய்ந்தவை என்றும், பெரும்பாலும் இவையே மனிதத் தோற்றத்தின் தொடக்கக் காலத்தைச் சார்ந்தவையாயிருக்கக் கூடுமென்றும் அறிவிக்கின்றனர்.

நில இயல், நிலத்தோற்ற இயல்,[1] ஞால இயல்,[2] ஆவிமண்டல நிலை இயல்[3] இவற்றின் துணைகொண்டும் உய்த்துணர்வு கொண்டும் மிகப் பழமையான காலத்தின் உலகப் படத்தை அறிஞர்கள் பலர் வரைந்து காட்டியுள்ளனர். அதில் சென்ற 150,000 அல்லது 200,000 ஆண்டுகளாகத் தென் இந்தியா, நிலப் பகுதியாக இருந்து வந்திருப்பதாகக் காட்டப்பட்டுள்ளது.

இன்னும் தமிழ் நாட்டின் பழமையைக் காட்ட வரலாற்றுச் சான்றுகளும் பல உள. ஆரியர் வட இந்தியா வந்தது கி.மு. 1500 என்றும், 2000 என்றும், 3000 என்றும் பலவாருக வரலாற்றினர் உரைக்கின்ற

---

[1]Cosmology. [2]Geology. [3]Meteorology.

னர். எப்படியும் திராவிடர் நாகரிகம் இதனினும் பழமையானதாதலின், இது வரலாற்றுக் காலத்திற்கு அப்பாற்பட்ட தென்பதற்கு ஐயமில்லை. அதோடு ஆரியரின் மிகப் பழமையான நூலாகிய இருக்கு வேதம் அவர்கள் இந்தியாவிற்கு வந்தபின், ஏற்பட்டதாதலால் அதற்கும் திராவிட நாகரிகம் முற்பட்ட தென்பது சொல்லாமலே அமையும்.

*

ஆரிய நாகரிகத்தினும் தமிழ் நாகரிகம் பன்னூறு மடங்கு பழமை யுடையது என்பதைச் சேர சோழ பாண்டியராகிய மூவேந்தரது தொடக்கற்ற பழம் பெருமையே காட்டும். திருக்குறளில் பழங்குடி என்னும் தொடரை விளக்குகையில் பரிமேலழகர், 'சேர சோழ பாண்டியரென்றாற்போலப் படைப்புக் காலந்தொட்டு மேம்பட்ட குடி' என்று கூறுவது காண்க.

கி.மு. 1000 ஆண்டுகளுக்கு முன்னதாகக் கூறப்படும் பாரதப் போரில் உதியஞ்சேரலாதன் என்னும் சேர மன்னன் இரு படைக்கும் சோறு வழங்கியதாகப் புறப்பாடல் ஒன்று கூறுகின்றது. இங்ஙனம் பெருஞ் சோறு வழங்கிய காரணத்தால் இவன் பெருஞ் சோற்றுதியன் சேரலாதன் என வழங்கப்பட்டான். இவனைப் பாடிய புலவரான முரஞ்சியூர் முடிநாகராயரும் இவன் காலத்தவராதலின் பாரத காலந் தொட்டே தமிழிற் சிறந்த பாக்கள் இருந்தமை மறுக்க முடியாத உண்மையாகிறது.

### வினாக்கள்

1. பூமியில் பிற பகுதிகளைக் காட்டிலும் நடுக்கோட்டுப் பகுதி எவ்வகையிற் சிறந்தது?

2. நிலநூல் கூறுகின்றபடி இவ்வுலகம் எவ்வாறு உண்டாயிற்றென எழுதுக.

3. நடுக்கோட்டுப் பகுதியிலேயே உயிர் வாழ்க்கை தொடங்கி யிருக்க வேண்டும் என்பதனை நிறுவுக.

4. தென் இந்திய வட இந்திய நிலப் பண்புகளை ஆய்க.

5. முதன்முதல் உயிர்த் தோற்றம் தென்னிந்தியாவிலேதான் இருந்திருத்தல் வேண்டுமென்பதற்குச் சான்றுகள் யாவை?

6. தென்னிந்தியாவின் பழமைக்கான சான்றுகள் இவை என எழுதுக.

7. குறிப்பு வரைக: நெருப்பு வண்ணப்பாறை, ஆதிச்சநல்லூர், பெருஞ்சோற் றுதியன்.

# 19. சித்தர் மருத்துவம்

வித்துவான் ஆர். கன்னியப்ப நாயக்கர்

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்பது நம் நாட்டுப் பண்டைய தமிழறிஞரின் பொன்மொழியாம். இம்முதுரையின் உண்மையை நோயுற்று வருந்தும் மக்கள் நன்கறிவர். மக்களது உடற் பிணிகளைப் போக்க நெடுங்காலத்திற்கு முன்பே தெய்வத் தன்மையுடைய முனிவர்கள், மக்களுக்கு ஏற்படும் பிணிகள், அவற்றை அறியும் முறைகள், அவற்றைப் போக்கும் மருந்துகள், உடல் வன்மையும் நீண்ட ஆயுளும் பெறுதற்குரிய காயகற்பங்கள் முதலியனவற்றை அறிந்து உலகோர்க்குப் பயன்படுமாறு செய்துள்ளனர். தற்காலத்தில் இந்திய நாட்டில் சித்தர் மருத்துவமாகிய தமிழ்நாட்டு மருத்துவமும் ஆயுர்வேத மருத்துவமாகிய வட இந்திய மருத்துவமும், யூனானி மருத்துவமாகிய முகம்மதிய மருத்துவமும், ஆங்கிலேயர் மருத்துவமாகிய அல்லபதியும், ஜெர்மன் மருத்துவமாகிய ஓமியோபதியும் நடைமுறையில் இருந்துவருகின்றன. அவற்றுள் சித்தர் மருத்துவத்தைப்பற்றிச் சிறிது கூறுவோம்.

## சித்தர்கள்

அற்புதச் செயல்களில் வல்லுநர் சித்தர் எனப்படுவர். நம் நாட்டில் சித்தர்கள் பலர் இருந்தனராயினும், குறிப்பாகப் பதினெண் சித்தர்கள் என்ற தொடரே நூல்

களில் பெரும்பாலும் காணப்படுகின்றது. அவர்கள்: அகத்தியர், நந்தீசர், திருமூலர், சட்டநாதர், இடைக் காடர், சண்டிகேசர், இராமதேவர், போகர், சிவ வாக்கியர், கோரக்கர், புண்ணுக்கீசர், மச்சமுனி, பூனைக் கண்ணர், யூகிமுனி, கொங்கணர், வரரிஷி, தேரையர், புலிப்பாணி முனிவர் ஆகியோராவர். இவ்வாறு சித்தர்கள் பதினெண்மரின் பெயர்களைப் பதினெண் சித்தர் நாடி சரித்திரம் என்னும் நூலின் காப்புச் செய்யுள் கூறுகிறது. இவர்களும் பிறரும் மருத்துவம் கூறி யுள்ளனர். இச்சித்தர்களுள் சிலர் வாகடமே யன்றி மணிமந்தரங்களும், தத்துவங்களும் கூறியுள்ளனர்.

### சித்தர் மருத்துவ நூல்கள்

இச்சித்தர்களின் மருத்துவங்கள் யாவும் செய்யுள் நூல்களாகவே யுள்ளன. அவை: அகத்தியர் பன்னீ ராயிரம், அகத்தியர் இரத்தினச் சுருக்கம், போகர் ஏழாயிரம், பதினெண் சித்தர் நாடி சாத்திரம், தேரையர் வைத்தியம், புலிப்பாணி முனிவர் வைத்தியம், பதினெண் சித்தர் மூலிகை விரிவகராதி முதலியனவும் பிறவுமாம். இந்நூல்களுட் சிலவற்றில் ஆங்காங்கு எழுத்துப் பிழைகளும் சொற் பிழைகளும் காணப்படு கின்றன. ஓலையில் எழுதப்பட்டிருந்த செய்யுட்களை அச்சூர்தியில் ஏற்றிய போழ்து, தக்க தமிழ்ப் புலமை மிக்கவர்களைக் கொண்டு ஆயாததன் விளைவே யாகும் இது. இது தமிழ் மருத்துவ முறைக்குற்ற ஒரு பெருங் குறையாகும். பொருளும், அருளுமுடையார் இதைச் சீர்திருத்தும் பணியில் ஈடுபடுவாராயின், அவர் தமிழணங்கிற்குத் தக்கதோர் அணி செய்து அணிந்த பெருமையுறுவர் என்பது திண்ணம்.

சித்தர் மருத்துவத்தில் சிறந்தவர்களாக விளங்கிய சிலர், சித்தர் நூல்களில் தாம் கண்டு கையாண்டவற்றை யும், தம் பழக்கத்தில் இருந்து வந்தவற்றையும், பிறர் வாயிலாக உணர்ந்து தாம் செய்து வந்தவற்றையும் தொகுத்து மருத்துவ நூல்கள் பல இயற்றி யுள்ளனர்.

பிணி யறியும் விதம்

சித்தர்கள் உடற் பிணிகளை நாடிகளாலும், மல மூத்திரங்களாலும், உடற் குறிகளாலும், நோய்க் குணங் களாலும், அளவைகளாலும் அறிந்திருந்தனர். இரத்தக் குழாய் அசையும் விதத்தை யறிந்து அதன் மூலம் நோய் அறிதல் நாடிப் பார்த்தல் எனப்படும். ஆண் களுக்கு வலக்கையிலும் பெண்களுக்கு இடக்கையிலும் நாடி பார்ப்பர். கையைப் பிடித்து, நெட்டை வாங்கி, மணிக்கட்டுக்குமேல் ஆள்காட்டி விரல், நடு விரல், மோதிர விரல் ஆகிய இம்மூன்றையும் வைத் தழுத்த, ஒவ்வொரு விரலிலும் வெவ்வேறு விதமாய் நாடி நடப்பது தெரியும். ஆள்காட்டி விரலால் அறிவது வாத நாடி, நடு விரலால் அறிவது பித்த நாடி, மோதிர விரலால் அறிவது சேத்தும நாடி எனப் படும். வாத, பித்த, சேத்துமங்களின் மிகுதியாலும், குறைவாலும், கலப்பாலும்தான் உடற் பிணிகள் தோன்றுகின்றன. இவ்வாறு நாடியின் மூலம் பிணியறி வதற்குக் குறைந்த அளவு நான்கு ஆண்டுப் பழக்க மாவது வேண்டும். நுண்ணுணர்வுடையார்க் கன்றி நாடி வேறுபாடுகள் தெரிவது அரிதாகும். நாடியறிவதில் மிக்க கைவந்த மருத்துவர், இரண்டு மூன்று ஆண்டு களுக்குப் பின்னர் மரிக்கப் போவதையும் தெற்றெனத் தெளிந்து கூறுவர். மணிக்கட்டுக்கு மேல் நூலைக் கட்டி, அந்நூலைப் பிடித்துப் பார்த்து நாடி பார்த்தறிந்த மருத்துவ நுண்ணறிஞர்களும் நம் நாட்டில் இருந்த தாகச் சிலர் கூறுகின்றனர்.

வாதத்தோர் விழி கறுத்தும், பித்தத்தோர் விழி மஞ்சள் நிறமாயும், சேத்துமத்தோர் விழி வெளுத்தும் இருக்கும். மிக்க பிணியாளனாய் இருக்குமவனைப் பார்க்கும்போது அவனுடைய கண்ணும் பல்லும் கறுத்து, மூச்சுக் காற்று வாயில் ஓடி, வயிறு குளிர்ந் திருக்குமாயின் மருந்து கொடுப்பினும் பயனிராமல் அவன் இறந்துபடுவது உறுதி என்று கூறியுள்ளனர். இதனை,

கண்ணும் பல்லும் தாம்கறுத்துக்
கருது மூச்சு வாய்திறந்து
உண்ணும் வயிற்றில் சேத்துமமூம்
மிகவே யோடித் தானடந்தால்
பண்ணு மருந்து பலியாது
பண்பாய்ச் சுவாசம் மேல்வாங்கும்
மண்ணும் விண்ணும் தானறிய
மரண மாவார் கண்டீரே,

என்னும் செய்யுள் வலியுறுத்தும். இவையும், மற்றும் பிறவும் உடற் குறியால் நோயறிதலாம். பித்தத்தோர் வாய் கசக்கும். அசீரண மந்தம் கொண்டவர்கள் நடந்தால் உடல் அசதியாக இருக்கும். இவை நோய்க் குணத்தால் நோயறிதலாம். மணிக்கட்டின் நான்கு விரற்கடைக்குமேல் ஒரு நூலை அழுந்தாமல் கட்டி, அதன் நீளத்தை அவரவர் விரற்கடைகளால் அளந்து பார்க்க, அது பதிஞெரு விரற்கடைக்குமேல் இருக்கு மாயின் நோயின்றிப் பல்லாண்டுகள் வாழ்வர் என்றும், ஏழு முதல் பத்து விரற்கடைவரை யிருப்பின் நோயால் அவதியுறுவர் என்றும், ஏழு விரற்கடைக்குக் குறைந் திருப்பின் அளவுக்கேற்றவாறு சில ஆண்டுகளிலோ, சில திங்கள்களிலோ இறப்பது உறுதியென்றும் ஆய்ந்து கூறியுள்ளனர். இஃது அளவையால் பிணியறிதலாகும்.

மருந்துகள்

சித்தர் மருத்துவ மருந்து பாஷாணங்களால் ஆனது என்றும், ஆயுர்வேத மருந்து மூலிகைகளால் ஆனது என்றும் சிலர் கூறுப. இது முற்றிலும் தவறாகும். சித்தர் மருத்துவத்தில் மூலிகைகளால் ஆகும் மருந்துகளும் உண்டு; பாஷாணங்களால் ஆகும் மருந்துகளும் உண்டு. பாஷாணங்கள் பிறவிப் பாஷாண மென்றும், வைப்புப் பாஷாண மென்றும் இரு வகைப் படும். காந்தம், கௌரி, சவ்வீரம், தாளகம், அரிதாரம், மனேசிலை முதலியன பிறவிப் பாஷாணங்கள். கோழித்தலை கந்தகம், துத்தம், துருசு, பூரம், இலிங்கம்

முதலியன செயற்கைப் பாஷாணங்கள். இவற்றைத் தக்க பொருள்களால் முறித்தே அவற்றைச் சேர்த்து மருந்து செய்கின்றனர். முறித்த பின்பு உடலுக்குத் தீங்கு விளைவிக்கும் தன்மையை அவை யிழந்து விடுகின்றன. பதினெண் சித்தர் மூலிகை விரிவகராதி, பச்சிலை மூலிகை யகராதி என்ற நூல்கள் இருப்பதே சித்தர் மருத்துவ மருந்துகள் மூலிகைகளாலும் செய்யப் படுவதற்குப் போதிய சான்ருகும்.

சித்தர் மருத்துவத்தில் எண்ணெய், தைலம், குளிகை, சூரணம், கியாழம், இரசாயனம், திராவகம், லேகியம், பற்பம், செந்தூரம், கட்டு, நசியம் முதலிய மருந்துகள் செய்யப்படுகின்றன. இவற்றுள் பற்பம், செந்தூரம், கட்டு முதலியன நூற்றுக் கணக்கான ஆண்டு கள்வரை கெடாமல் இருப்பன வாகும். கட்டு என்பதைக் கட்டு மாத்திரை என்றும் கூறுவர். கட்டு மாத்திரை செய்பவர்கள் இக்காலத்தில் இருக்கின்றனர் என்ருல், அது அத்தி பூத்தது என்று சொல்வதற்கு ஒப்பாகும். இலிங்கம், பூரம் முதலியவற்றை நெருப்பி லிட்டால், அவை உருகி யாதொரு பொருளும் எஞ்சி யிராமல் ஆவியாய்ப் போய்விடும். அத்தகைய பொருள்களை எஃகுப் போன்று உருகும்படி செய்வதே கட்டு மாத்திரை எனப்படும். இவ்வாறு செய்வதற்குச் செய் முறைப் பழக்கமும், நுண்ணறிவோடு கூடிய திறனும் வேண்டும். கட்டு மாத்திரைகள் சுரம் சன்னி முதலியனவற்றைத் தீர்ப்பதில் இணையற்றனவாகும்.

சித்தர் மருத்துவத்தில் இரசமணி என்றொரு மணி செய்யப்படுகிறது. நீர்ப் போன்றுள்ள பாதரசத்தை மூலிகைகளால் இறுகும்படிச் செய்து, சுருக்குக் கொடுத்துக் கெட்டிப்படுத்துகின்றனர். இதனைக் கையில் கட்டிக்கொண்டால், பலவித உடற் பிணிகள் நீங்கும் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இன்னும் பல அரிய சாதனைகளுக்கு இம்மணி உதவும் என்றும் கூறப் பட்டிருக்கிறது. இதனைக் கட்டுவோரும் அருகியே காணப்படுகின்றனர்.

## மூலிகைகள்

சித்தர் மருத்துவத்தில் கையாளப்படும் மூலிகை களுட் சில சிறப்பு வாயந்தவை. நத்தைச் சூரி என்ற மூலிகை அரிய பிணிகளுக்கும் மந்திரத்திற்கும் பயன் படுகின்றது. இதன் அரிய தன்மையை விளக்க இது, 'எத்தைச் சொன்னலும் கேட்கும் நத்தைச் சூரி' என்று புகழ்ந்து சொல்லப்படுகின்றது. சிறு குறிஞ்சா என்ற மூலிகை இனிப்புத் தன்மையை மாற்றுதலை, அதை மென்று துப்பிவிட்டு, வாயில் சர்க்கரையை இடுவதால் அறியலாம் நல்ல பாம்பின் நஞ்சினைப் போக்கப் பூனைவணக்கி யென்னும் மூலிகை ஈடற்றதாக விளங்கு கிறது. சிவகரந்தை என்னும் மூலிகையின் சாறு பாத ரசத்தைக் கெட்டிப்படுத்துகிறது. தங்கம், வெள்ளி, ஈயம் முதலியவற்றைப் பற்பமாகச் செய்யும் மூலிகை களும் இருக்கின்றன. வியக்கத் தகும் ஆற்றலுள்ள மூலிகைகள் இன்னும் எத்தனையோ உள்ளன.

## சத்திர மருத்துவம்

முற்காலத்தில் தமிழ் நாட்டு மருத்துவர் கட்டிகளை அறுத்து ஆற்றிவந்தனர் என்பதற்குச் சான்ருக, இன்னும் நாட்டுப் புறங்களில் சத்திர மருத்துவர்கள் இருப்பதைக் கூறலாம். அவர்கள் அழுகிய தசைகளை நீக்குவதற்குப் பயன்படுத்திய மருந்து மூலாம் எனப் படும். ஆற்றும் மருந்துகளுக்குச் சேர்வை, களிம்பு என்று பெயர். புரையோடிய இரணங்களுக்கு உட் செலுத்தும் மருந்து திரி எனப்படும். இரணங்களைக் கழுவுவதற்கான மருந்துகளும் இருந்தன.

இவ்வளவு சிறந்ததாக இருப்பினும், சித்தர் மருத்துவம் தற்காலத்தில் மதிப்பற்று இருக்கின்றது. ஆங்கிலேயர் நம் நாட்டுக்கு வந்ததிலிருந்து அவர் களுடைய மருத்துவத்தின்மீது நம் நாட்டு மக்கள் கொண்ட புதுமை விருப்பமே நம் நாட்டு மருத்துவத்தை இந்நிலைக்குக் கொண்டுவந்து விட்டது. ஆயினும், நம்

குடியாட்சியில் இந்திய மருத்துவங்களுக்குப் புத்துயிர் அளிக்க வேண்டி, அரசினர் ஆவன செய்து வருகின்றனர். குறிப்பாகச் சென்னை, கீழ்ப்பாக்கத்தில் இந்திய மருத்துவக் கல்லூரி நிறுவி, இந்திய மருத்துவச் சாலைகளும் ஏற்படுத்தியிருப்பதைக் கூறலாம். நாட்டுப் பற்றுள்ள மக்கள் சிலர் மாத, வாரத் தாள்களில் நாட்டு வைத்திய முறைகளை வெளிப்படுத்தி வருகின்றனர். சித்தர் மருத்துவச் சங்கங்கள் ஏற்படுத்தி இம்மருத்துவத்தை முன்னேற்றச் சிலர் முயன்று வருகின்றனர். ஆயினும், இம்மருத்துவம் இன்னும் தாழ் நிலையிலிருந்து விடுபட்டபாடில்லை.

சித்தர் மருத்துவம் மிக்க குறைந்த செலவில் பிணி தீர்க்க வல்லது. சயம், குன்மம், தொழு நோய், மதுமேகம் முதலிய கொடிய நோய்களுக்கும் ஏற்ற மருந்தைக் கொண்டு மிளிர்வது; எளிதில் மருந்து செய்ய வசதியளிப்பது. ஆதலால், நூலாசிரியர்களும், புத்தக வெளியீட்டார்களும், செல்வந்தர்களும் இம்மருத்துவ முன்னேற்றத்தில் ஈடுபட பொது மக்களும் ஒத்துழைப்பாராயின் தமிழ் மருத்துவ நங்கை நடனமாடத் தொடங்கி விடுவாள் என்பது திண்ணமாகும்.

### வினாக்கள்

1. சித்தர்களைப்பற்றித் தெரியுமளவுக்கு உரைக்க.
2. சித்தர்கள் உடற் பிணிகளின் தன்மையினை எவ்வாறு கண்டுபிடித்தார்கள்?
3. உடற் குறியால் நோயறிதலைப்பற்றி இங்குக் கூறப்படுவன யாவை?
4. 'இது முற்றிலும் தவறு' என்று ஆசிரியர் கூறுவதனை விளக்குக.
5. கட்டு அல்லது கட்டு மாத்திரை என்பதுபற்றி இங்குக் கூறப்படுவன யாவை?
6. சில மூலிகைகளைக் குறிப்பிட்டு அவற்றின் சிறப்புக்களையும் கூறுக.
7. இரண சிகிச்சையில் சித்தர் மருத்துவ முறை எவ்வெவ்வாறு பயன்படுகிறது?
8. குறிப்பு வரைக: பதினெண் சித்தர் நாடி சரித்திரம், பாஷாணம், இரசமணி.

# 20. தப்பி ஓடல்—1

ஆசிரியர்: ஹென்றிச் ஹேர்ரர் தமிழாக்கம்: எம். ஏ. அப்பாஸ்

'நீங்கள் துணிகரமாகத்தான் தப்பி ஓடினீர்கள். உங்களுக்கு இருபத்தெட்டு நாட்கள் தண்டனை தர நான் வருந்துகிறேன்.'—முகாமுக்கு நாங்கள் திரும்பி வந்ததும் ஆங்கிலேய படைத் தலைவர் எங்களிடம் இவ்வாறு கூறினர். முப்பத்தெட்டு நாள் உரிமையை அனுபவித்த நான் இப்பொழுது இருபத்தெட்டு நாள் தனிமையை மேற்கொள்ள நேர்ந்தது. என்றாலும் எங்களுடைய துணிச்சல் மிகுந்த முயற்சியை அந்த ஆங்கிலேயர் மெச்சியதால் வழக்கமான கடுமையோடு நான் நடத்தப்பட வில்லை. தண்டனைக் காலம் முடிந்ததும் நாங்கள் மீண்டும் கூடிப் பேசினோம். எனக்கு வேண்டிய ஒத்தாசைகள் செய்வதாகவும், ஆனால் தாம் இனி முயற்சி செய்யப் போவதில்லை என்றும் மார்ச்சஸ் தெரிவித்து விட்டார். காலத்தை வீணாக்காமல், முந்திய அனுபவத்திலிருந்து குறிப்புப் படங்கள் வரைவதிலும் மற்றத் தயாரிப்புக்களிலும் ஈடுபட்டேன். இம்முறை வெற்றி நிச்சயம் என்று நம்பினேன்; தனியாகவே செல்வதென்றும் உறுதி கொண்டேன்.

குளிர்காலம் ஓடிக்கொண்டிருந்தது, 'தப்பி ஓடும் காலம்' மறுமுறை வருவதற்குள் நான் முற்றிலும் தயாராகி விட்டேன். இம்முறை நேலாங் கிராமத்திற்குள் நாடோடி வியாபாரிகள் வந்து குடியேறும் பருவம்

---

இந்தக் கட்டுரையும் இதன் தொடர்ச்சியாக அடுத்து வரும் கட்டுரையும் 'ஜெமினி' பிரசுரமாகிய 'நான் கண்ட திபேத்' என்ற மொழிபெயர்ப்பு நூலிலிருந்து கொள்ளப்பட்டவை. ஹென்றிச் ஹேர்ரர் என்ற ஜெர்மானியர் கடந்த மகா யுத்தத்தின்போது பிரிட்டிஷாரின் போர்க்கைதியாக இந்தியாவில் ஒரு முகாமில் அடைக்கப்பட்டிருந்தார். தப்பிச் செல்லும் முயற்சியில் மீண்டும் மீண்டும் பிடிபட்டும் இறுதியில் வெற்றி பெற்று, திபேத்துக்கு ஓடி, லாசாவில் லாமாவின் அன்பைப் பெற்றவர் இவர். ஒருமுறை தப்பியோடிப் பிடிக்கப்பட்டு மீண்டும் தப்பியோடிய அவர் வெற்றியுடன் தப்பிச் சென்ற வரலாற்றை அவரே இக்கட்டுரையில் கூறுகிறார்.

ஆரம்பிப்பதற்கு முன்பே அதைக் கடந்துவிட வேண்டும் என்று எண்ணி, சிறிது முன் கூட்டியே புறப்பட ஆயத்தமானேன். இந்தியனிடம் நான் விட்டு வந்த பயணப்பை மீண்டும் கிடைக்கும் என்பதில் எனக்கு அவ்வளவாக நம்பிக்கை இல்லாதிருந்ததால் புதிதாகவே யாவற்றையும் சேகரித்திருந்தேன். உள்ளத்தைத் தொடும் தோழமை யுணர்ச்சியுடன் மற்றக் கைதிகளெல்லாம், தங்கள் சிரமத்தையும் ஒரு பொருட்டாக மதிக்காமல், எனக்கு வேண்டிய உடைகளுக்கும் கருவிகளுக்கும் தாராளமாகப் பணவுதவி செய்தனர்.

ரால்ப் மேக்னர், ஹெய்ன்ஸ் வான் ஹேவ் இருவரும் கூட இதே திட்டந்தான் தீட்டிக்கொண்டிருந்தார்கள். அவர்களிருவருக்கும் ஆங்கிலம் நன்கு பேச வருமாதலால் அவர்கள் இந்தியா வழியாக, பர்மா எல்லைக்குள் சென்றுவிடத் திட்டமிட்டிருந்தார்கள். இன்னும் மூன்று நான்கு பேர் கூட இதேபோல் தப்பியோட எண்ணிக்கொண்டிருந்தார்கள். கடைசியில் நாங்கள் ஏழு பேரும் ஒன்றுகூடி, ஒரே நேரத்தில் கிளம்புவதென்று தீர்மானித்தோம். ஒவ்வொருவராகக் கிளம்பினால் அதிகாரிகள் விழித்துக்கொள்வார்களல்லவா? பீட்டர் அவுப்ஷினெட்டரும் டிரைப்பிளும் ஹன்ஸ்காப், சாடலர் ஆகியவர்களும் என்னைப்போல் திபெத்திற்குள் செல்லவே விரும்பினர்.

எங்கள் விதியை நிர்ணயிக்கும் நேரம் 1944 ஏப்ரல் 29 பிற்பகல் 2 மணி என்று தீர்மானிக்கப்பட்டது. முட்கம்பி வேலியைச் செப்பனிடும் குழுவினரைப்போல் வேடம் அணிந்துகொள்வதுதான் எங்கள் திட்டம். அத்தகையோர் கூட்டம் கூட்டமாக வேலை செய்வது அன்றாடகக் காட்சி யாதலால் யாருக்கும் ஐயம் எழாது. பல இந்தியத் தொழிலாளர்களுக்கு ஓர் ஆங்கிலேய மேற்பார்வையாளர் இருப்பதுதான் வழக்கம்.

குறிக்கப்பட்ட நேரத்தில் எல்லோரும் ஒரு குடிசையில் கூடினோம். அதுதான் மிகக் குறைவாகக் கண்காணிக்

கப்படும் வேலிப்பகுதி. எங்கள் ஒப்பனை நிபுணர்கள் எங்களை இந்தியர்களாகச் சோடித்து விட்டார்கள். தலையை மொட்டையடித்துத் தலைப்பாகை அணிந்து கொண்டோம். அவ்வளவு ஆபத்தான சூழ்நிலையில் கூட ஒருவரை ஒருவர் பார்த்ததும் எங்களால் சிரிப்பை அடக்க முடியவில்லை. ஹவேயும் மேக்னரும் ஆங்கி லேய மேற்பார்வையினரைப்போல் உடை யணிந்து கொண்டனர். இரண்டு பேர் ஓர் ஏணியைத் தூக்கிக் கொண்டனர். அது முந்திய நாளிரவே அங்குக் கடத்தி வைக்கப்பட்டிருந்தது. ஒரு நீண்ட முட் கம்பி வளையம் ஒன்றை ஒரு கழியில் தொங்கவிட்டுக் கொண்டோம். முட் கம்பி வேலியைச் செப்பனிடுவதற்குப் பதிலாக அதை ஓரிடத்தில் வெட்டி அதன் வழியாக ஒவ்வொரு வராய் நழுவிச் சென்றோம். பெரிய வாசலில் நின்ற காவற்காரர்களுக்கு எவ்வித ஐயம் எழுவதற்கும் இட மளிக்காமல் கச்சிதமாக வெளியேறி விட்டோம். காவற் காரர்களின் கண்களிலிருந்து மறைந்ததுதான் தாமதம்; பரபர வென்று ஒப்பனையைக் கலைத்து விட்டோம். வேட்டியின் கீழே அணிந்திருந்த காக்கி நிறக் கட்டைக் கால் சட்டையுடன், ஒரு சில வார்த்தைகளால் ஒருவர்க் கொருவர் பிரியா விடை கூறிவிட்டுப் பல திக்குகளிலும் சிதறி ஓடினோம். என்னோடு ஹவேயும் மேக்னரும் ஓடி வந்தார்கள். சில மைல்களுக்கப்பால் அவர்களும் பிரிந்து சென்றுவிட்டார்கள்.

பழைய பாதையிலேயே எவ்வளவு என்னால் முடிந்ததோ அவ்வளவு வேகமாக ஓடினேன். இம் முறை நான் எந்த நச்சுப் பரீட்சைக்கும் தயாராயில்லை. இம்முறை இரவில் மட்டும்தான் நடப்பது, பகலில் கட்டாயம் ஒளிந்திருந்து ஓய்வெடுப்பது என்று உறுதி கூறிக்கொண்டேன். முதல் இரவில் அக்லார் ஆற்றை நான் நாற்பது இடங்களில் கடந்தேன். முந்திய தடவை நான்கு நாட்களுக்குப் பிறகு நான் தங்கியிருந்த இடத் திற்கு இந்தத் தடவை ஒரே இரவில் நடந்து விட்டேன்!

இரண்டு செங்குத்தான பாறைகளுக்கிடையில் பதுங்கி யிருந்தேன். ஆனால் நான் மூட்டையை அவிழ்த்தேனே இல்லையோ வாலில்லாக் குரங்குகளின் கூட்டம் ஒன்று அங்கு வந்தது. என்னைக் கண்டதும் அவை கற்களை எடுத்து எறிந்தன. அவைகள் எழுப்பிய கூச்சலில் ஆற்றங் கரையில் ஓடிவந்த முப்பது இந்தியர்களை நான் கவனிக்கத் தவறிவிட்டேன். அவர்களோ எனக்கு மிகமிக அருகில் வந்துவிட்டார்கள். அவர்கள் மீன் பிடிப்பவர்களா அல்லது தப்பி ஓடிய கைதிகளைத் தேடு பவர்களா என்பதும் எனக்குத் தெரியாது. ஆனால் அவர்கள் என்னைக் கவனியாமல் சென்றதைத்தான் என்னால் நம்பவே முடிய வில்லை. எனினும் அதை ஓர் எச்சரிக்கையாக எடுத்துக்கொண்டு கவனமாகப் பதுங்கி இருந்தேன்.

மீண்டும் அக்லார் நதிக்கரை வழியே நடந்தேன். மறுநாள் மாலை சற்று நேரத்தோடு புறப்பட்டேன். தண்ணீர் சுனை ஒன்றன் அருகில் நின்றுகொண்டிருந்த ஓர் இந்திய மாது என்னைக் கண்டு அருண்டோடினாள். அவள் கூச்சலைக் கேட்டு வேறு யாரும் வந்து விடுவார் களோ என்று நான் பயந்து விட்டேன். வழியை விட்டு விலகி ஓடியதால் எதிரே நின்ற 10,000 அடி உயரம் உள்ள நங்கா தீப மலையைக் கடக்க வேண்டியிருந்தது. பல மணி நேரம் வீணாயிற்று. ஆள் நடமாட்டமற்ற அதன் உச்சியிலுள்ள அடர்ந்த காட்டில் ஒரு சிறுத்தைப் புலி என்னை எதிர்நோக்கியது. என் உயிரே போய் விட்டது. என் செய்வேன், என்னிடமிருந்த தெல்லாம் ஒரு சிறிய கத்திதான். பதினைந்தடி உயரமுள்ள ஒரு மரத்தின்மேல் அஃது என்மேல் பாய்வதற்குத் தயாராய் இருப்பதுபோல உட்கார்ந்திருந்தது. வருவது வரட்டும் என்று திட மனத்தோடு என் வழியே நடந்தேன். ஒன்றும் நடக்க வில்லை.

சிறிது தூரம்தான் நடந்திருந்தேன். அதற்குள் இன்னொரு வியப்புக் காத்திருந்தது. பாதையின் நடு

வில் சிலர் படுத்துக் குறட்டைவிட்டுக் கொண்டிருந்தார் கள்—பீட்டர் அவுப்சினேட்டரும் அவருடைய மூன்று கூட்டாளிகளும்! அவர்களைக் குலுக்கி எழுப்பினேன். மறைவிடம் ஒன்றிலமர்ந்து வழியில் நடந்தவைகளைப் பற்றிப் பேசி உல்லாசமாய் இருந்தோம். அவர்களோடு மகிழ்ச்சிகரமாகப் பொழுது போக்கிய பின் அவர் களைப் பிரிந்து தனி வழி நடப்பது எனக்குச் சங்கடமாய் இருந்தது. ஆனாலும் என்னுடைய திட்டத்தை மாற்ற மல் தனியே நடந்து அன்றிரவு கங்கையை அடைந் தேன்.

நான் முன்பே குறிப்பிட்டுள்ள வடக்குக் காசி என்ற கோயில் நகரத்தில் இரண்டு பேர் என்னைத் துரத்திக்கொண்டு வரவே நான் உயிருக்காக ஓட வேண்டியதாயிற்று. மேட்டிலும், பள்ளத்திலும், செடி யிலும், புதரிலும் ஓடி கங்கைக் கரையில் கற்பாறை களுக்கிடையில் ஒளிந்திருந்து தப்பினேன். மீதிப் பாதை எனக்கு நன்கு பழக்கமானது. எனவே சுமை யின் பளுவையும் மறந்து உற்சாகமாக நடந்தேன்.

ஒருவகையாக என் இந்திய நண்பனின் பண்ணை வீட்டிற்கு வந்து சேர்ந்தேன்—முந்திய தடவை என்னு டைய பணத்தையும், சாமான்களையும் ஒப்படைத்தேனே, அந்த இந்திய நண்பனிடம். அது மே மாதம். இம் மாதத்தில் ஏதாவது ஒரு நாள் நள்ளிரவில் அவன் என்னை எதிர்பார்க்க வேண்டுமென்றுதான் சென்ற ஆண்டு பேசி முடித்திருந்தோம். இதற்குள் ஆசாமி எப்படி மாறியிருப்பானே என்ற ஐயப்பாட்டுடன் எனது பயணப் பையை ஓரிடத்தில் மறைத்து வைத்துவிட் டேன். முழு நிலவு காய்ந்துகொண்டிருந்தது. நான் சுவர் நிழலில் மறைந்து நின்று அந்த நண்பனின் பெயரைச் சொல்லி மெல்ல அழைத்தேன். உடனே கதவைத் திறந்துகொண்டு சாடிவந்து தரையில் விழுந்து என் கால்களை முத்தமிட்டான் அந்த உத்தம நண்பன். மகிழ்ச்சிக் கண்ணீர் மளமளவென்று அவன் கண்களில்

வழிந்தோடியது. பூட்டிக் கிடந்த ஓர் அறையைத் திறந்து என்னை இட்டுச் சென்றான். பந்தம் ஒன்றைக் கொளுத்தினான். ஒரு பெரிய மரப் பெட்டியைத் திறந்தான். உள்ளே ஒரு சாக்குக்குள் போட்டுக் கட்டப்பட்டு என்னுடைய பொருட்கள் அத்தனையும் அப்படியே இருக்கக் கண்டு நான் வியப்பும் களிப்பும் ஒருங்கே எய்தினேன். அந்த நாணய மிக்க நண்பன் அளித்த நல்விருந்து வானமுதாய் இருந்தது. அவன் மூலம் எனக்கு வேண்டிய உணவுப் பொருட்களும் மயிர்க் கம்பளி ஒன்றும் சேகரித்துக் கொண்டேன். அவனுக்குத் தகுந்தபடி பரிசளித்தேன். அவனும் கையினால் பின்னிய பனிச் சட்டைகளும் ஒரு போர்வையும் எனக்கு அன்பளிப்பாகத் தந்தான்.

மறு நாளிரவு என் பயணத்தைத் தொடர்ந்தேன். நண்பனும் வெகு தொலைவு வந்து வழியனுப்பினான். அன்பு கெழுமிய நண்பனின் பிரிவு என் அடிமனத்தை என்னவோ செய்தது. என்றாலும் பிரிந்தேன்; வழி நடந்தேன். அன்று நள்ளிரவுக்குச் சிறிது பின்னர் என் பாதையின் நடுவில் கரடி ஒன்று பின்னங் கால்களில் நின்றுகொண்டு என்னைப் பார்த்து உறுமியது. என்னுடைய நாட்டுப்புற ஈட்டியை அதன் நெஞ்சுக்கு நேராக நீட்டிப் பிடித்துக் கொண்டு என் கண்களை அதன்மீது பதிய வைத்துக் கொண்டே பின்வாங்கி நடந்தேன். ஒரு மூலை திரும்பியதும் நெருப்பு மூட்டிக் கொள்ளிக்கம்பு ஒன்றை எனக்கு முன்னால் சுழற்றியபடி மீண்டும் அங்குச் சென்றேன். ஆனால் கரடி முன்பே அங்கிருந்து போய்விட்டிருந்தது. கரடிகள் பகலில் தான் கொடியவைகள் என்றும் இரவில் யாரையும் தாக்குவதற்கு அஞ்சும் என்றும் பின்னர் திபேத்திய குடியானவர்களிடமிருந்து கேள்விப்பட்டேன்.

இம்முறை நான் புறப்பட்டுப் பத்து நாட்கள் ஆகியிருந்தன. அப்பொழுது நான் நெலாங் கிராமத்தை யடைந்திருந்தேன். இங்குத்தானே சென்ற ஆண்டில்

விதி சதி செய்தது. இந்த முறை நான் ஒரு மாதம் முன்னதாகவே வந்து விட்ட படியால் இங்கு இன்னும் நாடோடி வியாபாரிகள் வந்து குடியேறியிருக்க வில்லை. ஆனால் முகாமிலிருந்து என்னோடு வெளியேறிய மற்ற நான்கு நண்பர்களையும் அங்குக் கண்டதும் அளவற்ற மகிழ்ச்சி யடைந்தேன். சேட்லருக்கு மலை நோய் பிடித் திருந்தது. தாம் திரும்பிவிடப் போவதாகவும் ஆனால், நாங்கள் பாதுகாப்பான இடத்தை அடையும்பொருட்டு இரண்டு நாட்கள் தாமதித்தே தம்மை ஒப்புக்கொடுக்கப் போவதாகவும் வாக்களித்தார். இதற்கு முன்னால் ஒரு தடவை மற்போர் வீரரான கிரேமரோடு திபேத்திற்குள் நுழைந்து அனுபவம் அடைந்திருந்த கோப் என்னோடு வருவதாகக் கூறினார்.

இந்திய-திபேத்திய எல்லையாக விளங்கும் மலை யிடை வெளியை அடைவதற்குள் ஏழு நாட்கள் நடந் தோம். அவுப் சினேட்டரும் நானும் 18,000 அடி உயரமான மலை உச்சியிலிருந்து முதன் முதலாகத் திபேத்தைக் கண்ணால் கண்டோம், மீண்டும் திருப்பணிக் குத் திரும்பினோம். நாங்கள் தேடியலைந்த கணவாய் அங்கிருந்து கல்லெறி தொலைவில்தானிருந்தது. வழி தவறியதால் மூன்று நாட்கள் பிந்தி விட்டோம். உணவுப் பொருட்கள் கரைந்து விட்டன. அங்கிருந்து கங்கை யின் கிளை ஒன்றன் வழியே சென்றோம். மலை ஆடுகளின் மந்தை ஒன்று எங்களைக் கடந்து மின்னென மறைந்தது. அந்தோ எங்கள் வயிறு எப்படிக் கெஞ்சியது அந்த ஆடுகளுக்காக! அந்த மலையிடை வெளியின் அடிவாரத் தில்தான் நாங்கள் கடைசி முறையாக இந்திய எல்லை யில் தங்கியிருந்தோம். குளிரின் கொடுமையும் ஊதல் காற்றும் உடலைத் துளைத்தன.

வினாக்கள்

1. ஹேர்ரர் முதலியவர்கள் கைதிகள் முகாமலிருந்து எவ்வாறு தப்பிச் சென்றார்கள்?

2. ஹேர்ரர் தப்பியோடிக்கொண்டிருந்தபோது வாலில்லாக் குரங்கு கள், காடி ஆகியவற்றால் ஏற்பட்ட இடர்ப்பாடுகளைக் கூறுக.

3. இந்திய நண்பனின் பெருந்தகைமையைப்பற்றி யுரைக்க.

4. நெலாங்கில் நடந்த நிகழ்ச்சிகள் யாவை?

5. நங்காதீப மலை, வடக்குக் காசி: குறிப்புரைகள் வரைக.

# 21. தப்பி ஓடல்—2

கடைசியில், 1944, மே, 17ஆம் நாளில் நாங்கள் திசாங்க்ஷோக்லா என்ற கணவாயின் உச்சியில் நின்ரேம். அதன் உயரம் 17,200 அடி. இதோ! பல நாட்கள் நாங்கள் கனவு கண்ட திபேத்திய எல்லை! பாதுகாப்புக் கிடைத்துவிட்டதன் முதல் மகிழ்ச்சி எங்களுக்கு இங்குத்தான் ஏற்பட்டது. எங்கள் இலட்சிய நாடாகிய திபேத் எங்களை எப்படி வரவேற்கும் என்பது தெரியாவிட்டாலும், விருந்தோம்பும் பண்போடு வரவேற்கும் என்றே நம்பினேம்.

கணவாயின் உச்சியில் கற் குவியல்களும், வழிபாட்டுக் கொடிகளும் காணப்பட்டன. திபேத்திய மொழியும் எங்களுக்குத் தெரியாது, பணமு மில்லை. நீண்ட ஓய்வெடுத்து நிலைமையை நிதானித்தோம். பசிக் கொடுமை ஒரு புறம் வாட்டியது. கண்ணுக் கெட்டிய தூரம் மக்கள் நடமாட்டத்தையே காணேம். எங்களுடைய இறுதி லட்சியமோ ஆயிரக் கணக்கான மைல்களுக்கப்பாலுள்ள ஜப்பானிய பகுதி. நாங்கள் திட்டமிட்டிருந்த பாதை புண்ணியக் கைலாய மலை மீதாகச் சென்று பின்னர் பிரம்மபுத்திரா ஆற்று வழியே கிழக்குத் திபேத்திற்கு இட்டுச் செல்லக் கூடியது.

செங்குத்தாக இறங்கியபின் ஒப்க்ஷோவை அடைந்து பகலில் ஓய்வெடுத்தோம். பின்னர் மனித நடமாட்டமே யில்லாத சமவெளியில் கடுங்குளிரில் நடந்தோம். மறு நாள் நண்பகல் நாங்கள் முதலாவது திபேத்திய கிராமமாகிய கசாபுலிங்கை அடைந்தோம். அங்கு ஆறு வீடுகளே இருந்தன. பழங்காலப் பாணியில் அவர்கள் வயல்களில் பார்லி விதைத்ததை, முதன்

முறையாகச் செவ்விந்தியர்களைப் பார்த்த கொலம்பசைப் போல், நாங்களும் வியப்போடு கவனித்தோம். இவர்கள் எங்களை எப்படி வரவேற்பார்கள், நண்பர்களாகவா, பகைவர்களாகவா? அவர்கள் எங்களைக் கவனிக்கவேயில்லை. நாங்கள் கூடாரமடித்துக் கொண்டோம். இரவில் வீடு திரும்பிய அந்த மக்களிடம் பணத்தை நீட்டி ஆடு ஒன்றை விற்குமாறு கேட்டோம். ஆனால் அவர்கள் முன் வரவில்லை.

திபேத்தில் எல்லைக் காவல் இல்லாததால் நாட்டு மக்கள் எல்லோருமே அந்நியர்களைப் பகைவர்களாகக் கருதும்படி பழக்கப்பட்டிருந்தார்கள். அத்துடன் அந்நியர்களுக்கு ஏதாவது விற்கும் எந்தத் திபேத்தியனும் கடுமையாகத் தண்டிக்கப்படுவான். எங்களுக்கோ அடங்காப் பெரும் பசி. அவர்களாக விற்காவிட்டால் நாங்கள் வலுக்கட்டாயமாக ஆடு ஒன்றைப் பிடித்து வெட்டிச் சமைக்கப் போவதாக அச்சுறுத்தினோம்—நாங்கள் நால்வருமே நல்ல உடற் கட்டமைந்தவர்களா யிருந்தபடியால் இந்த சூழ்ச்சிப் பலனளித்தது. அநியாய விலை வாங்கிக் கொண்டு ஒரு வெள்ளாட்டை விற்றார்கள். அதை வெட்டிச் சமைப்பதற்குள் நள்ளிரவாகிவிட்டது. அப்பொழுதும் அது அரை வேக்காடுதான் ஆகியிருந்தது. ஆனாலும் எங்கள் பசி அதற்குமேல் தாளாதபடியால் அந்த அரை வேக்காட்டு இறைச்சியையே ஒரு கை பார்த்து விட்டோம்.

இங்குள்ள திபேத்தியர்களுக்கும் உள் நாட்டில் வாழும் திபேத்தியர்களுக்கும் நிறைய வேறுபாடு உண்டு. இவர்கள் கறுப்புத் தோலும், சூழ்ச்சிக் கண்களும் உடையவர்கள். திபேத்திய இனத்தின் புகழ்பெற்ற உல்லாசப் போக்கு எதையும் இவர்களிடம் காண முடியாது. திபேத்திலேயே இந்த ஆறு வீடுகளடங்கிய கிராமம்தான் துறவிமடம் எதுவுமில்லாத ஒரே கிராமம் என்பது எனக்குப் பின்னால் தெரிய வந்தது.

இந்த அன்பற்ற கிராமத்தை விட்டு மறு நாள் காலையிலேயே கிளம்பிவிட்டோம். புறப்படும்போதே எங்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு வேலையை நியமித்துக் கொண்டோம்—தண்ணீர் எடுத்து வருதல், அடுப்பு மூட்டுதல், தேனீர் தயாரித்தல், குளிர் காய நெருப்பு மூட்டுதல் முதலியன அவ்வேலைகளாகும். அன்று நண்பகலில் டுஷாங் கிராமத்தை அடைந்தோம். இதுவும் சிற்றூர்தான்; என்றாலும் சரியான துறவி மடம் ஒன்று இருந்தது. இங்கும் எங்களுக்கு அன்பற்ற வரவேற்புத்தான் கிடைத்தது. டுஷாங்கிலும் கூட அரசாங்க அலுவலர் யாரும் இருக்க வில்லை. எனவே நாங்கள் தங்குவதற்கும் பயணம் செய்வதற்கும் வேண்டிய அனுமதிச் சீட்டுக் கேட்டுப் பெற முடிய வில்லை. ஆனால் எங்களைத் தேடிக்கொண்டு அலுவலர்கள் வந்து கொண்டிருந்தார்கள் என்பது மறு நாள்தான் எங்களுக் குத் தெரிந்தது. நாங்கள் நடந்துகொண்டிருந்தபோது மணியோசை கேட்டது. மட்டக் குதிரைகளின் மீதிருந்த இருவர் எங்களை விளித்து நாங்கள் வந்த வழியே இந்தியாவுக்குத் திரும்பிவிட வேண்டுமென்று கூறினார்கள்.

அவர்களோடு விவாதிப்பது பயனற்றது என்று நினைத்து அவர்களைப் பிடித்து அப்பால் தள்ளிவிட்டு முன்னேறினோம். நல்ல வேளை அவர்கள் தங்களிட மிருந்த கருவிகளைக் கையாள வில்லை. எங்களிடமும் அவை இருந்ததனால் அவர்கள் அப்படிச் செய்திருக்க லாம். எங்களைத் தடுத்து நிறுத்தும் முயற்சி பலனளிக் காததால் அவர்கள் திரும்பிச் சென்றுவிட்டார்கள். நாங்கள் அடுத்த கிராமத்தை யடைந்தோம். அங்கு உள்ளூர் 'கவர்னர்' ஒருவர் உண்டு என்பது எங்களுக்குத் தெரியும்.

இந்தப் பகுதியில் தண்ணீரே கிடையாது. திசபராங் என்னும் அந்தச் சிறிய பட்டணத்தில் குளிர் கால மாதங்களில்தான் மக்கள் வந்து குடியேறுவார்கள்.

கவர்னர்கூட அன்று தமது கோடைக்கால இல்லம் இருக்கும் ஷாங்சேக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார். ஆனால் எங்களை வழியில் கண்டு திரும்பிச் செலும்படிக் கூறிய இருவரில் ஒருவர்தான் அந்த கவர்னர் என்பதைக் கண்டதும் எங்கள் வியப்பு எப்படி இருந்திருக்கும் என்பதை நீங்களே யூகித்துக்கொள்ளுங்கள். எங்கள் வேண்டுகோளைச் செவிமடுக்காததுடன், எங்கள் மருந்துகளுக்குப் பதிலாக மாவு தரும்படி நாங்கள் கேட்டதைக்கூட அவர் மறுத்துவிட்டார்.

திபேத்து நடு நிலைமை நாடு என்றும், எங்களுக்கு அது புகலிடம் தர வேண்டியது கடமை என்றும் நாங்கள் சொன்னதை அவரால் புரிந்து கொள்ளவும் முடிய வில்லை; அதற்கு வேண்டிய அதிகாரம் அவரிடமிருக்கவு மில்லை. எனவே, அவரை விட உயர்ந்த அலுவலராக ஐந்து மைல்களுக்கப்பாலுள்ள துலிங் என்னும் ஊரிலிருக்கும் துறவியிடம் சென்று எங்கள் நிலைமையைச் சொல்லி உதவி பெற அனுமதிக்க வேண்டுமென்று வற்புறுத்தினோம். மறு நாள் அந்தத் துறவி அதிகாரியைக் காணத் துலிங் சென்றபோது அங்கு அவுப்சினேட்டரும் டிரைபெல்லும் இருக்கக் கண்டோம்—அவர்கள் வேறொரு பாதை வழியே அங்கு வந்து சேர்ந்திருந்தனர். எல்லோருமாகப்போய் துறவி அதிகாரியைக் கண்டு நிலைமையை விளக்கினோம். அவரும் மறுத்துவிட்டார். ஆனாலும், நாங்கள் இந்தியாவிற்குத் திரும்பிச் செல்வதானால் எங்களுக்கு உணவுப் பொருட்கள் விற்பதாகக் கூறினார். எங்களிடம் உணவுத் தட்டுப்பாடு ஏற்பட்டிருந்தமையால் வேறு வழியின்றி அதற்கு இசைந்தோம்.

இந்தியாவிற்குத் திரும்புவதாக நாங்கள் உறுதி கூறிய பிறகு எங்கள் சாமான்களைச் சுமந்துசெல்ல நான்கு கழுதைகள் தந்தார்கள். கழுதை யோட்டிகளைத் தவிர எங்களைக் கண்காணிக்க வேறு காவலாளிகள் யாரும் எங்களோடு அனுப்பப்படாததைத் கண்டு வியந்தோம்.

ஆனால் அனுமதி பெறாத அந்நியர்களுக்கு யாரும் உணவுபொருட்களை விற்கக்கூடாது என்று பிறப்பிக்கப் பட்டிருக்கும் கட்டளைத்தான் திபேத்தியர் கையாளும் திறமையான கண்காணிப்பு என்பதைப் பின்னர் தெரிந்து கொண்டோம்.

சண்டித்தனம் செய்யும் கழுதைகளோடு பைவாங் என்ற சிற்றூர் சென்று இரவைக் கழித்தோம். மறு நாள் பயணம் மனோகரமாயிருந்தது, ஏனென்றால் எங்களுக்கு முன்னால் எழில் துள்ளும் இமயமலை கம்பீரமாகக் காட்சி தந்துகொண்டிருந்தது. இந்தப் பாதையில் முதல் தடவையாகக் கியாங் என்ற காட்டுக் கழுதைகளைப் பார்த்தோம்—ஒயிலான நடைக்கு இவை பெயர் பெற்றவை. ஓநாய்கள்தான் இவைகளின் விரோதிகள்.

ஷாங்ஸேயிலிருந்து நாங்கள் ஷிப்கி பாதையைத் தெரிந்தெடுத்தோம். முதலாவதாக அது எங்களுக்குப் புதிய பாதை என்பதனாலும், இரண்டாவதாகத் தப்பிச் செல்ல அங்கு ஏதாவது வழி கிடைக்கும் என்ற நப்பாசையாலும் அப்படிச் செய்தோம். வேண்டிய அளவுக்கு வெண்ணெய், இறைச்சி, மாவு முதலியவை களை வாங்கிக்கொண்டோம். அடுத்த மூன்று நாட்களை யும் நன்கு உண்பதிலும், ஓய்வு பெறுவதிலும் செல விட்டோம். நான் என்னுடைய நாட் குறிப்பையும் எழுதிக் கொண்டேன்.

நாங்கள் சமைத்த இறைச்சியில் ஏதோ நச்சுக் கலந்திருந்ததால் அவுப் சினைட்டர் சுகவீன முற்றார். எனவே, மேலும் இரண்டொரு நாட்கள் தங்கியிருப் பதற்கு நாங்கள் அனுமதி கோரியபோது கவர்னர் மறுத்து விட்டார். நான் அவரோடு சண்டை பிடித்த தின் பேரில் அவுப் சினைட்டர் ஏறிச் செல்ல ஒரு குதிரையும், சாமான்களைச் சுமக்க இரண்டு யாக்குகளும் தரப்பட்டன. இவைதான் நான் கண்ட முதல் யாக்கு கள். மாட்டு இனத்தைச் சேர்ந்ததும், நீண்ட ரோம

முடையதுமான யாக்குத்தான் பொதி சுமக்கத் திபேத்தில் அதிகமாகப் பயன்படும் மிருகம். அரசாங்க அனுமதிச் சீட்டுடன் போர் வீரன் ஒருவன் எங்களோடு வந்ததால் எல்லா வசதிகளும் குறைவின்றிக் கிடைத்தன.

பல கிராமங்களைக் கடந்தோம்; பல குன்றுகளிலும் செங்குத்தான சரிவுகளிலும் ஏறி இறங்கினேம். அதே நேரம் எங்கள் தப்பி ஓடும் திட்டமும் மனத்தில் வலுப் பெற்றுக்கொண்டே வந்தது. கடைசியில் இமயத்தின் அடிவாரத்தையும் இந்திய எல்லையையும் வருத்தத்தோடு அணுகினேம். இங்குத்தான் சட்லஜ் ஆறு இமயத்தை வளைத்துக்கொண்டு ஓடுகிறது. ஷாங்ஸேயிலிருந்து புறப்பட்டுப் பதினெென்ருவது நாளில் ஜூன் 9இல் எல்லைக் கிராமமாகிய ஷிங்கி வந்தடைந்தோம். திபேத்தில் அலைந்த மூன்று வாரக் காலத்தில் அனுமதிச் சீட்டு இல்லாமல் திபேத்தில் பயணம் செய்வது எவ்வளவு கடினம் என்பதை நன்குணர்ந்துவிட்டோம்.

திபேத்தில் மேலும் ஓரிரவைக் கழித்தோம். 80 ரூபாய்க்கு நான் ஒரு கழுதையை வாங்கிக்கொண்டேன். அதுவும் எல்லைக் கிராமமாயிருந்தபடியால்தான் எனக்கு இந்தியாவில் தேவைப்படும் என்ற பொய்யைச் சொல்லி வாங்க முடிந்தது. எங்களுடன் வந்த கழுதையோட்டி எங்களை இங்கு விட்டு விட்டுத் திரும்பிவிட்டான். அழகிய வழி நெடுக எங்களோடு வேடிக்கையாகப் பேசிக்கொண்டு வந்த அவன் பிரியும்போது 'ஒரு வேளை லாசாவில் சந்திப்போம்' என்று குறும்பாகச் சொல்லிச் சிரித்துவிட்டுச் சென்ருன். கணவாயின் உச்சிக்கு ஏறினேம். அங்குத் திபேத்திய எல்லைக் காவலாளியோ அல்லது இந்திய எல்லைக் காவலாளியோ யாருமிருக்க வில்லை. ஆனல் நாகரிகத்தின் முதல் சின்னம் அங்கே இருந்தது.

'சிம்லா 200 மைல்கள்' என்ற மைல் கல்லைத்தான் குறிப்பிடுகிறேன். மீண்டும் இந்தியாவிற்குள் வந்து விட்டோம். ஆனல் இங்கு அதிக நாள் தங்கியிருக்கும்

எண்ணம் யாருக்குமே இல்லை—மூட் கம்பிச் சிறை யல்லவா எங்களை வரவேற்க இந்தியாவில் காத் திருந்தது!

[மீண்டும் அவர்கள் திபேத்துக்குள்ளேயே சென்று தந்திரமாகத் திபேத்தின் தலைநகராகிய லாசாவையே அடைந்துவிட்டார்கள்.]

வினாக்கள்

1. ஹோர்ரரும் அவரது நண்பரும் கசாபுலிங் என்ற கிராமத்தில் அடைந்த அனுபவங்களை யுரைக்க.

2. 'டுஷாங்' என்ற கிராமத்தில் அவர்கள் அடைந்த அனுபவம் யாது?

3. திசபராங் கவர்னரைப்பற்றிச் சில வாக்கியங்கள் தருக.

4. துலிங் துறவியினிடம் பிரயாணிகளுக்கு ஏற்பட்ட அனுபவங்கள் யாவை?

5. அவர்கள் பைவாங் என்ற இடத்திலிருந்து 'சிம்லா' கைகாட்டியைச் சேர்ந்தது வரை நிகழ்ந்தனவற்றைச் சுருக்கமாக உரைக்க.

# 22. புலால் உண்ணும் செடிகள்

ஆர். வீரபத்திரன் அவர்கள், M.A., L.T.

## செடி புலால் உண்ணும் விந்தை

மா புரதம் முதலிய உணவுப் பொருள்களைத் தாவரங்கள் உண்டு பண்ணுவதும், விலங்குகள் தாவரங் களைத் தின்று அப்பொருள்களைப் பெற்று உயிர் வாழ்வ தும் இயற்கையின் நியதியாக அமைந்துள்ளன. ஆனால் இந்நியதிக்கு மாறாக விலங்குகளைப் பிடித்துத் தின்று அவற்றின் உடலிலிருக்கும் புரதத்தை எடுத்துக் கொள்ளுகிற சில விந்தைச் செடிகளும் இயற்கையில் காணப்படுகின்றன. அச்செடிகள் சிறு விலங்குயிர்களைத் தம்பால் இழுத்து, அவை தம்மைச் சார்ந்தவுடன் பிடித்து, உடலைக் கரைத்து, உறிஞ்சுகின்றன. அதற் காகச் சில சிறப்பான அமைப்புக்களையும் அவை பெற்றுள்ளன.

---

இக்கட்டுரை 'இயற்கையின் விந்தை' என்ற நூலிலிருந்து கொள்ளப் பட்டது. 'பாரி நிலைய' வெளியீடு.

### சேடி பூச்சிகளை ஈர்த்தல்

வேடன் வன விலங்குகளைப் பிடிப்பதற்காகக் காட்டில் வலைகளையும் பொறிகளையும் வைத்து அவற்றிற் குள்ளே அவ்விலங்குகளுக்கு உணவாகும் பொருள்களை அமைத்து வைக்கிறான். அப்பொருள்களைத் தின்ன வேண்டு மென்ற ஆர்வத்தில் விலங்குகள் வலைக்குள் சென்று அகப்பட்டுக் கொள்ளுகின்றன. பூக்களும் வண்டுகளை ஈர்ப்பதற்காக நல்ல மணம், இனிய தேன் முதலியவற்றைப் பெற்றிருக்கின்றன. இவற்றைப் போல், பூச்சிகளை வசீகரிப்பதற்கான ஓர் அமைப்பு புலால் உண்ணும் செடிகளிலும் காணப்படுகிறது.

### பன்னீர்க் குமிழ்

நமது நாட்டில் இரண்டு வகையான, புலால் உண்ணும் செடிகள் இருக்கின்றன. அவற்றுள் ஒன்று 'பன்னீர்க் குமிழ்' என்று கூறப்படும். இது குளிர்ந்த மலைப் பிரதேசங்களில் காணப்படுகிறது. அந்தச் செடி வட்ட வடிவ முடையதாய்த் தரையோடு சேர்ந்திருக்கும். இலைகள் சிறியவையாய் ஒன்றோடொன்று நெருங்கித் தண்டைப் பற்றிக் கொண்டிருக்கும். மேலும், அந்த இலை கள் ஒன்றன்மேல் ஒன்றாகப் பொருந்தி மெத்தைபோல் அமைந்துள்ளன. இலைகளின் நிறம் இளஞ் சிவப்பு. தண்டின் நுனியிலிருந்து பூங்கொத்தின் காம்பு புறப் பட்டு மேல் நோக்கி வளருகிறது. அதில் சிறிய பூக்கள் பொருந்தியுள்ளன. இச்செடியில் மிக விசேடமான பாகம் இலையாகும். அதிலிருந்து சிறிய மயிர்கள் புறப்பட்டு வெளிப்புறமாக வளர்ந்திருக்கின்றன. ஒவ் வொரு மயிரின் நுனியும் சற்றுத் தடித்திருக்கும். அதற்குள்ளே ஒரு சுரப்பி இருக்கிறது. அதிலிருந்து பசைபோன்ற ஒரு திரவம் வெளிவருகிறது. மயிரின் நுனியில் அத்திரவம் நீர்த் துளிபோலத் தங்கி யிருப்பதைக் காணலாம். பார்ப்பவர்கள் அதனைப் பனித் துளியென்றே கருதுவர். ஏதேனும் ஒரு பூச்சி அந்த இலையின் மீது அமர்ந்தால் அத்திரவம் அதன்

மீது ஒட்டிக்கொள்ளுகிறது. அப்பொழுது பூச்சிக்கு இலையை விட்டு அகல முடியாது. அது தன்னை விடுவித்துக்கொள்ள அங்கு மிங்கும் அசைந்து புரளும் போது திரவம் அதன் உடல் முழுவதும் தோய்ந்து விடுகிறது. இதற்குள் அப்பூச்சியின் அருகிலுள்ள எல்லா மயிர்களும் அதன் பக்கமாக வளைந்து அதனை இறுகப் பற்றிக் கொள்ளுகின்றன. பூச்சி அகப்பட்டுக் கொண்டதும், பசை நீர் முன்னிலும் அதிகமாகச் சுரக்கிறது. அந்நீரில் பூச்சியின் உடலை சீரணிப்பதற்குதவும் ஒரு திரவச் சத்து உள்ளது. அது பூச்சியின் உடலைக் கரைக்கிறது. பூச்சியின் கெட்டியான காலும் மேல் தோடும் நீங்கலான மற்றப் பாகங்கள் அனைத்தும் கரைந்து விடுகின்றன. அந்தச் சத்தை இலை உட்கொள்ளுகிறது. சீரண வேலை முற்றுப் பெற்றவுடன் மயிர்கள் முன்போல நிமிர்ந்து விடுகின்றன.

பை தூக்கிப் பாசி

இரண்டாம் வகைப் புலால் உண்ணும் செடி தண்ணீரில் வளர்கிறது. அது 'பை தூக்கிப் பாசி' என்று பெயர் பெறும். நீர் மிகுந்த சதுப்பு நிலங்களிலும், நீரோடைகளிலும், குளங்களிலும் அது காணப்படுகிறது. அதன் இலைகள் மிகச் சிறியவையாயும் தண்ணீருக்குள் அமிழ்ந்தும் கிடக்கும். அவ்விலைகளில் சிறிய பைகள் போன்ற உறுப்புக்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இப்பையின் அமைப்பைப் பூதக் கண்ணாடியின் உதவியால் தெளிவாகத் தெரிந்துகொள்ளலாம். ஒவ்வொரு பையும் பூச்சிகளைப் பிடிப்பதற்குரிய ஒவ்வொரு பொறியாகும். செடியை வெளியே எடுத்துப் பார்த்தால் அப்பைகளுக்குள்ளே சிறு பூச்சிகளும் தண்ணீரும் இருப்பதைப் பார்க்கலாம். பையின் ஒரு பக்கத்தில் சில மயிர்கள் நீண்டு வளர்ந்திருக்கின்றன. பெரிய பூச்சிகள் பொறியினருகே வந்து அதைச் சிதைத்து விடாதபடி அந்த ரோமங்கள் பாதுகாக்கின்றன.

## பையின் அமைப்பு

இனி, அப்பொறியின் அமைப்பை நோக்குவோம். எலிகளைப் பிடிப்பதற்கு இரும்பு வலையால் செய்யப் பட்ட ஒரு வகைப் பொறியை நீங்கள் பார்த்திருக்கலாம். அதன் ஒரு புறத்தில் எலி உள்ளே நுழைவதற்குரிய வாசல் இருக்கும். வாசலின் அடியில் ஒரு தகரத் தகடு இருக்கிறது. எலி அதன்மேல் கால் வைத்ததும் அஃது உள்ளே தாழ்ந்து எலியைப் பொறிக்குள் செல்ல விடு கிறது. எலி உள்ளே புகுந்தவுடன் அத் தகடு மேலே உயர்ந்து வாசலை அடைத்துக்கொள்ளும். அதன் பின் எலிக்கு வெளியே வர முடியாது. இத்தகைய ஓர் அமைப்பே மேற் கூறிய பையிலும் காணப்படுகிறது. பையின் வாசலினருகே உள் நோக்கித் திறக்கும் ஒரு கபாடம் உள்ளது. அதன் வெளிப் புறத்தில் மென்மை யான மயிர்கள் இருக்கின்றன. அவை மிக உணர்ச்சி வாய்ந்தவை. பை காலியாக இருக்கும் போது, அவ் வுணர்ச்சி மிகவும் சக்தி பெற்றிருக்கும். ஏதேனும் ஓர் பூச்சி அதனை தொடுவதானால் கபாடம் உடனே உட்புற மாகத் திறக்கிறது. பூச்சி உள்ளே இழுத்துக்கொள்ளப் படுகிறது. பைக்குள் சென்ற பூச்சிக்குப் பின்னர் வெளி வர முடியாது. பைக்குள் சுரக்கும் ஒரு வகை சீரண நீர் பூச்சியின் உடலைக் கரைத்து விடுகிறது.

## கிண்ணச் செடி

அமெரிக்கா முதலிய நாடுகளில் மற்றோர் வகை யான புலால் உண்ணும் செடி காணப்படுகிறது. அதனைக் 'கிண்ணச் செடி' என்று சொல்லலாம். அதில் பல இனங்கள் உண்டு. சில செடிகளில் இலைகள் நீண்டு, மாவிலைபோல் இருக்கும். அதன் நுனியில் கிண்ணம் போன்ற ஓர் உறுப்பு இருக்கிறது. அதன் வாய் மேற்புறமாகத் திறந்திருக்கும். வாயின் அருகி லிருந்து சில மயிர்கள் தோன்றி, உட்புறமாக வளர்ந் திருக்கின்றன. கிண்ணத்தினுள்ளே பல சுரப்பிகள் இருக்கின்றன. அவற்றிலிருந்து ஒரு வகைத் திரவப்

பொருள் வெளி வந்து கிண்ணத்தினடியில் தங்கியிருக்கும். அத்திரவம் பூச்சிகளை இழுக்கிறது. கிண்ணத்திற்குள் சென்ற பூச்சிகள் வெளியே வாராதபடி மயிர்கள் தடுத்துக் கொள்வதால் அவை திரவத்திற்குள் விழுந்து மடிகின்றன. அத்திரவம் அவற்றின் உடலைக் கரைத்து விடுகிறது. பூச்சிகள் இவ்வாறு செடிகளுக்கு உணவாகின்றன.

## புலால் இன்றியும் வாழமுடியும்

புலால் உண்ணும் செடிகளுக்குப் புலால் இன்றி உயிர் வாழ முடியாதோ என்று சிலர் எண்ணுதல் கூடும். அஃது இல்லாமல் அவற்றிற்கு வாழ முடியும். மற்றத் தாவரங்களைப் போல இயற்கையிலிருந்து உணவைத் தயார் செய்து கொள்வதற்கு வேண்டிய அமைப்புக்களையும் அவை பெற்றிருக்கின்றன. ஆயினும், பூச்சிகள் மிகுதியாகக் கிடைக்கும் போது அவை மற்றக் காலங்களை விடச் செழுமையாக வளர்வதைக் காணலாம். விலங்குயிர்கள் கிடைக்குமாயின் அவற்றைப் பிடித்துத் தின்பதற்கும், கிடைக்காவிடின் தம் சொந்த முயற்சியால் புரதத்தை உண்டுபண்ணிக் கொள்வதற்கும் வேண்டிய தனித்தனி அமைப்புக்களை இச்செடிகள் பெற்றிருப்பது இயற்கையின் விந்தையே யாகும்.

### வினாக்கள்

1. உயிர்களுக்குப் புரதம் இன்றியமையாதது என்பதனைப் புலப்படுத்துக.
2. பிராணிகளின் குடர்கள் குட்டையாகவோ நீளமாகவோ அமைகின்ற பொருத்தத்தினை விளக்குக.
3. 'பன்னீர்க் குமிழ்' என்னும் செடியின் அமைப்பைப்பற்றிக் கூறுக.
4. அச் செடி பூச்சிகளை பற்றிக்கொண்டு உண்ணும் வகையினைப் பற்றியுரைக்க.
5. பை தூக்கிப் பாசியின் பொதுவான அமைப்பு யாது?
6. பை தூக்கிப் பாசியின் பை பூச்சிகளை கவருமாறு எங்ஙனம்?
7. கிண்ணச் செடி பூச்சிகளைக் கவர்ந்து உண்ணும் முறையினைக் கூறுக.

# 23. கரடி வேட்டை—1

லியோ டால்ஸ்டாய்

*தமிழாக்கம்:* கீ. சீ. வேங்கடேசன், வி. எஸ். வேங்கடேசன்

நாங்கள் கரடி வேட்டைக்காகப் புறப்பட்டோம். எனது நண்பன் ஒரு கரடியைச் சுட்டான். அவன் சுட்டதால் கரடி இறந்து விடவில்லை. பலமான காயம் தான் ஏற்பட்டது. பனி படிந்த தரைமீது கரடியின் காயத்திலிருந்து வெளிப்பட்ட ரத்தம் தேங்கிக் கிடந்தது. ஆனால் கரடி தப்பிச் சென்றுவிட்டது.

காட்டில் நாங்கள் அனைவரும் ஒன்று கூடினோம். அடிப்பட்ட கரடியை உடனே தொடர்ந்து செல்வதா, இல்லை கரடிக்குப் பயந் தெளிந்து வெளி வருவதற்காக இரண்டு மூன்று நாட்கள் காத்திருப்பதா என்பதை முடிவு செய்ய எண்ணினோம். எங்களுடனிருந்த புதர் களிலிருந்து கரடிகளை விரட்டும் குடியானவனிடம் அடிபட்ட கரடியை அன்றே வளைத்துக் கொண்டுவிட முடியுமா என்று கேட்டோம்.

கரடிகளைப் புதர்களிலிருந்து விரட்டுவதில் அனுபவசாலியான வயது முதிர்ந்த குடியானவன், 'முடியாது. மிகவும் அரிது. அது பயந் தெளிந்து ஓர் இடத்தில் தங்க அவகாசம் கொடுக்க வேண்டும். நான்கு ஐந்து நாட்கள் பொறுத்திருந்தால் அதை வளைத்துப் பிடித்துவிடலாம். ஆனால் இப்பொழுது பின் தொடர்ந் தால் அது பயந்து வெகு தூரம் ஓடத் தலைப்படும். எங்கும் தங்காது,' என்றான்.

அப்பொழுது கரடிகளை விரட்டுபவர்களில் வாலிப னாக இருந்த ஒருவன் வயது முதிர்ந்தவன் சொன்னதை எதிர்த்து வாதாடினான். கரடியை இப்பொழுதே வளைத்துப் பிடித்துவிடலாம் என்றான். 'பனி அதிக

---

இக்கதை 'டால்ஸ்டாய் கதைகள்' (முதற்பாகம்) என்ற நூலிலிருந்து கொள்ளப்பட்டது. சென்னை, 'பாரதி பதிப்பக' வெளியீடு.

மாகப் பெய்கிறது. அதனுல் அடிபட்ட கரடி அதிகத் தூரம் போக முடியாது. மாலைக்குள் அஃது எங்காவது தங்கிவிடும். இல்லாவிட்டால் நான் பனிச் செருப்புகளை அணிந்து அதற்கு முன்னுல் ஓடி வளைத்துக் கொள் கிறேன்,' என்ருன் வாலிபன்.

கூட வந்தவர்கள் கரடியைப் பின் தொடரக் கூடாது. அஃது ஓர் இடத்தில் தங்கும்வரை காத்திருக்க வேண்டும் என்ருர்கள். ஆனுல் நான் 'நாம் இதைப் பற்றி விவாதிக்க வேண்டாம். உங்களுடைய விருப்பம் போல் நீங்கள் செய்யுங்கள். நான் டமியானுடன் கரடி யின் அடிச் சுவட்டைப் பின்பற்றிச் செல்கிறேன். நாங்கள் கரடியை வளைத்துப் பிடித்துவிட்டால் நல்லது. இல்லாமல் போனுலும் அதனுல் நமக்கு ஒரு நட்டமும் ஏற்படப் போவதில்லை. பொழுது இன்னும் இருக்கிறது. இன்று நாம் செய்ய வேறு வேலையும் இல்லை,' என்றேன்.

என் விருப்பப்படியே ஏற்பாடாயிற்று.

மற்றவர்கள் வண்டியிருக்குமிடம் சென்று ஏறிக் கொண்டார்கள். கிராமத்திற்கும் சென்ருர்கள். நானும் டமியானும் சிறிது ரொட்டியை எடுத்து வைத்துக் கொண்டு காட்டிலேயே தங்கினேம்.

எங்களுடன் வந்தவர்கள் போன பின்பு நானும் டமியானும் எங்கள் துப்பாக்கிகளைப் பரிசோதனை செய்தோம். கம்பளிச் சட்டைகளைச் சரி செய்து கொண்டு கரடியின் அடிச்சுவட்டைப் பின்பற்றிப் புறப் பட்டோம்.

அப்பொழுது பனி படர்ந்தும், சந்தடியின்றியும் இருந்தது. ஆனுல் புதைமணல் போலவிருக்கும் பனித் தரையில் செருப்பு அணிந்து செல்வது மிகவும் கஷ்ட மாக இருந்தது. பனி ஆழமாகவும் வழ வழப்பாகவும் இருந்தது. காடு முழுவதும் பனி உறைந்துபோக வில்லை. முதல் நாள்தான் புதிதாகப் பனி பெய் திருந்தது. அதனுல் எங்கள் பூட்ஸுகள் அரையடி

பனியில் அழுந்தின. சில இடங்களில் அதற்கு ஆழமாகவும் புதைந்தது.

தூரத்திலேயே கரடியின் அடிச்சுவடு நன்றாகத் தெரிந்தது. கரடி எப்படிப் போயிருக்கிறது என்பதையும் நாங்கள் அறிந்தோம். சில இடங்களில் அது மார்புவரை அழுந்தி ஏர் உழுவதுபோலப் பனியைக் கிழித்துக்கொண்டு போயிருந்தது. முதலில் கரடியின் அடிச்சுவடு பெரிய மரங்களுக்கு அடியில் தென் பட்டது. ஆனால் கரடியின் அடிச்சுவடு அடர்த்தியாக இருந்த புதர்கள் பக்கமும் சிறுசிறு மரங்கள் பக்கமும் காணப்பட்டபோது டமியான் அப்படியே நின்று விட்டான்.

'நாம் இப்பொழுது கரடியின் அடிச்சுவட்டைப் பின்பற்றிப் போவதை விட்டுவிட வேண்டும். அநேகமாக அஃது இங்குத்தான் எங்காவது தங்கியிருக்கும். கரடி எங்கெங்கே தங்கிச் சென்றிருக்கிறது என்பதை பனித் தரையைப் பார்த்தாலே நன்றாகத் தெரிய வருகிறது. நாம் அதன் அடிச்சுவட்டை விட்டு நாலா பக்கமும் சுற்றி வரலாம். ஆனால் நாம் சந்தடி செய்யக் கூடாது. உரக்கப் பேசாதீர்கள். இருமாதீர்கள். இல்லா விட்டால் நாம் கரடியைப் பயமுறுத்தி ஓட்டி விடுவோம்' என்றான் டமியான்.

நாங்கள் இருவரும் கரடியின் அடிச்சுவட்டைப் பின்பற்றிச் செல்வதை கைவிட்டோம். இடப் பக்கமாகத் திரும்பிச் சென்றோம். ஆனால் ஐந்நூறு கஜ தூரம் போகும் சமயம் கரடியின் அடிச்சுவடு எங்களுக்கு வலப் புறம் தென்பட்டது. நாங்கள் அதைப் பின் தொடர்ந்து சென்றோம். கரடியின் அடிச்சுவடு எங்களைச் சாலையின் பக்கமாகக் கொண்டுவிட்டது. சாலையை அடைந்ததும் நாங்கள் நின்று கரடி எந்தப் பக்கமாகப் போயிருக்கிறது என்பதைக் கவனித்தோம். இங்கும் அங்குமாகக் கரடியின் அடிச்சுவடும், அதன் உடல் உராய்ந்த பகுதியும் தென்பட்டது. அத்துடன் பல

இடங்களில் குடியானவர்களுடைய பனிப் பூட்ஸின் அடையாளங்களும் காணப்பட்டன. கிராமத்தின் பக்கமாகவே கரடி போயிருக்கிறது என்பது தெளிவா யிற்று.

நாங்கள் காலையில் போகும் சமயம் டமியான், 'இப்பொழுது நாம் சாலையைக் கவனிப்பதில் பயனில்லை. மணல் போன்ற பனியின்மீது காணப் படும் அடிச்சுவட்டின் மூலம் கரடி வலப் பக்கம் போயிருக்கிறதா, அல்லது இடப் பக்கமா என்பதைக் கண்டறிய வேண்டும். அது எங்காவது திரும்பிப் போயிருக்கலாம். கிராமத்திற்குச் சென்றிருக்காது,' என்றான்.

சாலை ஓரமாகவே நாங்கள் ஒரு மைல் தூரம் சென்றோம். அப்போது எங்களுக்கு முன்னால் கரடியின் அடிச்சுவடு தென்பட்டது. அது வேறு பக்கமாகத் திரும்பிப் போயிருந்தது. அடிச்சுவட்டை உற்றுக் கவனித்தோம். அது ஆச்சரியப்படும்படியாக விருந்தது. எங்கள் முன்னால் தென்பட்டது கரடியின் அடிச்சுவடு தான் என்பதில் சந்தேகமே யில்லை. ஆனால், அந்த அடிச்சுவடுகள் காட்டிலிருந்து சாலைக்கு வந்து கொண் டிருந்தது மாத்திரமல்ல; சாலையிலிருந்து காட்டி னுள்ளும் சென்று கொண்டிருந்தன. கரடிக் கால்களின் விரல்கள் சாலையின் பக்கமாகவே காணப்பட்டன.

'அது வேறு ஒரு கரடியாக இருக்கலாம்' என்றேன் நான்.

டமியான் அடிச்சுவட்டை உற்றுக் கவனித்தான். சிறிது நேரம் சிந்தித்தான். பிறகு 'இல்லை. இஃது அதே கரடிதான். அது குறும்புத் தனம் செய்திருக்கிறது. சாலையிலிருந்து திரும்பும்போது பின்புறமாகவே சென்றிருக்கிறது!' என்றான்.

நாங்கள் அடிச்சுவட்டைப் பின்பற்றிச் சென் றோம். பிறகுதான் டமியான் சொன்னது சரி

என்று தெரிய வந்தது. சுமார் பத்தடி தூரம் கரடி பின்புறமாகச் சென்று மீண்டும் ஒரு மரத்தின் பக்கமாகச் சாலையை நோக்கி நேராகப் போயிருந்தது. டமியான் நின்று, 'இப்பொழுது நாம் கரடியைக் கட்டாயம் வளைத்துக்கொண்டு விடலாம். நமக்கு எதிர்ப்புறத்தில் சேறும் சகதியுமான பகுதியிருக்கிறது. அதனுல் கரடி எங்காவது தங்கியிருக்கும். நாம் சுற்றிக்கொண்டு போகலாம்' என்ருன்.

நாங்கள் அடர்த்தியாக வளர்ந்திருந்த மரங்களைச் சுற்றிக்கொண்டு போனேம். அச்சமயம் நான் களைத்துப் போயிருந்தேன். எனக்கு டமியானுடன் போவது மிகவும் துன்பமாக இருக்கிறது. ஒரு சமயம் நான் சறுக்கி முட்கள் நிறைந்த புதர்களில் விழப்போனேன். என் பனிப் பூட்ஸ் புதரில் அகப்பட்டுக்கொண்டது. மற்ருெரு சமயம் சிறு சாதிக்காய் மரங்களில் தடுக்கிக் கொண்டேன். மேலும், பழக்கமில்லாத காரணத்தால் என் பனிபூட்ஸுகள் கழன்று போயின. பலமுறை பனியினுல் மறைக்கப்பட்டிருந்த மரக் கிளைகள் மீதும், சுள்ளிகள் மீதும் தடுக்கி விழப் போனேன். எனக்குக் களைப்பு அதிகரித்தது. உடல் பூராவும் வியர்த்து விட்டது. நான் என் கம்பள மேல் அங்கியைக் கழற்றினேன். அதே சமயம் டமியானே படகில் உல்லாசப் பிரயாணம் செய்பவனைப்போல் பனியில் மெள்ள நடந்து சென்றுகொண்டிருந்தான். எதன் மீதும் தடுக்கி விழவில்லை. அவன் என்னுடைய கம்பள மேல் அங்கியையும் வாங்கித் தோளில் போட்டுக் கொண்டான். என்னை உற்சாகப்படுத்தி வேகமாக வரும்படி தூண்டினுன்.

மேலும் இரண்டு மைல்கள் சென்ருேம். சேறும் சகதியுமான பகுதியில் எதிர்ப் புறத்தை அடைந்தோம். நான் களைப்படைந்திருந்ததால் டமியானுக்கு வெகு தூரம் பின்னுலேயே நடந்து வந்தேன். எனது பூட்ஸும் அடிக்கடி கழன்றுகொண்டே யிருந்தது.

கால்களும் ஓய்ந்து போய்விட்டன. எனக்கு முன்னால் போய்க்கொண்டிருந்த டமியான் கையால் ஏதோ சைகை காட்டினான். அவன் அருகில் சென்றதும் கையால் எதையோ சுட்டிக் காட்டி மெல்லிய குரலில் 'அதோ அந்தப் புதருக்கு மேலே பாருங்கள். பறவைகள் ஓயாமல் கத்திக் கொண்டிருக்கின்றன. கரடி வெகு தூரத்திலிருந்தால்கூட அந்தப் பறவைகள் மோப்பம் பிடித்துவிடும். அதனால் இந்தப் பகுதியில் எங்காவது தான் கரடி இருக்கவேண்டும்,' என்றான்.

மீண்டும் நாங்கள் வேறு பக்கம் திரும்பி அரை மைல் தூரம் சென்றிருப்போம். அப்பொழுது மீண்டும் கரடியின் அடிச்சுவடு காணப்பட்டது. அதனால் நாங்கள் கரடியைச் சுற்றி வளைத்துக் கொண்டு வந்திருக்கிறோம் என்பது தெளிவாயிற்று. நாங்கள் வந்த பகுதியில் எங்கோ கரடியிருக்கிறது என்பதை உணர்ந்தோம். சிறிது நேரம் நின்றோம். நான் என் உடைகளைத் தளர்த்திவிட்டுக் கொண்டேன். ஆவி பிடித்தவனைப் போல் என் உடல் பூராவும் வியர்த்துக் கொட்டிக் கொண்டிருந்தது. டமியானுக்கும் வியர்வை வந்து கொண்டிருந்தது. அவன் தன் புறங்கையால் முகத்தில் அரும்பிய வியர்வையைத் துடைத்துக் கொண்டான்.

'நம்முடைய வேலையைச் செய்துவிட்டோம். இப்பொழுது சிறிது ஓய்வெடுத்துக்கொள்ள வேண்டும்,' என்றான் டமியான்.

மாலை மங்குவது நன்றாகத் தெரிந்தது. கதிரவனின் சிவந்த கிரணம் காடு முழுவதும் பரவியிருந்தது. நாங்கள் எங்கள் 'பனி பூட்ஸு'களைக்' கழற்றிப் போட்டோம். அதன் மீதே உட்கார்ந்து கொண்டோம்: பையிலிருந்து சிறிது ரொட்டியும் உப்பும் எடுத்தோம். கீழேயிருந்த பனியைச் சிறிது எடுத்து வாயில்போட்டுக் கொண்டேன். பிறகு ரொட்டியைச் சிறிது போட்டேன். அப்போது ரொட்டி மிகவும் ருசியாக இருந்தது. அதற்கு முன் என் வாழ்க்கையில் அப்படிப்பட்ட

ரொட்டியைத் தின்றதே யில்லை என்று தோன்றிற்று. ரொட்டி மிகவும் இனிப்பாக இருந்தது.

மாலை மங்கத் தொடங்கிற்று. கதிரவன் மறைந்து இருள் வரும்வரை உட்கார்ந்து இளைப்பாறிக் கொண்டிருந்தோம். அதன் பிறகு, 'கிராமம் வெகு தூரத்தில் இருக்கிறதா,' என்று டமியானைக் கேட்டேன்.

'ஆமாம். ஏறக்குறைய எட்டு மைல்கள் இருக்கலாம். இன்றிரவு நாம் அங்கேபோக முடியாது. ஆனால் நாம் இப்பொழுது நன்றாக ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டும். உங்கள் கம்பள மேலங்கியை அணிந்து கொள்ளுங்கள். இல்லாவிட்டால் குளுமை பிடித்துக் கொள்ளும்,' என்று டமியான் எச்சரித்தான்.

பனியைச் சரி செய்தான். சில மரக் கிளைகளை ஒடித்து வைத்துப் படுக்க வசதி செய்தான். நாங்கள் எங்கள் கையைத் தலைக்கு வைத்துக் கொண்டு படுத்தோம். எனக்கு எப்படித் தூக்கம் வந்தது என்று தெரியாது. இரண்டு மணி நேரத்திற்குப்பின் ஏதோ உடையும் சப்தம் கேட்டுக் கண் விழித்தேன்.

நான் நன்றாகத் தூங்கியதால் எங்கே யிருக்கிறேன் என்பதே முதலில் தெரிய வில்லை. நாலாப் பக்கமும் பார்த்தேன். எவ்வளவு, நேர்த்தியாக இருந்தது! ஏதோ ஒரு விசித்திர அலங்காரங்களுடன் கூடிய மண்டபத்தில் இருப்பதுபோல் தோன்றிற்று. எங்கும் வெள்ளை வெளேரென்று மின்னும் தூண்கள் காணப்பட்டன. நிமிர்ந்து மேலே பார்த்தேன். வெண்மையான திரைக்குப் பின்னால் ஒரு நீலத் திரை காணப்பட்டது. நீலத் திரையில் ஆயிரக் கணக்கான விளக்குகள் சுடர்விட்டுப் பிரகாசித்துக்கொண்டிருந்தன. சிறிது நேரம் எல்லாவற்றையும் நன்கு கவனித்த பிறகே எனக்கு நானும் என் நண்பனும் காட்டில் படுத்திருப்பது நினைவிற்கு வந்தது. கம்பங்கள் நிறைந்த மண்டபமாகக் காணப்பட்டது பனி மூடிய மரங்களுடன் கூடிய காடு என்பதை அறிந்தேன்

மேலே காணப்பட்ட வெண் திரையும், நீலத் திரையும், பனியும் வானமும் என்பதையும், சுடர்விட்டுப பிரகாசிக்கும் விளக்குகள் நட்சத்திரக் கூட்ட மென்றும் உணர்ந்தேன்.

இரவெல்லாம் பனி பெய்து கொண்டிருந்தது. மரங்களும் செடிகளும் பனியில் மூடிப்போயிருந்தன. டமியானும் பனியால் மூடப்பட்டு விட்டான். எனது கம்பளி அங்கியும் பனியில் மறைந்து விட்டது. மரக் கிளைகள் மீதிருந்து பனி மணல்போல் விழுந்து கொண்டேயிருந்தது. நான் டமியானை எழுப்பினேன். இருவரும் பனி பூட்ஸுகளை அணிந்துகொண்டோம். உடனே புறப்பட்டோம். காடு முழுவதும் மௌனம் குடி கொண்டிருந்தது. பனியில் நடக்கும்போது பனி பூட்ஸுகள் அதைக் கிழித்துக் கொண்டு சென்றதால் உண்டான ஓசை தவிர வேறு ஒன்றுமே கேட்கவில்லை. ஏதாவது ஒரு சமயம் மேலே படிந்திருந்த பனியின் பாரம் தாங்காமால் உடையும் கிளைகளின் மளமள வென்னும் ஓசை கேட்கும். உடனே அக் காடு முழுவதும் எதிரொலி செய்யும். ஒரே ஒரு சமயம் தான் ஓர் உயிர்ப் பொருளின் ஓசையைக் கேட்டோம். எங்களுக்கு அருகில் ஏதோ சலசலப்புக் கேட்டது. பிறகு அது வேகமாக ஓடிவிட்டது. அந்தச் சல சலப்பை எழுப்பியது கரடிதான் என்று எண்ணினேன். ஆனல் ஓசை வந்த இடத்திற்குச் சென்று பார்த்த போது அங்கு முயல்களின் காலடிகள் காணப்பட்டன. முயல்கள் தங்கள் குட்டிகளுக்குத் தீனி கொடுத்துக் கொண்டிருக்கும் சமயம் அவற்றை நாங்கள் பயப்படுத்தி விரட்டி யிருக்கிறோம்!

நாங்கள் மீண்டும் பனி பூட்ஸுகளை பனிமீது தேய்த்துக்கொண்டே சாலைக்கு வந்தோம். இப்பொழுது பனிமீது நடப்பது எளிதாக இருந்தது. நாங்கள் நடந்தபோது பனி பூட்ஸுகளை இழுத்து வந்ததினல் பின்புறம் சாலையின் இரு மருங்கிலும் அலை பாய்ந்து

பெரிய ஓசை உண்டாயிற்று. எங்கள் பூட்ஸ் பட்டு பனிக் கட்டிகள் உடைந்தன. முகத்தில் வெண்மையான பஞ்சுபோன்ற பனி விழுந்து மூடியது. கிளைகளினூடே வானத்தைப் பார்த்தபோது மினுக்கு மினுக்கென்று மறைந்தும் ஒளிவிட்டும் நட்சத்திரங்கள் எங்களுடன் கண்ணுமூச்சி விளையாடுவதுபோலத் தோன்றிற்று. வானம் முழுவதுமே வேகமாக ஓடிக் கொண்டிருப்பது போன்ற எண்ணம் உண்டாயிற்று.

என் நண்பன் தூங்கிக் கொண்டிருந்தான். அவனை எழுப்பி நாங்கள் கரடியை எப்படி வளைத்துக் கொண்டோம் என்பதை விவரித்தேன். காலையில் கரடி விரட்டுபவர்களைச் சேகரிக்கும்படி சொன்னேன். பிறகு உணவு உண்டுவிட்டுப் படுத்துத் தூங்கினோம்.

### வினாக்கள்

1. அடிபட்டுத் தப்பிச் சென்ற கரடி எப்படி நடந்துகொள்ளும்?
2. ருஷியாவின் காடுகளிற் பனி பெய்தலைப்பற்றி நீங்கள் என்ன அறிந்துகொண்டிருக்கிறீர்கள்?
3. வேட்டைக்குச் சென்றவர்கள் கண்ட கரடியின் அடிச்சுவடுகளைப் பற்றி யுரைக்க.
4. பனி படிந்த தரையில் செல்லுகையில் டமியானின் நண்பன் உற்ற இன்னல்கள் யாவை?
5. கரடி பதுங்கிக்கொண்டிருந்த இடத்தை எவ்வாறு கண்டுபிடித்தார்கள்?
6. 'ரொட்டி மிகவும் இனிப்பாக இருந்தது.'—இடம் சுட்டுக.
7. இரவு நேரத்தில் பனி தோய்ந்த காடு எவ்வாறு காட்சி யளித்தது?

## 24. கரடி வேட்டை—1

எனக்கு மிக்வும் களைப்பாக இருந்தது. என்னை எழுப்பாதிருந்தால் நான் உச்சி வேளைவரை நன்ருகத் தூங்கி இருப்பேன். நான் துள்ளி எழுந்தேன். நண்பன் உடை உடுத்திருந்தான். துப்பாக்கியை எடுத்து ஏதோ செய்துகொண்டிருந்தான்.

'டமியான் எங்கே?' என்று அ வ னி ட ம் கேட்டேன்.

'அவன் காட்டுக்குப் போய் வெகு நேரமாகி விட்டது. நீங்கள் பூட்ஸைத் தேய்த்து அடையாளம் செய்ததைக் கவனித்துக் கொண்டே அங்குச் சென்று திரும்பி வந்தான். மீண்டும் இப்பொழுது கரடி விரட்டுபவர்களைப் பார்த்து வரப் போனான்' என்றான் நண்பன்.

நான் முகம் கை கால்களைத் தூய்மை செய்து கொண்டேன். உடை அணிந்தேன். துப்பாக்கியில் குண்டுகளைக் கிட்டித்தேன். பிறகு நாங்கள் வண்டியில் ஏறிப் புறப்பட்டோம்.

பனி அதிகமாகப் பெய்துகொண்டிருந்தது. எங்கும் சந்தடியின்றி யிருந்தது. சூரியனைக் காண முடிய வில்லை. தலைக்கு மேலே பனி பலமாகத் திரையிட்டு மூடியிருந்தது. வெண்பனி அனைத்தையும் மூடி மறைத்துக்கொண்டிருந்தது.

இரண்டு மைல் தூரம் சாலை வழியே சென்றோம். காட்டிற்கு அருகில் வந்தபோது ஒரு பகுதியிலிருந்து குபுகுபு வென்று புகை மேலே எழும்பிக் கொண்டிருப் பதைக் கண்டோம். அங்குச் சென்றபோது குடியான ஆண் பெண்கள் பலர் கையில் தடியுடன் தயாராக இருந்தார்கள்.

நாங்கள் வண்டியிலிருந்து இறங்கி அவர்கள் அருகில் சென்றோம். ஆண்கள் உருளைக் கிழங்குகளை நெருப்பில் போட்டுச் சுட்ட வண்ணம் பெண்களுடன் சிரித்துப் பேசிக்கொண்டியிந்தார்கள்.

டமியானும் அங்கு இருந்தான். நாங்கள் சென்ற தும் அங்கிருந்தவர்கள் எழுந்து நின்றார்கள். அவர் களை நாங்கள் முதல் நாள் சென்ற பகுதியைச் சுற்றி நிறுத்த டமியான் அழைத்துப் போனான். ஆண்களும் பெண்களும் ஒரே வரிசையாகப் போனார்கள். அவர்

கள் சுமார் முப்பது பேர்கள் இருப்பார்கள். பனி அதிகமாகப் பெய்து கொண்டிருந்தது. அவர்களை இடுப்பிற்கு மேல்தான் எங்களால் பார்க்க முடிந்தது. அனைவரும் காட்டினுள் சென்றார்கள். நானும் என் நண்பனும் அவர்களைப் பின் தொடர்ந்து சென்றோம்.

அது பாதையாக இருந்தும் எங்களால் நடக்க முடியவில்லை. மிகவும் துன்பமாக விருந்தது. அதே சமயம், அங்குத் தவறி விழுவ தென்பது இயலாத காரியம். இரண்டு பனிச் சுவர்களின் மத்தியில் நடப்பதுபோல விருந்தது.

சுமார் அரை மைல் தூரம் சென்றிருப்போம். அச்சமயம் வேறு வழியாக டமியான் ஓடிவந்து கொண்டிருந்தான்.

தன்னுடன் வத்து சேர்ந்து கொள்ளும்படி சைகை காட்டினான். நாங்களும் அவன் அருகில் சென்றோம். எங்கே நிற்க வேண்டும் என்பதை எங்களுக்குச் சொன்னான் டமியான். நான் எனக்குக் குறிப்பிட்ட இடத்தில் நின்றேன். ஒரு முறை என்னைச் சுற்றிப் பார்வையைச் செலுத்தினேன்.

எனது இடப் பக்கம் உயர்ந்த மரங்கள் வரிசையாக இருந்தன. அவற்றிற்குப் பின்புறம் வெகுதூரம் வரை நன்றாகப் பார்க்க முடித்தது. சிறிது தூ ர த் தி ல் கரடியை விரட்டும் ஒருவனைக் கண்டேன். என் எதிரே சிறிய மரங்கள் இருந்தன. அவற்றின் கிளைகள் பனியைச் சுமக்க முடியாமல் வளைந்து தாழ்ந்திருந்தன. என் எதிரே யிருந்த மரக் கூட்டம் வரை ஒரு பாதை சென்றது. பாதையில் பனி படிந்திருந்தது. எனக்கு வலப் புறத்திலும் மரங்கள் அடர்த்தியாக இருந்தன. கடைசியில் ஒரு சிறு மைதானம் இருந்தது. அங்குத் தான் என் நண்பனை டமியான் நிறுத்திவைத்துக் கொண்டிருந்தான்.

என் துப்பாக்கிகளைச் சோதனை செய்து கொண்டேன். எங்கு நின்று கொண்டால் நலமாக இருக்கும்

என்பதையும் ஆராய்ந்தேன். எனக்குப் பின்னுல் சிறிது தூரத்தில் உயரமாக வளர்ந்த ஒரு மரம் இருந்தது.

'அந்த மரத்தின் அருகில்தான் நிற்க வேண்டும். அப்போதுதான் மற்ருெரு துப்பாக்கியை மரத்தின் மீது சாத்தி வைக்கலாம்' என்று எண்ணி மரத்தை நோக்கி நடந்தேன். நடந்தபோது முழங்கால் வரை பனியில் அமிழ்ந்தது. காலே எடுத்தபோது பெரிய பள்ளமே ஏற்பட்டது. மரத்தருகில் சென்றதும் நான் பனியைக் காலால் தள்ளிச் சமப்படுத்தினேன். ஒரு துப்பாக்கியைக் கையில் வைத்துக் கொண்டேன். மற்றதை எடுக்கத் தயாராக மரத்தில் சாத்திவைத்தேன். குத்து வாளேயும் எடுத்துப் பரிசோதித்தேன். சந்தர்ப் பம் ஏற்பட்டால் பயன்படுமா என்றும் பார்த்தேன்.

நான் எல்லாவற்றையும் செய்து முடிக்கும் சமயம் காட்டில் டமியான் உரக்கக் கத்துவது கேட்டது. 'கரடி வெளியே வந்துவிட்டது; வந்துவிட்டது' என்று கூக் குரலிட்டான்.

அவன் குரலேக் கேட்டதும் வேட்டைக்காரர்கள் நெருங்கி நின்று பல தரப்பட்ட குரல்களில் 'வந்து விட்டது, வந்துவிட்டது, ஊ ஊ ஊ' என்றனர்.

'ஏய் ஏய்' என்று பெண்கள் கத்தினுர்கள்.

நாங்கள் நின்றிருந்த வட்டத்தினுள் கரடி யிருந் தது. டமியான் அதைத் துரத்திக் கொண்டிருக்கும் போது மற்றவர்கள் உரக்கக் கத்தினுர்கள். நானும் எனது நண்பனும் கரடி எங்கள் அருகில் வரட்டும் என்று அசையாமல் நின்றிருந்தோம். அங்கு ஏற்பட்ட கூக்குரலேக் கேட்ட நான் உற்றுக் கவனித்துக் கொண் டிருந்தேன். என் மனம் படபடத்தது. என் உடல் நடுங்கிற்று. நான் நடுங்கிய கைகளால் துப்பாக்கியைப் பற்றிக்கொண்டிருந்தேன். 'ஹூம். இதோ, இப் பொழுது அது வந்துவிடும். திடீரென்று வந்துவிடும்.

உடனே நான் குறி பார்ப்பேன். சுடுவேன். அது கீழே விழுந்துவிடும்' என்று எண்ணினேன்.

திடீரென்று இடப் பக்கம் சிறிது தூரத்தில் பனித் தரையில் ஏதோ விழுந்த ஓசை கேட்டது. உயர்ந்து வளர்ந்த மரங்களின் இடை வெளியில் உற்றுக் கவனித்தேன். சுமார் ஐம்பது அடி தூரத்தில் மரத்தினடியில் பெரிய கருப்பு உருவம் ஒன்று இருப்பது தெரிந்தது. நான் துப்பாக்கியை எடுத்துக் குறி வைத்தேன். 'இன்னும் அருகில் வாராதா?' என்று சிந்தித்துக்கொண்டிருந்தேன்.

கரடி அருகில் வரும் என்று காத்திருக்கும் சமயம் அது காதைத் திருப்பிவிட்டுப் போகத் தொடங்கிற்று. அப்போது அந்தப் பிராணியை ஓரளவு பார்க்க முடிந்தது. உண்மையிலேயே அது பெரிய மிருகம் தான். எனக்கிருந்த ஆத்திரத்தில் சுட்டேன். துப்பாக்கியிலிருந்து வெளிப்பட்ட குண்டு ஏதோ ஒன்றில் பாய்ந்த ஓசை கேட்டது. புகை நடுவே மரங்களுக்குப் பின்னுல் மறைந்து கரடி செல்வது தெரிந்தது.

அடடா, நல்ல சந்தர்ப்பத்தைக் கைவிட்டேனே! இனி அது என்பக்கம் வராது. ஒன்று என் நண்பன் இதைச் சுடுவான். இல்லாவிட்டால் கரடி விரட்டுபவர்கள் பக்கம் ஓடிவிடும். ஒருவேளை யார் கையிலும் அகப்படாமல் தப்பித்தும் விடலாம். என்ன ஆனுலும் இனி எனக்குச் சந்தர்ப்பம் இல்லை,' என்று எண்ணினேன்.

நான் என் துப்பாக்கியில் குண்டு கிட்டித்தேன். உன்னிப்பாகக் கவனித்தவாறு நின்றிருந்தேன். கரடி விரட்டுபவர்கள் கூக்குரலிட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனுல் எனக்கு வலப் பக்கம் நண்பன் நின்றிருக்குமிடத்தில் ஒரு பெண்மணி 'இதோ இருக்கிறது, இதோ இருக்கிறது. 'ஏய் ஏய் ஹு' என்று கத்தினுர்கள்.

கூக்குரலிட்டதிலிருந்து அவள் கரடியைப் பார்த்து விட்டாள் என்று தோன்றிற்று. என் பக்கமாகக்

கரடி வரும் என்ற நம்பிக்கை யில்லாமல் போயிற்று. நான் என் நண்பனேயே பார்த்துக் கொண்டிருந்தேன். திடீரென்று டமியான் காலில் பூட்ஸில்லாமல் கையில் தடியுடன் என் நண்பன் இருக்கும் பக்கமாக ஓடினுன். கையிலிருந்த தடியால் அவன் எதையோ சுட்டிக் காட்டினுன். உடனே என் நண்பன் துப்பாக்கியைக் கையிலெடுத்தான். குறிபார்த்துச் சுட்டான்.

'ஹூம், அவன் கரடியைக் கொன்றுவிட்டான்' என்று எண்ணினேன்.

ஆனுல் கொல்லப்பட்ட கரடியின் பக்கமாக என் நண்பன் போக வில்லே. இதனுல், குறி தவறிவிட்டிருக்க லாம் அல்லது அடி பலமாகப்பட்டிருக்காது என்று கருதினேன்.

'அந்தக் கரடி ஓடிப் போய்விடும். மீண்டும் என் பக்கம் வாராது, ஆமாம்,' என்று எண்ணினேன். அஃது என்ன? என்னே நோக்கிப் புயல் காற்றைப் போல் மூச்சு விட்டுக் கொண்டு ஏதோ வருவதைப் பார்த்தேன். என் அருகில் பனித் திவலேகள் காற்றில் பறப்பதைக் கண்டேன்; என் எதிர்ப் புறத்தில் உற்றுப் பார்த்தேன். பீதி யடைந்த கரடி என்னே நோக்கி ஓடி வந்து கொண்டிருந்தது. அஃது எனக்கு வெகு அருகில் வந்துவிட்டது. அப்பொழுதுதான் அதை நன்ருகப் பார்க்க முடிந்தது. கறுத்த மார்பு, பெருத்த தலே, சிவப்புக் கரை—எல்லாவற்றையும் கண்டேன். அது நாலாப் பக்கங்களிலும் பனியை வாரி இறைத்துக் கொண்டு வெறி பிடித்தது போல என்னே நோக்கி வந்தது. அதன் பார்வையில் இருந்த நிலேயில் என்னேக் கவனிக்க வில்லே என்பதை உணர்ந்தேன். நாங்கள் செய்த ஓசையினுல் அது பயந்து நான் இருப்பதையும் கவனிக்காமல் ஓடி வந்திருக்கிறது என்பது தெளி வாயிற்று. என் துப்பாக்கியை எடுத்துக் குறி பார்த்துச் சுட்டேன். குறி தவறிப்போயிற்று என்பதை உணர்ந் தேன். துப்பாக்கியிலிருந்து வெளிப்பட்ட குண்டு

கரடியை நோக்கிச் சென்றது. அப்பொழுதும் அது லட்சியம் செய்யாமல் என்னை நோக்கிப் பாய்ந்து வந்தது. நான் துப்பாக்கியைக் கீழே தாழ்த்திச் சுட்டேன். கிட்டத்தட்ட என் துப்பாக்கி அதன் தலையைத் தொட்டுக்கொண்டிருந்தது எனலாம். அடி பட்டது என்னவோ உண்மை ஆனால் கொல்லப் பட வில்லை.

கரடி தலையைத் தூக்கிற்று; காதுகளை அசைத்தது; பல்லைக் காட்டிக்கொண்டு என்னை நோக்கி வந்தது.

நான் மற்றொரு துப்பாக்கியை எடுக்கக் கையை நீட்டினேன். அதைத் தொடும் சமயம் கரடி என்மீது பாய்ந்தது. என்னைக் கீழே தள்ளிவிட்டுத் தாண்டிச் சென்றது.

'கடவுள் காப்பாற்றினார்; என்னைத் தாண்டிப் போய் விட்டது' என்று எண்ணினேன்.

நான் எழுந்திருக்க முயன்றேன். ஆனால் என்னை எழுந்திருக்க விடாமல் ஏதோ அழுத்திப் பிடித்துக் கொண்டிருந்தது. என்னைத் தாண்டிச் சென்ற கரடி பிறகு என்மீதே விழுந்திருக்கிறது. அது தன் முழுப் பலத்தையும் போட்டு என்னை அழுத்திற்று. அதே சமயம் என் முகத்தருகே கதகதப்பாக இருந்தது. கரடி என் முகத்தைக் கடிக்க முயல்கிறது என்பதை உணர்ந்தேன். என் மூக்கை அது நக்கிக்கொண் டிருந்தது. வாயின் சூட்டையும், இரத்த நாற்றத்தையும் உணர்ந்தேன். கரடி என்னை எழுந்திருக்கவிடாமல் என் இரு புயங்களையும் அழுத்திப் பிடித்துக்கொண்டிருந்தது. கரடியின் வாயிலிருந்து தப்ப என் தலையை மார்புப் பக்கமாகச் சாய்த்துக்கொள்வது ஒன்றுதான் என்னால் செய்யக் கூடியது. மூக்கையும் கண்களையும் காப்பாற்றிக் கொள்ள முயன்றேன். அச்சமயம் கரடி என் நெற்றி யைக் கவ்விற்று. கண்களுக்குக் கீழ்ப் பாகம் முடிய அதன் வாயில் அகப்பட்டுக்கொண்டது. என் முகத்தைக் கத்தியால் சுரண்டுவதுபோலத் தோன்றிற்று. நான்

என் முகத்தைப் பாதுகாக்க முயன்றேன். கரடியும் முகத்தை வாயினுள் செலுத்த முயன்றது. நாயைப் போல் அது உறுமிற்று. என் முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டுவிட்டேன். ஆனால் அது விட வில்லை. மீண்டும் வாயால் கவ்விக்கொண்டது.

'இப்பொழுது என் முடிவு நெருங்கிக்கொண்டு இருக்கிறது' என்று எண்ணினேன்.

அச்சமயம் என்மீதிருந்த பாரம் அகற்றப்பட்டது போல உணர்ந்தேன். நான் என்மேலே பார்த்தபோது கரடி இல்லை. அது பாய்ந்து ஓடிப்போய்விட்டது.

கரடி என்னைத் தாக்கிக் கீழே தள்ளியதை என் நண்பனும் டமியானும் பார்த்துவிட்டார்கள். அவர்கள் கவலையுடன் என்னைக் காப்பாற்ற முயன்றனர். என் நண்பன் ஆத்திரக்காரன். அவன் வேகமாக ஓடிவந்த சமயம் பள்ளமாக இருந்த பனியில் விழுந்து விட்டான். அவன் பள்ளத்தில் இருந்து வெளிவர முயன்று கொண்டிருந்த சமயம் கரடி என்னைக் கடிக்கத் தொடங்கி இருந்தது. ஆனால் டமியான் என் அருகில் வந்து விட்டான். அவன் கையில் துப்பாக்கி யில்லை. கையிலிருந்த கம்பை உயர்த்திக் கத்திக்கொண்டே வந்தான். 'எசமானைக் கடிக்கிறது. எசமானைக் கடிக்கிறது' என்று டமியான் கத்தினான். அத்துடன் கரடியை நோக்கியும் அவன் வாயில் வந்தபடி பேசினான்! 'டேய் முட்டாள், என்ன காரியம் செய்கிறாய்? விட்டுவிடு, விட்டுவிடு,' என்றான்.

அவன் கட்டளையை மேற்கொண்டு கரடியும் என்னை விட்டு ஓடிற்று. நான் எழுந்தபோது ஒரு ஆட்டை வெட்டினால் வெளிப்படும் அளவு ரத்தம் பனித்தரையில் தேங்கிக் கிடந்தது. என் கண்களைச் சுற்றி சதை கிழிந்து தொங்கிக்கொண்டிருந்தது. நான் உணர்ச்சி வசமாகியிருந்ததால் வலியே எனக்குத் தெரிய வில்லை.

அச்சமயம் என் நண்பனும் பள்ளத்திலிருந்து எழுந்து மேலே வந்தான். மற்றவர்களும் வந்து சேர்ந்

தார்கள். என் காயங்களைப் பார்த்தார்கள். அவற்றின் மீது பனியை எடுத்து அப்பினார்கள். ஆனால் நான் எனது காயங்களை மறந்து 'கரடி எங்கே? எந்தப் பக்கமாகப் போயிற்று?' என்று கேட்டேன்.

திடீரென்று ஒரு குரல், 'இதோ இருக்கிறது, இதோ இருக்கிறது' என்றது.

மீண்டும் எங்களை நோக்கிக் கரடி பாய்ந்து வருவதைக் கண்டோம். நாங்கள் எங்கள் துப்பாக்கியை எடுத்தோம். சுடுவதற்குள் கரடி பாய்ந்து சென்றது. அஃது ஆத்திரமடைந்திருந்தது. என்னைப் பற்றிக் கொள்ளத் துடித்தது. ஆனால் அங்குப் பலர் இருப்பதைக் கண்டதும் அது பயந்துவிட்டது. கரடி போன வழியே பார்த்தோம். அதன் தலையில் காயம்பட்டு ரத்தம் பெருகிக்கொண்டிருந்தது. நாங்கள் அதைப் பின் தொடரக் கருதினோம். ஆனால் என் காயங்கள் அதிக வேதனையை அளித்தன; அதனால் வைத்தியரைத் தேடி நகரத்திற்குச் சென்றோம்.

வைத்தியர் என் காயங்களுக்குத் தையல் போட்டார். அவையும் ஆறத் தொடங்கின.

ஒரு மாதத்திற்குப் பிறகு மீண்டும் வேட்டைக்குச் சென்றோம். அதே கரடி வந்தது. நாங்கள் வளைத்த வட்டத்தின் உள்ளேயே சுற்றிச் சுற்றி வந்தது. பயங்கரமாக உறுமிற்று; என்றால் அதைக் கொல்ல முடியவில்லை.

டமியான் அதைக் கொன்றான். கரடியின் முகவாய்க் கட்டை உடைந்துவிட்டது. அதன் ஒரு பல்லை என் துப்பாக்கிக் குண்டு சிதைத்தது. அது பெரிய பிராணி. அதன் மேல்தோல் மிகவும் நேர்த்தியானது.

கரடியின் தோலினுள் பஞ்சையும் வைக்கோலையும் அடைத்தேன்; இப்பொழுது அது என் அறையில் இருக்கிறது; என் நெற்றிக் காயம் ஆறிவிட்டது; காயத்தின் வடுக்கள் அவ்வளவு தெளிவாகத் தெரியவில்லை.

# அருஞ்சொல் அகராதி

## 1

அ

அடவி—காடு
அணங்கு—பெண்
அணித்து—அண்மையி லுள்ளது
அந்தாதி—முன் செய்யுள் இறுதியும் பின் செய்யுள் முதலும் ஒன்று படப் பாடுவது
அபயன்—சூரன், சோழன்
அமர்—போர்
அமிழ்தம்—அமுதம்
அயிர்த்து—சந்தேகித்து, ஐயுற்று
அருகுதல்—குறைதல்
ஆக்கம்—செல்வம்
ஆக்கை—யாக்கை, உடம்பு

இ

இகல்—போர்
இடர்ப்படுதல்—துன்புறுதல்
ஈழம்—இலங்கை
ஈறு—முடிவு

உ

உலைந்த—வருந்திய
உவத்தல்—மகிழ்தல்
உவந்த—மகிழ்ந்த
உழத்தல்—வருந்துதல்
உழுதல்—கிண்டுதல்
உறுபசி—மிகுபசி
ஊர்தி—வாகனம்
ஊறு—பரிசம்

எ

எழில்—அழகு
ஏதிலார்—அன்னியர்
ஏனை—மற்றது

ஒ

ஒழுக்கு—ஒழுக்கம்
ஒல்கா—ஒல்காத, தளராத
ஓவா—ஓவாத, ஒழியாத

க

கங்குல்—இடை யாமம்
கடப்பாடு—கடமை
கடாவுதல்—வினுதல்
கடை—வாயில்
கமலம்—தாமரை
கரத்தல்—மறைத்தல்
கலுழன்—கருடன்
கவறு—சூதாடுகருவி, சூது
களம்—போர்க்களம்
களிறு—ஆண் யானை
கன்னிப்போர்—முதற்போர்
காஞ்சனம்—பொன்
காண்டல்—காணுதல், பார்த்தல்
கார்—மேகம்
காலன்—இயமன்
கிழி—கிழிபட்ட துகில்
குன்றம்—சிறு மலை
கூர்தல்—மிகுதல்
கேசரி—சிங்கம்
கொழுநன்—கணவன்
கொற்றம்—வெற்றி
கோடு—யானை பன்றிகளின் தந்தம்
கோடுதல்—வளைதல்

ச

சங்கரன்—சிவன்
சயப்பாவை—வீர மகள், வெற்றித தலைவி
சான்று—சாட்சி
சீற்றம்—பெருஞ்சினம்
செறிதல்—நெருங்குதல்
சேய்த்து—சேய்மையில் உள்ளது
சேறல்—செல்லுகை

ஞ

ஞாயிறு—சூரியன்

த

தளி—கோயில்
திரு—இலக்குமி, செல்வம்
திருமந்திரவோலை—அரசு அலுவலன்
திறை—கப்பம்
தீனர்—வறியார், ஏழைகள்
துணங்கை—ஒரு கூத்து வகை
துயில்—தூக்கம்
தையல்—பெண்
தோடு—பூவிதழ்

ந

நையல்—மெலிதல்

ப

பங்கயம்—தாமரை
பரி—குதிரை
பன்னிரிய—பன்ன அரிய—சொல்ல முடியாத
பாயிரம்—முகவுரை
பாலிக்குமோ—கிடைக்குமோ
பாவை—பெண்
பிரபந்தம்—நூல்
பிராட்டி—தலைவி
பிலம்—பாதாளம்
பிழம்பு—திரட்சி
பீடு—பெருமை
புந்தி—புத்தி, அறிவு
புரைசை — புரசை — புரோசை — யானைக் கழுத்திடு கயிறு
புலன்—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐந்தும்
புலையன்—இழிஞன்
புனல்—நீர், ஆறு
பெம்மான்—கடவுள்
பெற்றி—தன்மை
பொதி—தொகுதி, மூட்டை
பொருப்பு—மலை
பொலிதல்—விளங்குதல்

ம

மடந்தை—பெண்
மடைப்பள்ளி—கோயில் முதலியவற்றின் அடுக்களை
மதமலை—யாலை
மறை—வேதம்
மா—விலங்கு
மாக்கள்—பகுத்தறிவிலார்
மானவன்—மனிதன், பெருமையுடையோன்
மானும்—ஒக்கும்
முழை—குகை

வ

வயினம்—பறவை
வளி—காற்று
வாசவன்—இந்திரன்
வாரணம்—யானை
வான்—ஆகாயம்
விசும்பு—வானம்
வியாக்கியானம்—பேருரை
விலங்கு—மிருகம்
விழுப்பம்—சிறப்பு
விழுமம்—சிறப்பு
விளக்கம்—விளக்கு
வெம்மை—வெப்பு, கொடுமை
வெள்ளை மலை—இமய மலை
வேட்டல்—விரும்புதல்
வேய்ங்குழல்—புல்லாங்குழல்
வேனல்—வேனில்

அ

அடல்–வலிமை, கொல்லுதல்
அடல் ஏறு–வலிய சிங்கம்
அணங்கு–பெண்
அமர்–போர்
அமிழ்தம்–அமுதம்
அலகு–துடைப்பம்
அழல்–நெருப்பு
அழனிறக் கடவுள்–சிவன்
ஆக்கம்–உயர்வு, செல்வம்
ஆசியம்–சிரிப்பு, நகைச் சுவை
ஆற்றுப்படுத்தல்–வழிப்படுத்தல், வழியனுப்புதல்
ஆற்றுப்படை–ஆற்றுப்படுத்துவதாக அமைந்த நூல் வகை

இ

இரீஇ–இருத்தி
இவுளி–குதிரை
இளிவரவு–இழிவுச் சுவை
இளிவு–இகழ்ச்சி
இறுமாத்தல்–சருவமடைதல்
இறுமாப்பு–கருவம், செருக்கு
இறைமை–தெய்வத் தன்மை

உ

உடற்கரித்தல்–தோள் தட்டுதல்
உருவெளி–போலித் தோற்றம்
உழத்தல்–வருந்துதல்
உள்ளல்–நினைத்தல்
உறுதுணை–மிக்க துணை
உன்னுதல்–ஆழ்ந்து நினைத்தல்
ஊறு–இடையூறு

எ

எஃகம்–வேல்
எவ்வயின்–எவ்விடம், எப்பக்கம்

ஐ

ஐயாட்டை–ஐந்து ஆண்டுகளையுடைய

ஒ

ஒசித்தல்–முறித்தல், அசைத்தல்
ஒருப்படுத்தல்–சம்மதித்தல்
ஒரோவழி–சிறுபான்மை
ஒவ்வாதார்–ஒத்திராதார், பொருந்தாதார்

க

கரவு–வஞ்சனை, களவு
கலுழன்–கருடன்
கவறு–சூதாடு கருவி, சூது
கவற்சி–வருத்தம்
கவின்–அழகு
களம்–போர்க்களம்
களருளம்–பயனற்ற வுள்ளம்
களர்–உவர் நிலம், சேற்று நிலம்
கறவை–பாற் பசு
கன்மா–ஒரு மர வகை
கன்னி–புதுமை, அழிவின்மை, அழகு
காரணிகன்–நடுவன், மத்தியத்தன்
காலன்–இமயன்
காலுதல்–பொழிதல்
கிள்ளி–சோழர் சிறப்புப் பெயர்
குறிஞ்சிக் காடு–மலைக்காடு
குன்றம்–குன்று, சிறு மலை
கூவை–கூட்டம்
கை புனைதல்–அலங்கரித்தல்
கோடு–யானை பன்றிகளின் தந்தம்
கோட்டம்–கோயில்
கோயில்–அரண்மனை
கோள்–கிரகம்

ச

சண்டமாருதம்–பெருங்காற்று
சருகு–உலர்ந்த இலை
சாந்தம்–சந்தனம்
சிந்தூரம்–திலகம், செம்பொடி யானை
சுவல்–குதிரை
செவ்வி–ஏற்ற சமயம், அழகு
சேறல்–செல்லுதல்

ஞ

ஞாயிறு–சூரியன்
ஞாலம்–பூமி
ஞான்று–நாள்

த

தகைத்தல்–தடுத்தல்
தண் பணை–தண்மையான வயல், மருத நிலம்
தலைக்கடை–முதல் வாசல்
தலைப்படுதல்–எதிர்ப்படுதல்
தானவர்–அசுரர்
திவலை–சிதறும் நீர்த்துளி
துனைவு–விரைவு
தெரித்தல்–விளக்குதல்
தெருண்டு–தெளிவுற்று
தேவர் குலம்–கோயில்
தோடு–பூவிதழ்

ந

நுண்மை–நுட்பம்

ப

பணை–மருத நிலம், வயல்
பரவை–பரப்பு, கடல்
பருமை–புலன்களுக்குப் பொருளாவது
பன்னுதல்–சொல்லுதல்
பிழம்பு–திரட்சி
பீடம்–இருக்கை
புரவி–குதிரை
புறக் காழ்–பனை முதலியவற்றின் வெளி வயிரம்
புறந்தருதல்–பாதுகாத்தல்
பேடை–பெண் பறவை
பேதுறுதல்–மயங்குதல், மனங் குழம்புதல்
பேதை–பெண்
போலி–பொய், 'போல' இருப்பது
போழ்தல்–பிளத்தல், ஊடுருவுதல்

ம

மத்தகம்–யானையின் தலை நெற்றி
மந்தி–பெண் குரங்கு
மருப்பு–யானைத் தந்தம்
மறம்–வீரம், பாவம்
மாதொரு பாகன்–சிவன்
மாருதி–அனுமன்
மிடுக்கு–வலிமை
மிலேச்சன்–அறிவீனன்
முருகு–இளமை, அழகு
மூங்கை–ஊமை
மெய்ப்பாடு–உள்ள நிகழ்ச்சி

ய

யாக்கை–உடல்

வ

வட்டு–சூதாடு கருவி
வயின்–பக்கம், இடம்
வரங்கிடத்தல்–வரம் வேண்டி படுத்துக் கிடத்தல்
வரை–மலை, எல்லை
வற்கடம்–வறட்சி, பஞ்சம்
வன்க(ண்)ணவர்–போர்வீரர்
வன்கால்–கொடிய காற்று
வாரணம்–யானை
வாளாமை–மௌனம்
வானவர்–தேவர்
விழுப்புண்–போரில் முகத்தினும் மார்பினும் படும் காயம்
வெகுளி–கோபம்
வேழம்–யானை



